# புண்ணியம் தரும் புனிதப் பதிகள்

ஆக்கியோன்,

எம். இராஜகோபாலன்
M. A. (வரலாறு), M. A. (தமிழ்),
Certif. in Epigraphy, C.A.I.I.B. (I), C. J. M. C.



ஹரிஓம் நமோ நாராயணாய :

This book in Published with the Financial Assistance of Tirumala Tirupathi Devasthanams Under their Scheme, "Aid to Publish Religious Books"

Title of the Book PUNNIAM THARUM PUNITHA PATHIGAL

Author and Publishe M. Rajagopalan
A4, (Anand) MICO Colony
Besant Nagar
Madras-600 090
Phone—4911556 (Res)





| | | |
|---|---|---|
| Language | — | Tamil |
| Edition | — | First |
| Date of Publication | — | July 1993 |
| Copy Right | — | Author |
| Paper Used | — | Seshasayee |
| Size of the Book | — | Double Crown |
| Printing Types | — | 10 Point |
| Number of Pages | — | 196 (176 + 20 Pages Art paper) |
| Number of Copies | — | 1200 |
| Price | — | Rs. 25 (Twenty Five only) |
| Printed at | — | Sri Gururaja Press, Madras-5 |
| Binding | — | Paper Back |
| Artist (Cover Page) | — | P. N. Anandan |

Subject : A Collection of Essays on 15 Temples Located in Tamilnadu.

# பொருளடக்கம்

## புகைப் படங்களின் அட்டவணை

### பக்கம்—9

1. தேவதானம்—நச்சாடைத் தவிர்த்தருளிய நாயக திருக்கோவில்—முன்புறத் தோற்றமும், திருக்குள
2. தேவதானம்—நச்சாடைத் தவிர்த்தருளிய நாயக திருக்கோயில்—திருமலைக் கொழுந்தீசர் சந்நிதி
3. திரிமூர்த்திமஙல—அமணலிங்கேஸ்வரர் ஆலயம்
4. சிவசைலம்—சிவசைலப்பர் ஆலயம். முன்தோற்றப்

### பக்கம்—10

திருக்கண்ணமங்கை பக்தவத்ஸலப் பெருமாள் தி கோயில்-சிற்பங்கள்

1. வைகுண்டநாதர்
2. பூவராகர்
3. காளியமர்த்தனர்

### பக்கம்—11

திருக்கண்ணமங்கை—பக்தவத்ஸலப் பெருமாள் தி கோயில் சிற்பங்கள்

1. மகாவிஷ்ணு
2. வேணுகோபாலன்
3. கஜேந்திரவரதர் (கஜேந்திரனுக்கு அருள் புரித

### பக்கம்—12

திருக்கண்ணமங்கை—பக்தவத்ஸலப் பெருமாள் திரு கோயில் சிற்பங்கள்

1. நரசிம்மர் இரணியனை வதைத்தல்
2. லக்ஷ்மி நரசிம்மர்

### பக்கம்—13

திருக்கண்ணமங்கை—பக்தவத்ஸலப் பெருமாள் திரு கோயில்-சிற்பங்கள். திருமாலின் திருக்கோலங்கள்.

# புகைப் படங்களின் அட்டவணை (தொடர்ச்சி)

## பக்கம்—14

1. திருக்கண்ணமங்கை—பக்தவத்ஸலப் பெருமாள் திருக்கோயில்—மகாவிஷ்ணு
2. திரிமூர்த்திமலை அமணலிங்கேஸ்வரர் திருக்கோயில் சிற்பம்—நரசிம்மர் இரணியனை வதைத்தல்.
3. திரிமூர்த்திமலை அமணலிங்கேஸ்வரர் திருக்கோயில் சிற்பம்—ஊர்த்துவத் தாண்டவர்

## பக்கம் — 15

1. உத்தமர் கோயில். சிற்பம்—தட்சிணாமூர்த்தி
2. எலவானசூர்—அர்த்தநாரீஸ்வரர் ஆலயம். சிற்பம்—அரனாரின் உருவம்
3. உத்தமர் கோயில். சிற்பம்—பிட்சாடனர்.

## பக்கம்—16

எலவானசூர்-அர்த்தநாரீஸ்வரர் ஆலயம். சிற்பங்கள்.

1. விஷ்ணு துர்க்கை
2. தட்சிணாமூர்த்தி

## பக்கம் — 17

எலவானசூர் அர்த்தநாரீஸ்வரர் ஆலயம். சிற்பங்கள்.

1. கணபதி
2. வல்லப கணபதி

## பக்கம்—18

1. திருமழிசை—ஜெகந்நாதப் பெருமாள் ஆலயம். சிற்பம்—மகாவிஷ்ணு
2. திருமழிசை—ஜெகந்நாதப் பெருமாள் ஆலயம். சிற்பம்—விநாயகர்
3. எலவானசூர்—அர்த்தநாரீஸ்வரர் ஆலயம். சிற்பம்—உஜ்ஜிஷ்ட கணபதி

## புகைப் படங்களின் அட்டவணை (தொடர்ச்சி)

### பக்கம்—19

தருமபுரி—பரவாசுதேவர் ஆலயம்-மூலவர்
1. ஸ்ரீ தேவி
2. ஸ்ரீதேவியுடன் பரவாசுதேவர்

### பக்கம்—20

பரமக்குடி—சந்திரசேகரஸ்வாமி திருக்கோயில்
1. திருமகள் (லக்ஷ்மி)
2. கலைமகள் (சரஸ்வதி)

### பக்கம்—21

1. பரமக்குடி சௌந்தரராஜப் பெருமாள் ஆலயம். சௌந்தரராஜப் பெருமாள்—(உற்சவர்)
2. பள்ளிகொண்டா—உத்தர ரங்கநாதஸ்வாமி ஆலயம் அரங்கநாயகித் தாயார் (மூலவர்)

### பக்கம்—22

பள்ளிகொண்டா—உத்தர ரங்கநாதஸ்வாமி ஆலயம்
1. நர்த்தன கிருஷ்ணர், (மூலவரும், உற்சவரும்,)
2. லக்ஷ்மணர், இராமர், சீதை (மூலவர்களும், உற்சவர்களும்)

### பக்கம்—23

1. குச்சனூர்—சனீஸ்வரர் திருக்கோயில். சனீஸ்வர பகவான்—மூலவரும், உற்சவரும்,
2. பாண்டிச்சேரி—மணக்குள விநாயகர் ஆலயம். மணக்குள விநாயகர் (உற்சவர்)

### பக்கம்—24

சென்னை மல்லீஸ்வரர் திருக்கோயில்
1. பிரமராம்பாள் (மூலவர்)
2. மல்லீஸ்வரர் (மூலவர்)

# புகைப்படங்களின் அட்டவணை (தொடர்ச்சி)

# ஆசிரியரைப் பற்றி

## எம். இராஜகோபாலன்

15-2-1953 அன்று மன்னார்குடியில் பிறந்தார். இவரது தந்தையான திரு. எஸ். மணி, (இ. அ. ப. (ஓய்வு) தமிழக அரசின் உயர் அதிகாரியாகப் பணியாற்றியவர். சிறு வயது முதல் வரலாறு, கலை, இந்துசமயம் ஆகியவற்றில் இவருக்குப் பெருத்த ஈடுபாடு உண்டு. சென்னை இலயோலா கல்லூரியில் வரலாற்றில் இளங்கலைப் பட்டமும் (1972), மாநிலக் கல்லூரியில் முதுகலைப் பட்டமும் (1974) பெற்றார். பின்னர் சென்னைப் பல்கலைக் கழகத்தின் மூலம் தமிழில் முதுகலைப் பட்டமும், மதுரை காமராஜர் பல்கலைக் கழகத்தின் மூலம் இதழியலில் சான்றிதழும் பெற்றார், இந்தியன் வங்கியில் பணியாற்றும் இவர் பழமையான பல திருக்கோயில்களுக்குச் சென்று தகவல்களைத் திரட்டிக் கட்டுரைகள் வடிவில் வெளியிட்டு வருகிறார். இந்து மதம் அழைக்கிறது. தர்மச் சுடர், ஞானவழி, ஆண்டவன் அருள், புவனேச்வரி விஜயம், ஐகத்குரு, மஞ்சரி, கலைமகள், ஞானபூமி, அம்மன் தரிசனம், கோபுர தரிசனம் போன்ற இதழ்களில் இவரது கட்டுரைகள் வெளி வந்துள்ளன. திருமலை-திருப்பதி தேவஸ்தான வெளியீடான சப்தகிரியில் தமிழிலும் ஆங்கிலத்திலும் தொடர்ந்து கட்டுரைகள் எழுதி வருகிறார்.

சென்னை திருவான்மியூர் மருந்தீஸ்வரர் திருக்கோயில். தலவரலாற்றைத் தமிழிலும், ஆங்கிலத்திலும் நூல் வடிவில் எழுதி வெளியிட்டுள்ளார். அனைத்து மாவட்டங்களிலும் உள்ள அதிக பிரபல்யம் அடையாத கோயில்களைப் பற்றிய கட்டுரைகளின் தொகுப்பாக அருள் மணம் திகழும் ஆலயங்கள், ஆன்மிகம் தழைக்கும் அரும் பெரும் ஆலயங்கள், இறையருள் நல்கும் 21 திருத்தலங்கள் ஆகிய மூன்று நூல்களை வெளியிட்டுள்ளார். 15 வைணவத் தலங்களின் மாண்பை விளக்கும் நூல் ஒன்று ஆங்கிலத்தில் வெளிவர உள்ளது. தமிழகத்தில் அந்தந்த வட்டாரத்திற்கு வெளியே அறியப்படாமல் கிடக்கும் திருத்தலங்களின் பெருமையை வெளியுலகுக்கு அறிமுகப் படுத்துவது இவரது குறிக்கோள்.

# 1. உத்தமர் கோயில்

(திருச்சி மாவட்டம்)

''கதிபெறு வான்முன் கதம்பமுனிவன் கதம்பத்தரு
விதியப் பெயர் புனலாடி யுத்தியோக விமானந்தனிற்
துதி செய்யொரு வரந்தேவியொடு கிழக் கிற்றுயிலும்
நிதியக் கரம்பையி லுத்தம வென்பவர் நின்மலரே''

(திருநின்றவூர் திருமலை அத்தங்கி தாதாரியர் தொண்டன இயற்றிய '108 திருப்பதி அந்ததாதி')

முற்காலத்தில் ஜனகராஜர் அரச பதவியை மந்திரிகளிடம் ஒப்படைத்துவிட்டுத் தீர்த்த யாத்திரை புரியச் சென்றார். வழியில் கதம்பவனம் என்ற பகுதியை அடைந்தார். தனது ஆசிரியரான கௌதமர் அருளியவாறு அப்பதியில் காசிபர் முதலிய முனிவர்களை ரித்விக்காகக் கொண்டு யாகம் புரியத் துவங்கினார். ஒரு நாய் அந்த யாகத்தில் புகுந்து அசுத்தம் செய்துவிட்டுச் சென்றது. இதனைக் கவனிக்காத ரிஷிகள் யாகத்தைத் தொடர்ந்தனர். இதனால் முனிவர்கள் மந்திரங்களை மறந்து யாகத்திற்கே தடையேற்பட்டது. அனைவரும் இறைவனைத் துதித்தனர். ஒரு முனிவர் அங்குள்ள கதம்ப விருட்சத்தை வழிபட்டால் மார்க்கம் கிடைக்கும் என அறிவுறுத்தினார். அவ்வாறே கதம்ப மரத்தைப்

பூசித்தபோது அதினின்று அசரீரி ஒன்று எழுந்தது. நாய் அசுத்தம் செய்த ஹோம திரவியங்களை விடுத்துப் புதிய திரவியங்களைத் தயாரித்து அவற்றால் ஹோமத்தைப் பூர்த்தி செய்யுமாறு அவ்வாக்கு கூறியது. இந்த அதிசயத்தைக் கண்ணுற்ற அனைவரும் கதம்ப விருட்சத்தை வழிபட்டனர். அதிலிருந்து மகாவிஷ்ணு வெளிப்பட்டுப் புருஷோத்தமராகச் சயனக் கோலத்தில் காட்சியளித்தார். அவரது நாபிக் கமலத்தில் நான்முகனும், அருகே பிட்சாடன உருவில் சிவபெருமானும் தோன்றினர். இவ்வாறு தோன்றிய திரிமூர்த்திகளை ஜனகர் பூசித்தார். ஆகம விதிப்படி மும்மூர்த்திகளுக்கும் கோயில் எழுப்பினார். இவ்வாறு கோயில் எழுந்த திருத்தலமே உத்தமர் கோயில் என்று வழங்கப்படுகிறது. திருச்சி-முசிறி நெடுஞ் சாலையில் திருச்சியிலிருந்து 6 கி. மீ. தொலைவில் இப்பதி உள்ளது. நெடுஞ்சாலையோரமாக அமைந்துள்ள இக் கோயில் அருகே பேருந்து நிறுத்தம் உள்ளது.

நெடுஞ்சாலையின் ஓரமாக இயற்கையழகு மிக்க சூழலில் நாற்புறமும் கம்பீரமான மதில்களுடன் திருக் கோயில் எழில்மிகு தோற்றம் கொண்டுள்ளது. கிழக்கு நோக்கியவாறு இரு பிரகாரங்களுடன் இக்கோயில் விளங்குகிறது. இக்கோயிலின் கீழமேல் நீளம் 244 அடிகள்; தென்வடல் அகலம் 140 அடிகள்; திருமதிலுக்கு வெளியேயுள்ள பிரகாரத்தில் தென்னஞ் சோலைகளும் நீரோடைகளும் தென்புறத்தில் ஐயன் வாய்க்காலும் எதிரில் 16 கால் மண்டபமும் பசுமடமும் உள்ளன.

கிழ்ப்புறத்திலுள்ள கோபுரவாயில் வழியாக உட் சென்று துவஜஸ் தம்பத்தைக் கடந்து மகாமண்டபத்தை அடையலாம். கருடாழ்வாரைத் தரிசித்தவாறு மூலஸ் ஸ்தானத்தை அடையலாம். மூலவரான புருஷோத்தமன் கிழக்கு நோக்கியவாறு பள்ளிகொண்ட கோலத்தில் காட்சி தருகிறார். முற்காலத்தில் திருமாலை எப்போதும்

தரிசிப்பதற்கு ஏற்றவாறு இக்கோயிலுக்குக் கதவு இல்லாமல் இருந்தது. இதற்கு ஏற்ப "வழிக்கரையில் திருவாசலுக்கு ஒரு கதவிடாதே வந்து கிடக்கிறவனை-சேவிப்பார் மிகுதியாலே கதவிட அவசரமில்லை" என்று பெரியவாச்சான் பிள்ளை மொழிந்துள்ளார். அன்பர்கள் வழிபாடு செய்வதற்கு எளிதாக இருக்குமாறு தெய்வத் தன்மையை மறைத்து உலகைப் பொலிவுறச் செய்யவே அர்ச்சாவதார மூர்த்தியாகத் திருமாலும் இலக்குமியும் தோன்றிச் சகல உயிர்களைக் காப்பாற்றி வருவதாலும் சகல குணங்களிலும் மேம்பட்டு விளங்குவதாலும் மூலவருக்கு உத்தமர் என்ற பெயர் வழங்கப்படுகிறது. அருகே ஆண்டாளின் சந்நிதியும் உள்ளது. உட்பிரகாரத்தை வலம் வரும்போது மகாமண்டபத்திற்குத் தெற்கிலுள்ள சந்நிதியில் பூர்ணவல்லித் தாயாரைத் தரிசிக்கலாம். சிறிது தொலைவில் தலவிருட்சமான கதலி மரத்தைக் காணலாம்.

ஆலயத்தின் மற்றொரு பகுதியில் பிட்சாடனேஸ்வரர் சிவலிங்க வடிவில் அருள் பாலிக்கும் தனி சந்நிதியைக் காணலாம். அருகேயுள்ள சந்நிதியில் சௌந்தர பார்வதியம்மனின் தரிசனத்தையும் பெறலாம். இப்பகுதியில் விநாயகர், சுப்பிரமணியர், நந்திதேவர், நடராஜர், சண்டிகேஸ்வரர், நவகிரகங்கள், தட்சிணாமூர்த்தி ஆகியோரின் திருவுருவங்களைக் காணலாம். கீழ்ப்பகுதியிலுள்ள சிறு சந்நிதியில் தசரதலிங்கத்திற்கும் இடமுண்டு. ஆழ்வார்கள், கோபாலகிருஷ்ணன், லட்சுமி நாராயணர் இராமர் ஆகியோரையும் தனி சந்நிதிகளில் கண்டு வணங்கலாம். சாதாரணமாக நான்முகன் வழிபடு மூர்த்தியாக ஆலயங்களில் கருதப்படுவதில்லை. சில ஆலயங்களில் கருவறை கோஷ்டங்களில் அவருக்கு இடமுண்டு. உத்தமர் கோயிலில் நான்முகனுக்கும் சரஸ்வதிக்கும் தனி சந்நிதி அமைந்துள்ளது சிறப்பான அம்சமாகும். இது

போல் நான்முகன் திருக்கண்டியூர், கொடுமுடி போன்ற ஒரு சில திருத்தலங்களில் மட்டும் வழிபடப்படுகிறார்.

சமயத் துவேஷங்களுக்கு இடம் அளிக்காமல் மும்மூர்த்திகளையும் சமமாகப் பாவித்து வழிபட வேண்டும் என்ற கருத்தினை இக்கோயில் வலியுறுத்துகிறது. புருடோத்தமனின் மூலஸ்தானத்தை ஒட்டியே பிட்சாடனர் சந்நிதி தென்புறத்திலும் தசரதலிங்க சந்நிதி வடபுறத்திலும் உள்ளன. இங்கு வழிபடுவோர் மூன்று சந்நிதிகளையும் சேர்த்து வலம் வர வேண்டும் என்பதே நியதி. மூலவர் சந்நிதிக்கு மேல் அணி செய்யும் விமானம் உத்தியோக விமானம் எனப்படும்.

பிரளய காலத்தில் உலகம் முழுவதும் உருத்திர மூர்த்தியிடம் சரணமடைந்தன. சிவபெருமான் பூவுலகில் தோன்றப் போவதாக முடிவு செய்திருந்தார். அவ்வுலகில் வேதங்கள் கதம்ப மரங்களாகவும், ஆகமங்கள் மலர்களாகவும் இதிகாசங்கள் பழங்களாகவும், புராணங்கள் முதலியன பல வண்ணங்களைப் பெற்ற பறவைகளாகவும் தோன்றித் தமக்கு நிழலளிக்குமாறு ஈசன் ஆணையிட்டார். அவ்வாறு கதம்ப மரங்கள் நிறைந்த பகுதி கதம்பவனம் எனப் பெற்றது.

திருமாலின் நாபிக் கமலத்தில் தோன்றிய நான்முகன் தந்தையாரின் கட்டளையை ஏற்று ஈஸ்வரரின் திருக்குணங்களை அனைவருக்கும் வெளிப்படுத்தியதுடன் சத்தியலோகத்தில் அவரை வழிபட்டு வந்தார். நான்முகனைச் சோதிக்கும் எண்ணத்துடன் சிவபெருமான் கதம்பவனத்தில் கதம்ப விருட்ச வடிவில் எழுந்தருளினார். ஈசனின் தரிசனத்தைப் பெற விரும்பிய நான்முகன் கதம்பவனம் சென்று கதம்ப விருட்சத்தில் ஐக்கியமாயிருந்த அரனாரைக் கண்டு தனது கமண்டலத்திலுள்ள தீர்த்தத்தால் அபிஷேகம் செய்து ஆராதித்து வந்தார். அவ்வாறு

பிரமன் அபிஷேகம் செய்த நீர் ஒரு திருக்குளமாக உரு வெடுத்தது. நான்முகன் அங்கு ஈசனை வழிபட்டுப் படைக்கும் திறனைப் பெற்றார்.

நான்முகன் ஏற்படுத்திய தீர்த்தக் கரையில் கதம்ப முனிவர் கடுந்தவம் புரிந்தார். இறைவன் அவருக்குக் காட்சியளித்த இத்தலத்திலேயே நிரந்தரமாக எழுந்தருளித் தம்மை ஆராதித்து வருமாறு பணித்தார். இதற்கேற்ப கதம்ப முனிவர் தவமியற்றிய திருக்குளம் கதம்ப புஷ்கர்ணி என்று பெயர் பெற்றது.

சிவபெருமான் பிரம்மதேவனின் ஐந்தாவது தலையைக் கிள்ளியபோது அக் கபாலம் அவரது கையில் ஒட்டிக் கொண்டது. அக் கபாலம் நிறையும் அளவு எவராவது பிட்சை இட்டவுடன் அது மறைந்துவிடும் என்று பரிகாரம் கூறப்பட்டது. பல இடங்களில் அலைந்து திரிந்தபின் கதம்ப தீர்த்தக் கரையை அரனார் அடைந் தார். திருமகள் அக்கபாலத்தில் பிச்சை செலுத்தியவுடன் அக்கலம் நிரம்பியது. கபாலமும் மறைந்தது. சிவபெரு மானைப் பிடித்த பிரம்மஹத்தி தோஷமும் நீங்கியது.

திருமாலின் பெரிய திருவடியான கருடன் இறை வனைப் பல இடங்களில் வழிபட்டவாறு இத்தலத்திற்கு வருகை புரிந்து இங்கும் உளமாரப் பூசித்தார். கருடருக் குத் தரிசனம் அளித்த திருமால் அவரை இங்கு நிரந்தர மாகத் தங்கியிருக்குமாறு பணிந்தார். அதற்கு ஏற்ப கருடாழ்வாரும் மூலவரின் அழகிய கோலத்தைத் தரிசித்த வாறு எதிராகவே கோலம் கொண்டுள்ளார். பிரம்மோற் சவத்தின்போது இத்தலத்தில் கருடக்கொடி ஏற்றப் படுகிறது.

சத்கீர்த்திவர்த்தனன் என்ற அரசன் நெடுங்காலம் புத்திரப் பேறின்றி வருந்தினான். இங்கு அவ்வரசன்

கடுமையான விரதங்களைக் கடைப்பிடித்து வழிபட்டான். அரசனின் விருப்பம் நிறைவேறியது. சத்கீர்த்திவர்த்தனனே இக்கோயிலின் பிரகாரங்களையும், விமானத்தையும் ஏற்படுத்தினான். சித்திரைப் பூர்ணிமையில் இரதோற்சவமும் நடைபெற ஏற்பாடு செய்தான். இங்ஙனம் வெகு காலம் இக்கோயிலில் தொண்டுகள் பல புரிந்த பின் அம் மன்னன் முக்தி பெற்றான்

தாருகாவனத்திலுள்ள முனிவர்கள் ஆணவத்தின் வயப்பட்டவர்களாய்த் தாங்கள் புரியும் கர்மங்களே முக்தியை அளிக்கும் என எண்ணினர். இதன் விளைவாகச் சிவவழிபாட்டை முறைப்படி நடத்தவில்லை. முனிபத்தினிகளோ தங்களது கற்பின் பெருமையை எண்ணி இறுமாப்பு கொண்டனர். இவர்களையடக்கச் சிவபெருமானும் திருமாலும் மாறுவேடம் பூண்டனர். பேரழகு நிறைந்த மோகினி வடிவில் தோன்றிய மகாவிஷ்ணு முனிவர்களை மதிமயங்கச் செய்து தன் பின்னே திரியுமாறு செய்தார். சிவபெருமான் வசீகரத் தோற்றமுடைய பிக்ஷாடனராகத் தோன்றி முனிபத்தினிகளை மெய்மறந்து தன்னைப் பின் தொடரச் செய்தார். தாங்கள் ஏமாற்றப்பட்டதாக அறிந்த முனிவர்கள் வெகுண்டு பழிதீர்க்க முடிவு செய்தனர்.

ஈசனையே ஒடுக்கும் நோக்கத்துடன் முனிவர்கள் புரிந்த அபிசார வேள்வியிலிருந்து படபா என்ற நெருப்பு தோன்றியது. சிவபெருமான் அதனைக் கையில் ஏந்தினார். அடுத்து வெளிப்பட்ட புலியை அழித்து அதன் தோலை ஆடையாக ஏற்றார். பின்னர் தோன்றிய மான், மழு ஆகியவற்றைக் கரங்களிலும், சர்ப்பத்தைக் கழுத்திலும் ஏற்றுக் கொண்டார். முனிவர்கள் ஏவிய மந்திரங்களை உடுக்கையாக ஏற்றார். முனிவர்கள் தங்களது முயற்சி தோல்வியுற்ற பின்னரே தவறையுணர்ந்து ஈசனைத் தஞ்சமடைந்தனர் ஈசனும் அவர்களுக்கு ஞானோபதேசம் அளித்தார். இதுவே சிவபெருமான் கொண்ட பிக்ஷாடனர் கோலம். இதே திருநாமத்

துடன் லிங்க வடிவில் சிவபிரான் அருள் புரிகி றார். திருமகள் பிட்சை இட்டவுடன் பிட்சாபாத்திரம் பூரணமாக நிரம்பியது; இதற்கேற்ப பூர்ணவல்லி என்ற திருநாமத்துடன் அவர் எழுந்தருளியுள்ளார்.

ஆலயத்திற்குக் கிழக்கிலமைந்துள்ள கதம்ப தீர்த்தமும் தெற்கிலுள்ள ஐயன் வாய்க்காலும் கொள்ளிட நதியும் இத் தலத்திற்குரிய புண்ணிய தீர்த்தங்களாகும். இவற்றி லிருந்து திருமஞ்சனத்திற்கான நீர் எடுத்து வரப்படும். கோயிலினுள் தென் பிரகாரத்தில் ஒரு கிணறு உள்ளது. கோயிலுக்கு அருகே பிரம்மதீர்த்தம், பிரகலாத தீர்த்தம், பத்ம தீர்த்தம் ஆகிய தீர்த்தங்கள் இருந்ததாகத் தலவர லாறு இயம்புகிறது. ஆனால், தற்போது இவை மறைந்து விட்டன.

கதம்ப முனிவருக்குத் திருமால் காட்சியளித்து அருள் புரிந்ததால் இத்தலத்திற்குத் திருக்கரம்பனூர் என்றபெயர் ஏற்பட்டது. ஆதியில் நீப மரங்கள் நிறைந்து விளங்கிய தால் நீபவனம் (கதம்பவனம்) என்ற பெயரும் உண்டு. மும்மூர்த்திகள் ஒன்று சேர்ந்து எழுந்தருளியுள்ளதால் திரிமூர்த்தி க்ஷேத்திரம் என்ற பெயரும் உண்டாயிற்று. அரனார் பிட்சாடன மூர்த்தியாகக் கோயில் கொண்டதால் பிக்ஷாண்டார் கோயில் என்றும், நான்முகனைத் தனது நாபியில் நிறுத்தியவாறு திருமால் மூலமூர்த்தியாக அருள் பாலிப்பதால் ஆதிமாபுரம் எனவும், பிரம்மபுரம் எனவும் இப்பதியை அழைப்பர்.

இக்கோயிலின் மத்தியிலுள்ள சந்நிதியின் வடக்குச் சுவரிலுள்ள கல்வெட்டின் மூலம் (எண். 602. ஆண்டு 1902) சோழமன்னர் உடையார் ராஜாதி ராஜதேவர் என்ற ராஜகேசரி வர்மரின் முப்பதாவது ஆட்சியாண்டில் நிலங்கள் கொடையாக அளிக்கப்பட்டனதாக அறியலாம். சிவால யத்தின் தென் சுவரிலுள்ள கல்வெட்டு மூலம் (எண். 163.

ஆண்டு 1936-37) நாயனார் சுந்தர பாண்டியனின் ஆட்சியின்போது சில கோயில்களில் வழிபாடுகளும் விழாக்களும் நடைபெற பூமி தானமாக வழங்கப்பட்டதாக அறியலாம். மாறவர்மன் திரிபுவனச் சக்கரவர்த்தி குலசேகரதேவனின் பத்தாம் ஆட்சியாண்டில் இதுபற்றிய உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. சிவாலயத்தின் மேற்புறச் சுவரிலுள்ள கல்வெட்டின் மூலம் (எண். 164 ஆண்டு 1936-37) 1923 வது சகம் பல்வா, கும்பா 8 வியாழக்கிழமை அனுராதாவில் திருச்சிராப்பள்ளி ராஜராஜ மாநாடு உட்பிரிவிலுள்ள மேப்பாலாறுயில் உள்ள கிளைமுரியில் அழகிய உத்தமர் பூசைகளுக்காக மாலையபுரம் எனப்படும் குணசீலமங்கத்தில் வசிப்பவரால் விற்குடியிலுள்ள பூமியை ஸ்ரீரங்கநாத ஸ்வாமி முன்னிலையில் தானம் அளிக்கப்பட்டதாகத் தெரிந்து கொள்ளலாம்.

கி. பி. 1751-52 ஆண்டுகளில் ஆங்கிலேயருக்கும், பிரெஞ்சு நாட்டவருக்கும் நடைபெற்ற போரில் பிக்ஷாண்டார்கோயில் முக்கியத் தளமாகத் திகழ்ந்தது 1751ஆம் ஆண்டில் காப்டன் ஜின்ஜனால் திருச்சியில் ஓய்வு எடுத்துக் கொள்ளு முன்னர் தற்காலிகமாக இவ்வாலயத்தைப் பயன்படுத்திக் கொண்டனர். பின்னர் இக்கோயிலை அரணாக மாற்றினர். 1752ம் ஆண்டில் கர்நாடகப் போரின் போது கிளைவ் ஸ்ரீரங்கத்திலிருந்து பிக்ஷாண்டார் கோயிலுக்கு அருகேயுள்ள பிரெஞ்சுப் படைகளைத் தாக்கி அவர்களைச் சரணடையச் செய்தான். கி. பி. 1759-60 ஆண்டுகளில் கோயிலும் ஊரும் பிரெஞ்சு படைகளின் வசமாயிற்று. காப்டன் ஸ்மித் தலைமையில் திருச்சியிலிருந்த படைகளும் சமயபுரத்திலுள்ள படைகளும் இக்கோயிலைப் பீரங்கிகளால் தாக்கினர். கோயிலிலிருந்து கடும் தீ கிளம்பி அவர்களைச் செயலிழக்கச் செய்தது. ஸ்மித்தின் முகத்தில் குண்டு பாய்ந்து அவனை நினைவிழக்கச் செய்தது.

இவ்வூர் மிராசுதாரான ராவ்பகதூர் ராஜகோபால பிள்ளை, கூத்தூர் மிராசுதாரர் எம். சி. எஸ். அனந்தபத்ம

நாபராவ் ஆகியோரின் முயற்சியால் கோயிலிலுள்ள சில விமானங்கள் புதுப்பிக்கப்பட்டு 1939ம் ஆண்டில் குட முழுக்கு நடைபெற்றது. அனந்தபத்மநாபராவ் அவர்கள் பல பாத்திரங்களையும், விசுவரூபம், அபிஷேகம் ஆகியவற்றிற்குப் பால் அளிக்கவல்ல பசுவையும் அளித்தார். ஸ்ரீரங்கம் எம். எஸ். ஸ்ரீநிவாசராவ் கோயிலில் குடிநீர் வசதியை அமைத்தார். தேவகோட்டை கே. அண்ணாசாமி அய்யங்கார் அளித்த பொருளுதவியால் கதம்ப தீர்த்தம் செப்பனிடப்பட்டது. கொத்தமங்கலம் ராமன் செட்டியார் இரு. இடப வாகனங்களை அளித்தார். திவான்பகதூர் ஆர். சுந்தராச்சாரியார் ஸ்ரீராமர் சந்நிதி ஏற்படுத்தினார். வக்கீல் ஆர். ஸ்ரீநிவாசய்யர் 1945ம் ஆண்டில் பிக்ஷாடனரின் புதிய உற்சவத் திருமேனியை வழங்கினார். மண்டபங்களின் தளவரிசைகள் சீராக்கப்பட்டன. சிவபெருமான், அம்மன் ஆகியோரின் சந்நிதிகளில் திருவாசிகை விளக்குகள் அமைக்கப்பட்டன.

இக்கோயிலில் நாள்தோறும் நான்கு காலங்களில் அபிஷேக ஆராதனைகள் முறைப்படி நடைபெற்றன. காலையில் திருமாலின் சந்நிதியில் விசுவரூப நேரத்தில் கோசேவையும், பஞ்சாங்க சிரவணமும் நடைபெற்று வருகின்றன. திருமாலின் சந்நிதியில் சித்திரையில் பௌர்ணமி தினத்தை இறுதியாகக் கொண்டு பெருவிழா நடைபெறுகிறது. ஆனி ஜ்யேஷ்டாபிஷேகம், ஆவணி பவித்ரோற்ஸவம், புரட்டாசி நவராத்திரி ஆகிய விழாக்களும் கொண்டாடப்படும். கார்த்திகை தீபத்தன்று திருமால், சிவன் ஆகிய இருவரும் உலா வருவர். மாசிமகத்தன்று திருமால் கொள்ளிட நதிக்கரைக்கு எழுந்தருளித் தீர்த்தவாரியில் பங்கேற்பதுண்டு.

அரங்கநாதர் மாசித் திருப்பள்ளியோடம் ஐந்தாம் நாளன்று கரம்பனூரிலுள்ள கதம்ப தீர்த்தத்தின் கரையில் எழுந்தருளுவது வழக்கம். சிவன் சந்நிதியில் வைகாசி

விசாகத்தை இறுதியாகக் கொண்டு பிரம்மோற்சவம் நிகழும். திருவாதிரை, ஆனித்திருமஞ்சனம், கந்தசஷ்டி, தைப்பூசம், விநாயக சதுர்த்தி, தீபாவளி ஆகிய விழாக் களும் கொண்டாடப்படுகின்றன. இடவசதி, நீர்வசதி, போக்குவரவு வசதிகள் போன்ற அனைத்து சௌகரியங் களும் இங்கு இருப்பதால் பற்பல திருமணங்கள் இங்கு நடத்தப் பெறுகின்றன. சிறந்த பிரார்த்தனை ஸ்தலமான தால் இங்கு பக்தர்கள் வருகை அதிக அளவில் உண்டு. கோயிலுக்கு நிரம்ப வருமானமும் வருகிறது.

திருமங்கையாழ்வார் மட்டும் இத்தலத்தை மங்களா சாசனம் செய்துள்ளார். திருவரங்கப் பெருமானை வழி படும்போது திருப்பேர்நகர், திருக்குறுங்குடி, திருத்தண் கால் ஆகிய பகுதிகளில் எழுந்தருளியுள்ள இறைவனுடன் கரம்பனூர் உத்தமனையும் அவரது பாசுரம் குறிப்பிடு கிறது.

பேரானைக் குறுங்குடி யெம்பெருமானைத் திருத்தண்கா
லூரானைக் கரம்பனூ ருத்தமனை முத்திலங்கு
காரார் திண்கடலேழு மலையேழிவ் வுலகேழுண்டும்
ஆராதென் றிருந்தானைக் கண்டது தென்னரங்கத்தே

(திருமங்கையாழ்வார்)

திருமங்கையாழ்வார் கரம்பனூரில் தங்கியவாறு திருவரங்க ஆலயத்தின் மதில், மண்டபம் ஆகியவற்றைக் கட்டிய தாக ஒரு ஐதிகம் நிலவுகிறது. இதற்கேற்ப திருமங்கை யாழ்வார் தங்கியிருந்ததாக நம்பப்படும் பகுதி (கதம்ப புஷ்கர்ணிக்கு அருகிலுள்ள நன்செய் நிலமும், தோப்பு மண்டபமும்) "ஆழ்வார் பட்டவிருத்தி" என வழங்கப்படு கின்றது.

இறைவனை அடைவதற்காக அரிய தவங்களைப் புரிதல், சிறப்புமிக்க வேள்விகளை நடத்துதல். புனிதப்

புனங்களில் நீராடல், அரிய சாத்திரங்களை ஐயம்திரிபறக் கற்றல் ஆகிய செயல்களில் ஈடுபடுவதால் எப்பயனும் இல்லை. கரம்பனூரில் கோயில் கொண்டுள்ள புருஷோத்தமனின் திருநாமத்தைப் பலமுறை ஓதுவதே முறையான வழியாகும்'' என்று தனது நெஞ்சிற்கு உபதேசம் புரிவதாகத் திவ்விய கவி பிள்ளைப் பெருமாள் அய்யங்காரின் பாசுரம் அமைந்துள்ளது.

''சிலமா தவம் செய்துந் தீ வேள்வி வேட்டும்
பலமா நதியிற் படிந்து—முலகிற்
பரம்பநூல் கற்றும் பயனில்லை நெஞ்சே
கரம்பனூர் உத்தமன் பேர்கல்''

(நூற்றெட்டு திருப்பதி அந்தாதி)

சிவபெருமானும் தன்னைப் போற்றுமாறு திருமால் இங்கு பள்ளி கொண்டுள்ளதாகக் குரவை இராமானுஜ தாசர் தான் எழுதியுள்ள '108 திருப்பதி திருப்புகழ்' என்ற நூலில் தெரிவித்துள்ளார்.

''கடந்தாமரைப் பதம் கொடகண்ட கோளமட்டு நின்று
கலந்தனான் முழக்கு கங்கை முதுநீர் தான்
கரந்தைவார் சடைக்கணிந்த பரன்பரவு பொற்பிலங்கு
கரம்பனூர் தனிற்கிடந்த பெருமாளே.''

# 2. எலவானசூர்

(தென் ஆற்காடு மாவட்டம்)

## அர்த்தநாரீஸ்வரர் திருக்கோயில்

முற்காலத்தில் சீரும் சிறப்புமாகத் திகழ்ந்த எத்தனையோ திருத்தலங்கள் காலப்போக்கில் பேணுவோர் இல்லாமையால் பெருமை இழந்து நிற்கின்றன. இத்தகைய பதிகளுள் எலவானசூரும் ஒன்று. இன்று எலவானசூர் கோட்டை என்றும், இளவரசன் கோட்டை என்றும் அழைக்கப்படும் இச்சிற்றூர் திருக்கோயிலூரிலிருந்து ஆசனூர் செல்லும் பாதையில் 12 கி. மீ. தொலைவிலும், உளுந்தூர்பேட்டையிலிருந்து கள்ளக்குறிச்சி செல்லும் பெரிய சாலையில் 20 கி. மீ. தொலைவிலும் அமைந்துள்ளது. இங்குள்ள திருக்கோயில் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூன்று சிறப்புக்களையும், புராணப் பெருமையையும் பெற்றதோடன்றி வரலாற்றுச் சிறப்பு மிக்க ஏராளமான கல்வெட்டுக்களையும் கொண்டுள்ளது.

**தலபுராணம்:** நான்முகனின் வாக்கினால் சிவ பெருமானின் பெருமைகளை அறிந்து கொண்டு நைமிசாரணிய முனிவர்கள் சிலர் சிவலிங்கத்தை முறைப்படி வழிபட விரும்பினார்கள். பூவுலகில் அசரவனம் என்ற

தலத்தில் சிகரமணிநாதர் என்ற பெயருடன் எழுந்தருளியுள்ள லிங்கத் திருமேனியை முனிவர்களும் நான்முகனும் தேவர்களும் முறைப்படி அபிஷேகம் புரிந்து ஆராதித்தனர். அத்தருணத்தில் அங்கு தோன்றிய சனத்குமாரர் அவர்களுக்கு ஞானோபதேசம் அளித்தார். அனைவருக்கும் இறையருள் கிடைத்தது.

மிருகண்டு முனிவரின் சாபத்தால் அசுரனாகப் பிறந்த ஒரு வேதியன் கொடிய செயல்களில் ஈடுபட்டான். காருண்டன் எனப்பட்ட அந்த அரக்கன் பிறையூர் என்ற குன்றருகே நகரினையமைத்து ஆட்சிபுரிந்து வந்தான். அசுரனின் தொல்லைகளைத் தாங்கமுடியாத முனிவர்கள் சிகரமணிநாதரிடம் முறையிட்டனர். வடக்கிலுள்ள எமகூடபர்வதத்தில் எழுந்தருளியுள்ள முருகப்பெருமானின் உதவியை நாடுமாறு முனிவர்கள் முன் ஒரு தெய்வவாக்கு எழுந்தது. அவ்வாறே முனிவர்களும் முருகனின் தயவை நாடினர். முருகப்பெருமானும் திருக்கோவலூர் என்ற திருத்தலத்திற்கு வந்து ஒரு மாபெரும் வேள்வியைப் புரியுமாறு முனிவர்களிடம் பணிந்தார். இந்த வேள்வியிலிருந்து ஒரு தெய்வீக புருடன் வெளிப்பட்டான். பச்சைக்குதிரை, நவரத்தினக் கிரீடம், கூரியவாள் படை ஆகியவற்றுடன் காட்சியளித்த அந்தப் புருஷனுக்குத் தெய்வீகராசன் என்று பெயரிட்டனர்.

தெய்வீகன் பெற்றிருந்த யாகக்குதிரையைச் சேர, சோழ பாண்டியர் ஆகிய முடியுடை மூவேந்தர்கள் பெற விரும்பினர். தெய்வீகன் அதனைக் கொடுக்க ஒப்பவில்லை. இதனால் மூவேந்தரும் அவனுடன் போரிட்டனர். தெய்வீக பலம் பெற்றிருந்த அத்தேவ புருஷன் மூவேந்தரையும் வென்றான். வடக்கில் கெடில நதி, தெற்கில் வெள்ளாறு, கிழக்கில் ஆழ்கடல், மேற்கில் கொல்லிமலை ஆகியவற்றிற்கு இடைப்பட்ட பகுதியைத் தெய்வீகனுக்கு மூவேந்தர்கள் அளித்தனர். அரசவனத்

தில் தொல்லையளித்து வந்த விலங்குகளை வேட்டையாட மன்னன் ஒருமுறை சென்றான். வேட்டையின்போது நீர் வேட்கை, பசி ஆகியவற்றால் அவதியுற்றான். அங்கு வயோதிக வேதியர் வடிவில் சிவபெருமான் தோன்றி அரசனுக்கு உணவும் நீரும் அளித்தார். பின்னர் பிறை யூர்க்குன்றில் ஆட்சிபுரியும் காருண்டனை வதைத்துத் தவசிகளைக் காப்பாற்றுமாறு பணிந்தார். வயோதிகரின் கட்டளையை ஏற்ற தெய்வீகன் காருண்டனுடன் கடும் போர் புரிந்து தான் இறையருளால் பெற்ற மழுவாயுதத் தால் காருண்டனை வதைத்தான்.

காருண்டன் முதலில் அந்தணனாகப் பிறந்து முனி சாபத்தால் அசுரனாக மாறியவன். அவனைக் கொன்ற தால் தெய்வீகனைப் பிரம்மஹத்தி தோஷம் பற்றியது. அரச வனத்தில் 1200 அந்தணர்களுக்கு இல்லங்கள் அமைத்து அவர்கள் வாழ்வதற்கு மானியமும் அளிப்ப துடன் அப்பகுதியில் சிவாலயம் ஒன்றையமைத்து அதில் முறைப்படி வழிபாடுகள் நடைபெற நிவந்தங்கள் அளித் தால் பிரம்மகத்தி தோஷம் அகலும் என்று முனிவர்கள் அறிவுரை அளித்தனர். அவ்வாறே அரசனும் அருகே யுள்ள தெள்ளாறு, குழப்பலூர், சித்திங்கூர், கோவலூர் ஆகிய இடங்களில் நானூறு அந்தணாகளைக் குடியேற்றி னான். வேறு நானூறு அந்தணர்களுடன் அரசன் வனத்தையடைந்தான். முனிவர்கள் கூறிய கணக்குப்படி இன்னும் 400 அந்தணர்களை அவன் தேடிக் கொண் டிருக்கையில் வயோதிக வேதியர் வடிவில் சிவபெருமான் தோன்றி 400 அந்தணர்களுக்கு உரிய மானியத்தைத் தான் ஒருவனுக்கே அளிக்குமாறு கேட்டார். தெய்வீகன் அவரது கூற்று நியாயமற்றது என்று முறையிட்டான். "அரசே! எனக்கு இரு பத்தினிகளும் இரு பிள்ளைகளும் உள்ளனர். நாற்பத்தெட்டாயிரம் ரிஷிகள் எனக்கு அடிமையாக உள்ளனர். நீ அளிக்கும் மானியம் எனது மூத்த மகனின் உணவுக்கே போதாது" என்று கூறியபின்

வியோதிகர் தனது சுய உருவத்துடன் காட்சியளித்தார். ஈசனின் தரிசனத்தால் புளகாங்கிதமடைந்த அரசன் அப்பதியின் வருமானத்தில் ஒரு பாதியை இறைவனுக் குத் தாரை வார்த்துக் கொடுத்தான்.

தானத்தை ஏற்றபின் ஈசன் மூங்கில் வனத்தில் மறைந்து சிகரமணி நாதராக எழுந்தருளினார். இறை வனைத் தேடிச் சென்ற அரசன் வழியிலுள்ள மூங்கில் மரங் களை வெட்டியவாறு சென்றான். அரசனின் வாள் சிவ லிங்கத்தின் மீது பட்டு உதிரப் பெருக்கு ஏற்பட்டது இதனைக் கண்டு திகைத்த அரசன் தனது வாழ்வை முடித்துக் கொள்ள விரும்பினான். சிவபெருமான் அரச னுக்குக் காட்சியளித்து அருள் புரிந்தார். வேதமுணர்ந்த அந்தணர்களுடன் இறைவனும் பாதி பாகம் பெற்றதால் இத்தலம் இறையானரையூர் என்று பெயர் பெற்றது. அரசன் தத்தம் செய்த நீரை இறைவன் பெற்றதால் நீரேற்றபுரி என்றும், மூங்கில் காடுகள் மிக்க பகுதியான தால் மூங்கில்புரி என்ற பெயர்களும் நிலைத்தன. பிரம்ம ஹத்தி நீங்கப் பெற்ற அரசன் சீரும் சிறப்புமாக அரசோச் சியபின் இறைவடி சேர்ந்தான். இவையே இறைவாச நல்லூர்த்தல புராணம் அளிக்கும் செய்திகள்,

**கோவிலமைப்பு:-** ஐந்து பிரகாரங்களுடன் திருக்கோயில் அகன்ற பரப்பிலமைந்துள்ளது. இதனால் பஞ்சப்பிரகார கோயில் என்று இதனை அழைப்பதுண்டு. முகப்பில் 5 நிலை கோபுரம் மேற்கு நோக்கியவாறு காட்சியளிக்கிறது. வெளிப்பகுதியிலுள்ள காரைப் பூச்சுகள் அழிந்து செடி கொடிகளுடன் வெறும் செங்கல் கட்டிடமாகவே திகழும் இக்கோபுரத்தைச் செப்பனிட வேண்டிய அவசியம். முதலாம் குலோத்துங்கனின் 30ஆம் ஆட்சியாண்டில் (கி. பி. 1110) கூடலூர் ஆளப் பிறந்தான் இராசகெம்பீர காடவராயன் என்ற சிற்றரசனால் முதலில் கோபுரம் கட்டப்பட்டதாகக் கல்வெட்டு கூறுகிறது.

கோபுரத்திற்கும் கோயிலுக்கும் இடையே நூற்றுக் கால் மண்டபம் உள்ளது. இதனையடுத்துத் தலவிருக்ஷமான மகிழ மரம் நன்கு வளர்ந்துள்ளது. கொடி மரம் 1893ஆம் ஆண்டில் குஞ்சரம் சபாபதி உடையார் காலத்தில் நிறுவப் பட்டதாகச் செவி வழிச் செய்தி உள்ளது.

மூலக் கோயில் யானை ஏறாத வண்ணம் 4 அடி உயரமுள்ள பீடத்தின் மீது அமைக்கப்பட்டுள்ளது. ஒரு குன்றைச் சுற்றிக் கருங்கற் சுவரமைத்துள்ளனர். இதற்குச் சான்றாக ஆறு கல்வெட்டுக்களில் மலை என்றே மூலஸ்ஸ்தானம் குறிப்பிடப்பட்டுள்ளது.

'தைமாதம் முதல் நித்தமொரு திருவிளக்கு
இரவை சந்தியில் மலைமேலே எரியக் கடவதாக'
(முதலாம் குலோத்துங்கனின் கல்வெட்டு)

'இம்மாசம் முதல் நித்தமொரு திருவிளக்கு
இரவை சந்தியில் திருமலை மேலே எரியக் கடவதாக,'
(இரண்டாம் இராசராச சோழனின் கல்வெட்டு)

''திருமலை மேலே இரவை சந்தி விளக்கு எரியக்
கடவதாக''
(இரண்டாம் இராசாதிராச சோழனின் கல்வெட்டு)

பீடத்தை ஒட்டியவாறு அமைந்துள்ள படிக்கட்டுக்களில் ஏறி மாடக் கோயிலை அடையலாம். கருவறையின் புறச் சுவர்களிலுள்ள கோஷ்டங்களில் உருவங்கள் இல்லை. மனிதத் தலை யாளித்தலை போன்ற உருவங்களையுடைய கூடுகள் கொடுங்கைகளை அலங்கரிக்கின்றன. கும்பம், பலகை, போதிகை ஆகிய உறுப்புக்களையுடைய பட்டை வடிவான அரைத் தூண்கள் வெளிச் சுவர்களுக்கு அணி செய்கின்றன.

கருவறையில் மூலவர் அர்த்தநாரீஸ்வரர் இலிங்க வடிவில் காட்சியளிக்கிறார், மூலலிங்கத்தின் அடிப்பகுதி

வட்டமாக இல்லாமல் சதுரமாக உள்ளது. லிங்கம் சுயம்பு வாக உண்டாயிற்று எனவும் அடிப்பகுதி பின்னர் சேர்க்கப் பட்டது எனவும் கருதுகின்றனர். ஆதியில் இவரை 'அமர புயங்க தேவர்' என்றே குறிப்பிட்டனர் (முதலாம் இராஜரா ஜனின் கல்வெட்டு). அதற்குப் பின்னர் தோன்றிய கல் வெட்டுக்களில் 'ஊர்பாகங் கொண்டருளிய மகாதேவர் "ஊர்பாகங்கொண்டருளிய நாயனார், ஊர்பாகங் கொண் டருளிய தம்பிரானார்" ஆகிய பெயர்களேவழங்கப்பட்டன. இவ்வூரின் வருவாயில் சரிபாதியை ஏற்றுக் கொண்டதால் இப்பெயர் ஏற்பட்டது. பிற்காலத்தில் இதன் வடமொழி யாக்கமான 'கிராம அர்த்த நாரீஸ்வரர்' என்ற பெயர் எழுந்தது. தலபுராணத்தில் மூலவருக்குச் சிகரசிகாமணி நாதர், சிகரமணிச்சுடர், மங்கையொருபாகன், சோதிலிங்க நாதன், அரசவனத்து இறை ஆகிய பெயர்கள் வழங்கப் படுகின்றன.

"பொறிவழி கூடிய புலன்வழி யோடிய புலனுடை
யாரறிவார்
நெறியொடு கூறிய நிலையிது தானென நினைவரி
தாமணியார்
அறிவுடை யோர் சிரமருவு சிகாமணி யமரர்சிகாமணியோர்
செறியிறை யாபுரி மறைகள் சிகாமணி சிகரசிகாமணியே"
(தல புராணம்)

கருவறைக்கு வெளியே அலங்கார மண்டபம் உள்ளது. சிவபெருமான் திருவாலவாயில் நிகழ்த்திய திருவிளை யாடல்களை விளக்கும் வண்ண ஓவியங்கள் இம்மண்ட பத்தின் மேற்பகுதியில் வரையப்பட்டுள்ளன. தூண்களில் உள்ள இறைவனின் திருவுருவங்கள் இச்சம்பவங்களை நினைவுறுத்துவதாக அமைக்கப்பட்டுள்ளன. கருவறைக்கு எதிரே மூன்று நந்திகள் இறைவனுக்கு எதிர்முக நிலை யில் கோலம் கொண்டுள்ளன. மாடியில் சமயக் குரவர்கள் நால்வரும், தண்டபாணியும் இடம் பெற்றுள்ள

னர். மூன்றாம் திருச்சுற்றில் நால்வர், மகாகணபதி, வல்லபகணபதி, ஆத்மலிங்கம், அகத்தியலிங்கம், இரண லிங்கேஸ்வரர், காசி விசுவநாதர், விசாலாட்சி, நடராஜர் ஆகியோர் அமைந்துள்ளனர்.

வெளிப் பிரகாரத்தில் தென்மேற்கு மூலையில் புதுப்பிக்கப்பட்ட சந்நிதியில் கிழக்கு நோக்கியவாறு பிரஹந் நாயகி அம்மன் அருள்மழை பொழிகிறார். முதலாம் குலோத்துங்கனின் 48ஆம் ஆண்டுக் கல்வெட்டில் (கி. பி. 1118) அம்மன் 'திருப்பள்ளியறை நம்பிராட்டியார்' என்று குறிப்பிடப்படுகிறார். திருப்பள்ளியறை ஆளுடையார், நாச்சியார் ஆகிய பெயர்களும் கல்வெட்டுக்களில் இடம் பெற்றுள்ளன. இன்று தமிழில் பெரியநாயகி எனவும் வட மொழியில் பிரகன்நாயகி என்றும் அழைக்கின்றனர்'.

"கருணை நாயகி விரதநாயகி கடவுள் நாயகியே
ஒருவர் நாயகியறிஞர் நாயகி உலக நாயகியே
தருமநாயகி மறைகள் நாயகி சமயநாயகியே
பெருமைநாயகி இறைசை நாயகி பெரியநாயகியே"

என்று தலபுராணம் இவரது புகழைப் போற்றுகிறது.

**கல்வெட்டுக் கருவூலம் :-** இக்கோயிலில் சுமார் எண்பது கல்வெட்டுக்கள் படியெடுக்கப்பட்டுள்ளன சோழமன்னர்கள் முதலாம் இராஜராஜன், சோழகேரள தேவர், முதலாம் இராஜேந்திரன், இராஜமகேந்திரன், முதலாம் குலோத்துங்கன், விக்கிரமன், இரண்டாம்குலோத்துங்கன், இரண்டாம் இராஜராஜன், இரண்டாம் இராஜாதிராஜன், மூன்றாம் குலோத்துங்கன், வீரராஜேந்திரன், மூன்றாம் இராஜராஜன், பாண்டிய மன்னர்கள் ஜடாவர்மன் வீர பாண்டியன், சுந்தர பாண்டியன், விக்கிரம பாண்டியன், மாறவர்மன் வீரபாண்டியன், ஸ்ரீ வல்லபன், பல்லவ சிற்றரசன் கோப்பெருஞ்சிங்கன், விஜயநகரவேந்தர்கள் கம்பண உடையார், விஜயராய மகாராயர், கிருஷ்ண தேவராயர், அச்சுததேவ மகாராயர், சதாசிவதேவ

மகாராயர், கொம்பண உடையார் ஆகிய அரசர்கள் காலத்தில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுக்கள் மூலம் அரசியல் சமுதாயம் போன்ற பலதரப்பட்ட செய்திகளை அறியலாம்.

இவ்வூர் இறையானரையூர், என்றும் இறைசை என்றும் முதலில் வழங்கப்பட்டு வந்தது. இராஜமகேந்திரன் காலத்திற்குப் பின்னர் சோழகேரளச் சதுர்வேதி மங்கலம் என்ற பெயரே இவ்வூருக்கு வழங்கப்பட்டது. மூலவரின் சந்நிதியிலுள்ள மிகப் பழைய கல்வெட்டினை ஆதாரமாகக் கொண்டு நோக்கினால், இப்பகுதி இராஜராஜசோழனின் காலத்தில் கட்டப்பட்டதாக ஊகிக்கலாம். முகமண்டபம் கி.பி. 1165க்கு முன்பு கட்டப்பட்டது. கி பி. 1165ஆம் ஆண்டில் சோலையம்பிரான் என்ற வணிகன் இங்கு சந்தி விளக்கெரிக்க 15 பொற்காசுகளைமூலதனமாகஅளித்தான். அதனை அடுத்துள்ள உள்ளாலைத் திருமுற்றம். நரேந்திர சிகாமணி மூவேந்த வேளார் என்ற அதிகாரியால் கட்டப்பட்டது. கோயிலிலுள்ள மண்டபங்களுக்குச் சாந்திடுதல், வெள்ளை பூசுதல் ஆகிய பணிகளுக்கு முதலாம் இராஜேந்திர சோழன் காலத்தில் 30 பொற் காசுகள் வழங்கப்பட்டன. முதற்பிரகாரத்தின் வாயிலை இணைத்துள்ள மண்டபம் முடிகொண்ட சோழ திருமண்டபம் என்றும், திருவோலக்க மண்டபம் எனவும் பெயர் பெற்றிருந்தது. இரண்டாம் இராஜராஜன்காலத்தில்குலோத்துங்கசோழன் காடவராயன் என்ற குறுநில மன்னன் ஏழிசைமோகன் திருமண்டபத்தைக் கட்டினார். திவ்வியமண்டபம் ஒன்றும் எழுந்தது வீரபாண்டியன் காலத்தில் ஸ்நபன மண்டபம் பற்றிய கல்வெட்டு கிடைத்துள்ளது கல்வெட்டுக்களில் இக்கோயிலிலுள்ள இரு திருமாளிகைகள் பற்றிய குறிப்புக்கள் உள்ளன. கோயிலின் பகுதிகளைச் செப்பனிடுவதற்கு முதலாம் இராஜேந்திரன் காலத்தில் பொற்காசுகளும், கிருஷ்ண தேவராயர் ஆட்சியின்போது செம்பியன்மாதேவி என்ற ஊரும் அளிக்கப்பட்டன.

இக்கோயிலில் நாள்தோறும் சிறுகால சந்தி, உச்சியம் போகை, இரவு சந்தி ஆகிய மூன்று காலங்களில் முறைப் படி வழிபாடுகள் நடைபெற்றன. காலையில் திருப்பள்ளி யெழுச்சியுடன் திருமஞ்சள் நீராட்டும் நடைபெற்றது. நாடோறும் நந்தா விளக்குகளும் நிலை விளக்குகளும் அவ்வப்போது சந்தி விளக்குகளும் ஒளியை வழங்கின. பூசைக் காலங்களில் இசைக் கருவிகள் ஒலித்தன. திருவமுது படைக்கப்பட்டது இறைவரைச் சந்தனக் கலவைகளாலும் புத்தாடைகளாலும் அலங்கரித்தனர்.

விக்கிரம சோழன் காலத்தில் ஞாயிற்றுக்கிழமை தோறும் மாணிக்கவாசகர் இயற்றிய திருச்சாழல் என்ற திருப்பதிகத்தைப் பாட ஏற்பாடு செய்யப்பட்டது விக்கிரம சோழனின் பிறந்த நாளான ஹஸ்த நட்சத்திர நன்னாளில் 'இராஜாக்கள் நாயன் சந்தி' என்ற சிறப்பு வழிபாடு நடக்க மானியம் வழங்கப்பட்டது. அமாவாசை நாட்களில் உத்த மாக்கிரம் என்ற சிறப்பமுது படைக்கப்பட்டது.

காலம் காலமாக இக்கோயிலில் நடைபெற்ற திருவிழாக்கள் பற்றிய தகவல்களையும் கல்வெட்டுக்கள் வாயிலாக அறியலாம். இரண்டாம் இராஜராஜன் காலத் தில் புரட்டாசி, மார்கழி ஆகிய மாதங்களில் திருவோண நாளன்று விழா கொண்டாடப்பட்டது பங்குனித் திங்களில் முடிகொண்டான் சோழ மண்டபத்தில் இறைவனுக்குச் சாத்துப்படிகள் நடைபெற்றன. நாளக்குறிச்சியைச் சேர்ந்த மீனன் என்பான் இறைவன் உலாப் போகும் பாதையில் இருந்த குன்று ஒன்றை நீக்கி வழியைச் சமன் செய்தான். விஜயநகர அரசின் பிரதிநிதியான ஆனந்த தாண்டவ தொண்டைமானார் கி. பி 1539ஆம் ஆண்டில் வீரமங்கலம் என்ற ஊரைத் தானமாக அளித்துஅதிலிருந்து வரும் வருவாயைத் தேர் திருவிழாவிற்காக உபயோகிக்கு மாறு சாசனம் செய்வித்தார். வேலூர் பொம்முநாயக்கர் ஆறாம் நாள் திருவிழாவிற்காக இரு சிற்றூர்களைக்

கொடையாக வழங்கினார். கிருஷ்ண தேவராயர் ஆட்சியின்போது சூற்றியன் குறிச்சி, செம்பியன்மாதேவி ஆகிய ஊர்களைக் கோபுரத் திருப்பணிக்காகவும் மகரபூஜை நடைபெறுவதற்காகவும் வழங்கினர் (கி. பி. 1527). கி. பி. பதினாறாம் நூற்றாண்டில் இவ்வூர்த் தறிகளுக்கு விதிக்கப் பட்டிருந்த வரிகள் அனைவற்றையும் முத்து ஈசுவர ஐயன் என்ற அதிகாரி இறைவனுக்கு அளித்தான். கி. பி. 1118ம் ஆண்டில் திருப்பள்ளி அறை தம்பிராட்டியாருக்கு நில தானம் கொடுக்கப்பட்டது. விக்கிரம சோழன் காலத்தில் ஞாயிற்றுக்கிழமையன்று பிராட்டியை அலங்கரித்துத் திருவுலாவாக எடுத்துச் சென்றனர். பங்குனி மாதத்தில் உலாவரும் நாச்சியாருக்குத் திருக்காப்பு, நாண் சாற்று வதற்காகக் கிளியூர் மலையமான் பெரிய உடையான் சூரிய தேவன் என்ற குறுநில மன்னன் அரைக்கால் பொன்னை அளித்தான்.

கூத்தாடு தேவருக்கு (நடராஜர்) சிறுகாலைச் சந்தியில் திருவமுது அளிக்க நாடோறும் நாநாழி அரிசி தேவைப் பட்டதாக விக்கிரம சோழனின் கல்வெட்டு தெரிவிக் கிறது. விக்கிரமசோழன், வீரபாண்டியன் ஆகியோர் காலத்தில் வீதிவிடங்கப் பெருமான் என்ற உற்சவர் திருவு லாவில் எடுத்துச் செல்லப்பட்டார். இராசேந்திர சோழ மலைய குலராயன் என்பான் வரிப்பணத்தில் ஒரு பகுதி யைப் பிடாரியாருக்காக அளித்தான்.

திருச்சுற்று மாளிகையில் பிரதிஷ்டை செய்யப்பட்ட போகீசுரமுடைய தம்பிரானார் என்ற பெரிய லிங்கத் திருவுருவிற்காகச் சீயமங்கலம் என்ற சிற்றூர் தேவதான மாக அளிக்கப்பட்டது.

கோயிலிலுள்ள திருமேனிகளுக்குத் திருமஞ்சனம் செய் வித்தல், பரிவட்டம் அணிவித்தல், மலர் சூடுதல், திருவமுது அளித்தல் ஆகிய பணிகளைப் புரியப்பட்டர்கள்

ப்பட்டனர். இவர்களை 'அறுபது வட்டத்துச் சிவ
ர்கள்' என்று கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன.
ன் வருவாயை வசூலிப்பதுடன் கோயிற் காரியங்
மேற்பார்வை புரியவும் ஸ்ரீகாரியப் பெருமக்கள்
அலுவலர்கள் இருந்தனர். ஊதியமின்றி உழைக்கும்
முட்டையாள்' என்ற பணியாளர்கள் அவ்வப்
நியமிக்கப்பட்டனர். இக்கோயிலில் பணியாற்றி
தேவரடியாள் இருவர் விளக்கெரிக்கவும், திருவமுது
வும் தானம் வழங்கினர். இக்கோயிலில் ஆடல்,
போன்ற பணிகளைப் புரிந்து வந்த தேவரடியார்
அரும்புலிப்பாடி என்ற சிற்றூர் வழங்கப்பட்டது.
யிலில் திருப்பள்ளியெழுச்சி, திருச்சாழல் ஆகியன
ற்காகப் பிடாரர்கள் இருந்தனர். இத்திருப்
ச் செய்துவந்த கங்கராயன் என்ற கைக்கோளன்
றித் தறி ஒன்று வைத்துக் கொள்ள அனுமதிக்கப்
. இக்கோயிலில் தானமாக அளிக்கப்படும் அணி
ர், பொருட்கள், விலையுயர்ந்த ஆபரணங்கள்
ற்றைப் பாதுகாக்கும் இடம் தேவர் பண்டாரம்
டது. வரிப்பொருட்கள், நெல் தொகுதி, விளக்குத்
க அளிக்கப்பட்ட பசுக்கள், பல்வேறு வரித்
கள் ஆகியன ஸ்ரீபண்டாரத்தில் சேர்க்கப்பட்ட
ல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.

லாம் இராசேந்திரனின் 5ஆம் ஆட்சியாண்டில்
கிணறுகளை உள்ளடக்கிய நிலத்தில் நந்தவனம்
அமைப்பதற்காகக் கொடைகள் அளிக்கப்பட்டன.
ரசிகாமணி மூவேந்த வேளான் என்பவன
ன்றாம் நூற்றாண்டில் நந்தவனம் அமைக்கும்
டு நிலத்தைக் கொடையாக வழங்கினான். அந்
ல் அமைக்கப்பட்ட நந்தவனத்திற்குச் சிந்தாமணி
ம் என்று பெயரிடப்பட்டது. இதற்குத்
வுள்ள பகுதியில் நந்தவனப்புறம் என்ற

நந்தவனம் இருந்தது. இக்கோயிலுக்குரிய தேவதான நிலங்கள் திருநாமத்துக்காணி எனப்பட்டன. நன்செய் நிலத்தை நீர்நிலம் என்று குறிப்பிட்டனர். இவற்றை அளக்க வீதிவிடங்கன் கோல், பொத்தகக் கோல் போன்ற அளக்கும் கருவிகள் இருந்தன. அக்காலத் தில் வழக்கிலிருந்த வரிப் பெயர்கள், காசுகளின் பெயர்கள், வட்டிவிகிதம், வாய்க்கால்களின் பெயர் போன்ற தகவல்களையும் கல்வெட்டுக்கள் புலப்படுத்து கின்றன. கோயிலுக்குத் தேவதானமாக அளிக்கப்பட்ட ஊர்களின் பெயர்கள், அவ்வூரில் அளிக்கப்பட்ட நிலத்தின் பரப்பு, தரம், அமைந்துள்ள இடம், கொடையை அளித்த வரின் பெயர் போன்ற விரிவான தகவல்களையும் கல் வெட்டுக்கள் மூலம் அறியலாம். இத்தலத்தில் வானவன் மாதேவி விண்ணகர், இராசநாராயண விண்ணகர், திருமுற்றத்தாழ்வார், திருமேற்கோயிலாழ்வார் போன்ற வைணவக் கோயில்கள் இருந்ததாகவும் அறியலாம்.

முதலாம் குலோத்துங்கனின் ஆட்சியில் (கி. பி. 1116) இளமை வேங்கடமான பண்டிதப் பிரியன், இளமைக் கருமாணிக்கமான பட்டப்பிரியன் ஆகிய ஊர்க்கணக் கர்கள் வசூலித்த வரித் தொகையை ஊராரிடம் ஒப்படைக் காமல் ஓடிவிட்டனர். ஊர்ச்சபையோர் 1118ஆம் ஆண்டில் அவ்விருவருக்கும் உரிய நிலத்தை விற்றனர். அவற்றைப் பதின்மூன்றே நாலுமா முக்காணிக் காசும், மூன்று கழஞ்சு பொன்னும் கொடுத்துவாங்கிய தொண்டைமான் என்ற அறவேர்ன் அந்நிலத்தைக் கோயிலுக்குத் தானமாகக் கொடுத்தான்.

மலையனூர் என்ற சிற்றூரிலுள்ள மக்கள் கோயிலுக் குச் செலுத்த வேண்டிய வரிப்பணத்தை (3100 பணம்) உரிய காலத்தில் கட்டவில்லை. இதனால் கோயிலின் தானத்தார்கள் கைது செய்யப்பட்டுக் கோயிலில் சிறை

வைக்கப்பட்டனர். மலையனூரிலுள்ள பட்டர்கள் தங்களது நிலங்களைக் கோயிலுக்கு விற்றுத் தானத்தார்களை மீட்டனர். குலோத்துங்க சோழனின் கீழ் ஆட்சிபுரிந்த குறுநில மன்னர்கள் இருவர்—மலையமான் நாட்டரசன் சூரியதேவன் நீரேற்றான், வாகைப்பாடி நாட்டரசன் குலோத்துங்க சோழ வாணகோவரையன் ஆகியோர் பாதுகாப்பு ஒப்பந்தம் செய்து கொண்டது பற்றிய கல்வெட்டு ஒன்று உள்ளது

அரசனிடம் விசுவாசமும் அன்பும் மிக்க வேளக்காரப் படையில் ஆடவரும் பெண்டிரும் பங்கேற்றனர். தேவப் பெருமாள் என்ற பெண் தன் கணவன், தன் அரசன் ஆகியோர் இறந்த பின்னர் உயிர் வாழ்வதில்லை என்று உறுதிமொழி பூண்டார். "எதிரிகளின் நாயனின் வேளக் காரியான நான் அவ்வரசனுக்குப் பிறகும் உயிர் வாழ்வாகுமாயின் என் மாடுகளை மேய்ப்பார்க்குச் சோறிட்டு, நீர் கொடுத்து, அவர்கள் வைக்கும் மீதமுள்ள சோற்றையும் நீரையும் உண்கின்றவள் ஆவேன். என் மணாளன் இறக்கும்போது அவனோடு நானும் இறந்து போவேன்! அவ்வாறு இறவாது உயிரோடு இருப்பேனாயின் என்னைக் காண்பவர்கள் நெருப்பிலிட்டுக் கொல்வார்களாக! அவ்வாறு என்னைக் கண்டும் கொல்லாதவன் என் கணவன் ஏறுகின்ற குதிரைக்குப் புல்கொண்டு வந்து தருகின்ற காமிசன் என்பானுக்குத் தன் மனைவியைக் கொடுத்தவன் ஆவான்."

எலவானசூருக்கு அருகேயுள்ள வாணபிராட்டி என்ற சிற்றூரைச் சார்ந்த வீரபாலன் என்பான் பன்றி வேட்டைக்குச் சென்றபோது அவன் அம்பு குறி தவறித்தில்லை ஆறாயிரப்போயன் என்பானைக் கொன்றது. இதற்குக் கழுவாயாக எலவானசூர் கோயிலில் நந்தா விளக்கு ஒன்றை அமைத்து, அதற்காக 32 பசுக்களை வழங்கினார். மாடூர் என்ற ஊரைச் சேர்ந்த கோச்சாத்தன் காமன் என்ப

வரின் மனைவி தனது மகளைக் கோலால் நையப்புடைக்க முயன்றபோது குறி தவறி வேறொரு பெண்ணைக் கொன்று விட்டாள். பரிகாரமாக ஊர்ச் சபையோரின் தீர்ப்புப்படிக் கோயிலில் நந்தா விளக்கெரிக்க 32 பசுக் களைக் காமன் வழங்கினான். இது போன்ற பலவகைச் சமுதாயச் செய்திகளையும் கல்வெட்டுக்கள் தெரிவிக் கின்றன.

இறைவாசநல்லூர் தலபுராணம் என்ற நூல் கிருஷ்ணதேவராயர் காலத்தில் திருமலை நயினார் சந்திரசேகரர் என்பவரால் இயற்றப்பட்டது. இவ்வடி யாருக்கு 1432ஆம் ஆண்டில் வீட்டுமனை, நஞ்செய் நிலம், கிணறு ஆகியன மானியமாக வழங்கப்பட்டன. இந் நூல் 574 பாடல்களை உடையது; 8 காண்டங்கள் உள்ளன. இந்நூலில் ஆசிரியரின் சைவசித்தாந்தப் புலமை யும், இலக்கண, இலக்கிய அறிவும் புலப்படுகின்றன.

இராவணனை வென்றபின் இவ்வழியாகச் சென்ற இராமன் அனுமனை ''எலே! வானரசூரா'' என்று இவ் விடத்தில் அழைத்ததால் எலவானசூர் என்ற பெயர் ஏற் பட்டதாகச் செவிவழிச் செய்தி உள்ளது. (தென் ஆற்காடு மாவட்ட கெஜட்டியர்.)

ஆங்கிலேயருக்கும் பிரெஞ்சு நாட்டவருக்கும் கர்நாடகப் போர்கள் நடைபெற்ற காலக் கட்டத்தில் இங்கு கோட்டை ஒன்று கட்டப்பட்டது. 1756 ஆம் ஆண்டில் இக்கோட்டையைத் தொத்தேய் என்ற பிரெஞ்சு தளகர்த்தன் கைப்பற்றினான். 1801 ஆம் ஆண்டில் இப் பகுதி ஆங்கிலேயரிடம் ஒப்படைக்கப்பட்டது. இன்றும் இவ்வூர் எலவானசூர் கோட்டை என்றே அழைக்கப் படுகிறது.

இத்தகைய பழம் சிறப்புகளைப் பெற்றுள்ள திருக் கோயில் சீரழிந்த நிலையிலுள்ளது, கோபுரத்தில்

செடிகள் முளைத்துள்ளன; செங்கற்கள் வெளியே தெரி கின்றன. கருவறையின் புறச்சுவரில் வெடிப்புக்கள் ஏற்பட்டுள்ளன. அருகிலுள்ள அக்ரஹாரத்திலிருந்து குருக்கள் காலையிலும் மாலையிலும் பூஜைகள் நடத்து கிறார். விழாக்கள் அதிகம் நடைபெறுவதில்லை. இங்கு பணிபுரியும் மெய்க்காப்பாளரின் பெருமுயற்சியால் வெளிப் பிரகாரமும் உட்பகுதிகளும் ஓரளவு சுத்தமாக உள்ளன. இக்கோயிலை விரைவில் புதுப்பிக்காவிடில் ஒரு அருமை யான வரலாற்றுப் புதையலை இழந்து விடும் அபாயம் உள்ளது. இறையருளால் விரைவில் திருப்பணிகள் நடைபெற வேண்டும்.



# 3. கபிலர் மலை

## (சேலம் மாவட்டம்)

## குழந்தை குமாரசுவாமி திருக்கோயில்

இயற்கையில் எங்கு காணினும் சிவசக்தியின் பொலிவு தென்படுகிறது. அன்பு, அறிவு, ஆற்றல் ஆகியன இணைந்து செயல்படும்போது மூப்பு, அழிவு போன்ற சக்திகள் பின் நோக்கிச் செல்கின்றன. இயற்கை ஓயாமல் தன்னையே புதுப்பித்துக் கொள்கிறது. இந்த இயற்கை யின் பொலிவில் முருகன் ஒளிர்கிறான். காலத்தினால் பழுதுபடாமல் இளமையின் பூர்ண பிம்பமாகப் புத்தம் புதியவனாகவே அவன் விளங்குகிறான். குமார வடிவத் தில் பொலியும் அழகைப் போற்றாதவர்கள் எவரும் இல்லை. புறத்தோற்றம் அளிக்கும் அழகுடன் தூய அன்பு, இன்சொல், ஒழுக்கம், வீரம் ஆகிய உயர்ந்த குணங் களால் உண்டாகும் உள்ளத் தூய்மையும் இணைந்து புலப்படுகின்றன. உயிர்வகைகளுள் மிக்க அழகைப் பெற்றுள்ள மயில் முருகனின் வாகனமாகும். இவ்வாறு எழிலும் இளமையும் நிறைந்தவனாக இருப்பதால் அழகு அல்லது முருகு எனப்படும் பொருளையுணர்த்தும் முருகன் என்ற பெயர் அவனுக்கு ஏற்பட்டது. முருகனுக்கு அளவற்ற வடிவங்கள் உள்ளன. அவற்றுள் இளமைத் தோற்றத்துடன் குழந்தைக் குமாரனாக அவன் காட்சி

தரும் திருத்தலமே கபிலர் மலை. இத்தலம் சேலம் மாவட்டத்தில் நாமக்கல் வட்டத்தில் வேலூரிலிருந்து (பரமாத்தி) 20 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. வேலூர், நாமக்கல் ஆகிய ஊர்களிலிருந்து பேருந்துகள் கபிலர்மலை வழியே செல்கின்றன.

முன்னொரு நாளில் கருவை என்ற ஊரில் கபிலை என்ற பெயருடைய காராம்பசு ஒன்று வாழ்ந்து வந்தது. அப்பகுதியில் வானம் பொய்த்துக் கடும் வறட்சி ஏற்பட்டதால் தாவரங்கள் அனைத்தும் வாடிப் போயின. உண்பதற்குப் புல் கூட கிடைக்காமல் அப்பசு வாடியது. நெடுநாள் சரிவர மேய்ச்சலுக்குரிய புல் கிடைக்காமையால் அப்பசு தனது ஊரை விடுத்துக் கானகப் பகுதிகளில் அலைந்தவாறு விற்கிரி என வழங்கப்படும் பினாகமலையை அடைந்தது. அம்மலைச்சாரலில் கொடும்புலி ஒன்று பசியால் வருந்தியது. தனக்கு நல்ல இரை கிடைத்ததெனப் பசுவைப் பற்றியது. பசுவின் நிலையை அறிந்த புலி அதனைத்தான் உண்ணாமல் விட்டது. சிலகாலம் அம்மலைப் பிரதேசத்தில் வாழ்ந்த பசு தனது உயிரை விடுத்தது. கபிலை என்ற பசு நற்கதியடைந்த அத்தலம் கபிலைமலை என்றும் அருகிலுள்ள ஊர் கபிலக்குறிச்சி என்றும் பெயர் பெற்றன. இச்சம்பவத்தைப் பிள்ளைப் பெருமாள் சிறைமீட்டான் என்பவர் இயற்றிய கபிலைமலைக் கோவை போற்றுகிறது.

"கருவைப் பதியிற் பசும்பிறந் தேகலங் காநிலையில்
நிருமித்து நிற்கின்ற நாளிற் கபிலை நெடும்பசியாற்
பருவிற்கிரி செல்லத் தன் பசியாற் புலி பற்றி விடப்
பெருமைக் கிரியும் பதியுங் கபிலை நன்பேர் பெற்றவே"

இவ்வாறு கபிலை என்ற பசுவுக்கு அருள்நல்கிய கபிலைமலை இன்று கபிலர்மலை என வழங்கப்படுகிறது.

கபிலர் மலையில் குழந்தைக்குமாரர் திருக்கோயில் அமைந்துள்ளது. சிறியமலை மீது ஏறிச்சென்று இக் கோயிலையடையலாம். வழியே படிக்கட்டுகள் சீராக அமைந்துள்ளன. செல்லும்போதே முருகப் பெருமானின் வாழ்வுடன் தொடர்புடைய சம்பவங்களை வண்ணச் சுதை யுருவங்களாக அமைத்துள்ளனர். மலையடிவாரத்தில் விநாயகர் சந்நிதியும், இடையில் இடும்பனின் சந்நிதியும் அமைந்துள்ளன. இவற்றைக் கடந்து கோயிலையடைய லாம். கோயிலின் முகப்பில் இராஜகோபுரம் இல்லை. முதலிலுள்ள விசாலமான மண்டபத்தில் சித்தி விநாயகரை வணங்கிய பின் அடுத்த சந்நிதியிலுள்ள காளஹஸ்தீஸ் வரரையும், கபிலாம்பிகை அம்மனையும் துதிக்கலாம். காளஹஸ்தீஸ்வரர் லிங்கவடிவில் காட்சியளிக்கிறார் இம் மண்டபத்தைக் கடந்து மூலஸ்தானத்தை யடைந்து மூலவ ரான குழந்தைக் குமாரஸ்வாமியை வணங்கலாம். முண்டிதம் செய்யப்பட்ட தலையுடனும், இடையில் கோவ ணத்துடனும், வேலாயுதத்துடனும் இப்பெருமான் தோற்றம் கொண்டுள்ளார். இவரது தோற்றம் பழனி யாண்டவரை ஒத்தவாறு அமைந்துள்ளது. இப்பெரு மானை இவ்வட்டாரத்திலுள்ள மக்கள் கண்கண்ட தெய்வ மாகவே போற்றிக் கொண்டாடுகின்றனர்.

இக்கோயிலில் வள்ளி, தேவசேனா சமேத சுப்பிர மணியர், வீரவாகு, சூலதேவர், விநாயகர், நவகிரகங்கள், சண்டேஸ்வரர், தென்முகக் கடவுள் ஆகிய திருவுருவங் களையும் கண்டு வழிபடலாம் மலையுச்சியிலுள்ள சிறு சந்நிதியில் உச்சி விநாயகரும், கபிலக்கல்லும் இடம் பெற்றுள்ளன மூலஸ்தானத்தின் மேல் அழகிய விமானம் அணி செய்கிறது.

இத்தலத்தில் பல தீர்த்தங்கள் வளம் சேர்க்கின்றன. மலையுச்சியிலுள்ள கபில தீர்த்தமும், வடபுறத்திலுள்ள பிரம தீர்த்தமும், கீழ்ப் புறத்திலுள்ள சரவணப் பொய்கை

யும் தென்புறத்திலுள்ள சண்முக தீர்த்தமும், மேற்புறத்தி லுள்ள பால்தீர்த்தமும், காவிரியாறும் கபில மலையிலுள்ள புண்ணியப் புனல்களாகும். இவ்வாறு மலையுச்சியிலும் சரிவுகளிலுமுள்ள தீர்த்தங்களை ''தடந்தோறும் வண்டு காம்போதி பாடுங் குழந்தைக் குமரர் கபிலை வெட்பு'' என்று கபில மலைக் கோவை குறிப்பிடும். ''வளமேவு திருக் காவேரி சூழங் குழந்தைக் குமரர் கபிலை வெற்பில்'' என்று காவிரியையும் இந்நூல் விவரிக் கிறது. நாவல் மரமே இங்கு தலவிருட்சமாகும்.

கபிலமலையையடுத்த வடகரையாற்றூர் என்ற பகுதி யில் வாழ்ந்த திருமலையிளைய நாயகன் எனப் பெயர் பெற்ற குறுநில மன்னன் குழந்தைக் குமாரனைக் குல தெய்வமாகக் கொண்டு பல திருப்பணிகளைச் செய்வித் தான். அல்லாளன் என்றும், வேட்டுவ குலத் தலைவன் வாளரசன் என்றும் இவனைப் போற்றுவர். கலியுக சகாப்தம் 5560இல் இவன் வாழ்ந்தான். தேவருக்கும் திரும்பாத காவிரியைக் கொங்கு நாட்டிற்கு வரவழைத்துத் திறை கொண்டோன் என்று புகழப் பெற்றான். திருச் செங்கோட்டு வேலவருக்குப் பல திருப்பணிகளைச் செய்த தால் இவனைத் 'திருச்செங்கோட்டுத் திருப்பணி 'மாலை' என்ற நூல் சிறப்பிக்கிறது. மதுரையையாண்ட திருமலை நாயக்க மன்னரிடம் இவன் சிற்றரசனாகத் திகழ்ந்தான்.

''மல்லார்புயத்தன் வடகரை யாறையில் வாளரசன்
அல்லாளன் சொற்றிரு மலையிளையானா
யகன்றனையாள்
கல்லாரமார்பர் குழந்தைக் குமாரர் கபிலை வெற்பில்
வில்லார் நுதலும் விறல்வேந்தும் மாளிகை மேவினரே''
(கபிலமலைக் கோவை பாடல் 77)

இக்கோயில் காலை 6 மணி முதல் நண்பகல் 1 மணி வரையிலும் மாலை 4 மணிமுதல் இரவு 8 மணி

வரையிலும் தரிசனத்திற்காகத் திறந்திருக்கும். தைப்பூசத் திருவிழா 12 நாட்களுக்கு வெகு விமரிசையாகக் கொண்

டாடப்படுகிறது. இத்திருவிழாவின் முதல்நாளன்று மாலையில் கொடியேற்றம் நிகழும். மூன்றாம் நாள் அன்னவாகனத்திலும், நான்காம்நாள் ரிஷப வாகனத்திலும், ஐந்தாம் நாள் மயில் வாகனத்திலும், ஆறாம்நாள் யானை வாகனத்திலும், எட்டாம் நாள் குதிரை வாகனத்திலும், பதினொரன்றாம் நாள் சிம்ம வாகனத்திலும், பன்னிரண்டாம் நாள் ஆட்டுக்கடா வாகனத்திலும் சுவாமி புறப்பாடு நடைபெறும். தினசரி சிறப்பு அலங்காரங்களுடனும் வாண வேடிக்கைகளுடனும் வள்ளி, தெய்வயானை சமேதராக, முருகப் பெருமான் பவனி வருகிறார். ஏழாம் நாளன்று திருக்கலியாணம், இரதோற்சவம், விமானக் காட்சி ஆகியனவும், ஒன்பதாம் நாளன்று தேரோட்டமும் நிகழும். இவ்விழாவில் ஏராளமான பக்தர்கள் பங்கேற்று இறையருளைப் பெறுவர். இவ்விழாவில் பங்கேற்க வெளியூரிலிருந்து வரும் பக்தர்கள் தங்குவதற்காக நன்செய் இடையாற்றுவள்ளல் கந்தசாமி கவுண்டர் என்பவரால் ஒரு மடம் கட்டப்பட்டது.

இப்பதிக்குரிய வடமொழித் தலபுராணத்தில் கபில முனிவர் இம்மலையில் பெருவேள்வி செய்து பின் தவமியற்றி வந்தாரெனக் கூறுகிறது, கபில முனிவர் தவமியற்றிய இத்திருத்தலம் கபிலாசலம் என்று வழங்கப்பட்டதாகவும் அந்த நூல் செப்புகிறது. கபிலரின் பெயரைத் தாங்கி நிற்கும் கபில தீர்த்தமும், மலையுச்சியிலுள்ள கபிலக் கல்லும் இச்செய்திக்குச் சான்று பகிர்கின்றன.

சங்க காலப் புலவரான கபிலர் சேரமன்னன் செல்வக் கடுங்கோ வாழியாதனிடம் நூறாயிரம் காணம் பொன்னும் நாடும் பரிசாகப் பெற்றவுடன் இம்மலையில் தங்கி வேள்வி புரிந்திருக்கக் கூடும். கபிலரின பாடல்களால் அகமகிழ்ந்த அம்மன்னன் 'நன்றா' என்ற குன்றின் மீது ஏறி நின்று அவர் கண்ணுக்குத் தென்பட்ட நாட்டையெல்லாம் பரிசாக

அளித்ததாகப் பதிற்றுப்பத்து என்ற நூல் உரைக்கிறது. "சிறுபுறமென நூறாயிரங் காணங் கொடுத்து நன்றா வென்றும் குன்றேறி நின்று தன் கண்ணிற்கண்ட நாடெல் லாம் காட்டிக் கொடுத்தான் அக்கோ" (பதிற்றுப்பத்து)

அவ்வாறு மன்னன் ஏறி நின்ற நன்றா என்ற குன்று கபிலை என்ற பசுவால் புனிதமாக்கப்பட்ட கபிலமலையாக இருக்கக் கூடும் என்று கருத வாய்ப்புண்டு. இதற்கேற்ப கபிலையை அடுத்து அமைந்துள்ள ஆறுநாட்டான் மலையில் கடுங்கோ வாழியாதன் என்ற சேரலாதனின் கல்வெட்டு கிடைத்துள்ளது.

இம்மலை செந்நிறத்தைப் பெற்றிருப்பதால் கபில மலை எனப் பெயர் பெற்றதாகவும் ஒரு கருத்து உள்ளது. கபிலம் என்ற சொல் செந்நிறத்தைக் குறிக்கும்.

கலியுக சகாப்தம் 4740இல் (சுமார் 400 ஆண்டு களுக்கு முன்னர்) வாழ்ந்த பிள்ளைப் பெருமாள் சிறை மீட்டான் கவிராயர் என்பார் கபிலமலை மீது கோவை என்ற சிற்றிலக்கியத்தை இயற்றியுள்ளார். பாகை என்ற நகரத்தில் இவர் பிறந்தார். மல்லைச் சோழிச்சுரக் கோவை, அர்த்தநாரீச்சுரச் சந்திரசேகர மாலை போன்ற வேறு நூல்களையும் இவர் யாத்துள்ளார்.

இந்நூலில் கபிலமலையின் இயற்கை வனப்பு பற்றிய குறிப்புகள் இடம் பெற்றுள்ளன. காவிரி நதி அம்மலை யைக் சுற்றி ஓடுவதை "காவேரி சூழும் குழந்தைக்குமாரர் கபிலைவெற்பு" என்ற வரிகளால் குறிப்பிடுகிறார். அம் மலை சோலைகளால் சூழப் பெற்று இயற்கை எழிலுடன் மிளிர்கிறது. [துவலையதாகக் கனிதேன் மலர் சொரி சோலை சுற்றுங்கபிலை (காப்பு), பூங்கா விறை மேவும் குழந்தை குமாரர் கபிலை வெற்பு, (2), காவாசம் வீசும் குழந்தைக்குமாரர் கபிலை வெற்பு (4)] அங்கு தென்றல்

காற்று நாள்தோறும் வீசிக் குளிர்ச்சியை உண்டாக்கு கிறது. (மலையக்கால் நாளும் வீசும் குழந்தைக் குமாரர் கபிலை வெற்பு, (14)) அங்கு வண்டினங்களின் ரீங்காரம் நாள்தோறும் கேட்கும். (பண்முகாரியை நோக்க வளி பாடும் குழந்தைக்குமாரர் கபிலை வெற்பு, (39)), மலையைச் சார்ந்துள்ள சோலைகளில் மயில்கள் மகிழ்ச்சியுடன் நடனம் புரிகின்றன; சுரும்புகள் பாட்டிசைக்கின்றன; பறவைகள் இடைவிடாமல் ஓம் என்ற ஒலியையெழுப்பு கின்றன. இவற்றால் அப்பகுதி கூத்தியர் கூத்தாடும் நாட்டியசாலை போல விளங்கியது. அம்மலையைச் சுற்றி வாழை மரங்கள் வளர்ந்திருந்தன. அங்கு வானுலகிற்கே யுரிய பஞ்ச தருக்களும் எழு மேகங்களும் நெருங்கி வசிக் கின்றன. ("ஐந்தருவும் எழுகாருஞ் செறியுங் குழந்தைக் குமாரர் கபிலை வெற்பு" (56))

குழந்தைக் குமாரராகிய தெய்வத்தைக் கபிலமலைக் கோவையில் பலமுறை ஆசிரியர் போற்றித் துதிக்கிறார். குமாரர் உலகிலுள்ளோரைக் காத்து அருளும் பண்பினர். அவர் உலகைத் தாங்கும் வஜ்ரக்கம்பம் போல் விளங்கு பவர்.

"சகந்தாங்க வச்ரக் கம்பமதான குழந்தைக் குமாரர் (1))
புவிக்குக் காவலராகத் திகழ்ந்து அதனைப்
பாதுகாப்பவர் (அரும்புவியாள் காவலரேத்துங்
குழந்தைக் குமாரர்". (20)) உலகைக் காத்தருளவந்த
குழந்தைக்குமாரர் (76) காசினியோரெண்
குழந்தைக் குமாரர் (37)

தேவர்களின் இடர்களைக் களைந்து அவர்கட்கு நன்மைகளை அளிக்கவல்லவர். இதனால் வானவர்கள் அவரைப் போற்றித் துதிக்கின்றனர்.

(அமரேசற்கென்றுங் கைத்தனமான குழந்தைக் குமாரர்; அமரரைக் காக்குங் கருணைக் குழந்தைக்

குமாரர் (68)) இமையோர் தனது கௌவைத் தவிர்த்த குழந்தைக் குமாரர் (89)

குழந்தைக் குமாரர் பிறப்பின் வினைகளை நீக்கியருள் புரிவதால் ஆன்றோரும் அவரைத் துதிக்கின்றனர்.

(''முப்பொருளுமிசை கற்றவர் போற்றுங் குழந்தைக் குமாரர் (29), ஊழ்வினையைக் கருகும்படி செய் குழந்தைக் குமாரர் (43),) இத்தகைய பெருமான் எதிரி களையும், தீய அசுரர்களையும் அழித்து நன்மையை நாட்டவல்லவர்.

''அசுரர் கருப்ப மறுக்குங் குழந்தைக்குமாரர்'' (74),

''பகைவர் கடற்கழிப் பறவெய்த குழந்தைக் குமாரர் (88)

இத்தகைய குமரக்கடவுளைப் பூவுலகோரும் அரசர் களும் தேவர்களும் போற்றித் துதிக்கின்றனர். ''தொழு தடியார் கருதிய போற்றுங் குழந்தைக்குமாரர் (64)

''காசினி போற்றுங் குழந்தைக் குமாரர்'' (92)
''தவம் புவிக்குட் காரணமான குழந்தைக் குமாரர் (95)
கொற்றவர் போற்றுங் கபிலைக் குழந்தைக் குமாரர் (102)
காரிற் சிறந்த குழந்தைக் குமாரர் (28)

இத்தகைய குணங்களுடைய குழந்தைக் குமாரரின் உடலுறுப்புக்கள், அவயங்கள் பற்றிய தகவல்களையும் ஆசிரியர் குறிப்பிடுகிறார். இவற்றையே தசாங்கங்கள் என்று சிறப்பிப்பது உண்டு. அவரது உருவம் ஞானவடி வானது. (''ஞானக்குழந்தை குமாரர்'' (42).) அவருக்குப் பன்னிரண்டு கண்கள் உரியன. (மலர்ப் பன்னிரண்டு கண்ணார் (7), மலர்க்கண்ணாறிரண்டர் (67) மலர்க் கண்ணான்கு மூவர் (8))

அவரது காதுகளில் விலை மதிப்புமிக்க அணிகள் ஒளிவிடு கின்றன. நவரத்தின மணிக்காதாதிரண்டும் மலர்

போன்ற பன்னிரண்டு கரங்களையும் அவர் பெற்றிருப் பார். ''மலர்ப் பன்னிரண்டும் கையம் புயத்தர் (100) இரண்டாறு மலர்க்கரவர் (57), வலுவான தோள்களும் அவர் பெற்றுள்ளார் (கடிப்பொற்புயத்தர் (50)) குவளை, கடப்பம் போன்ற உயர்ந்த தன்மைகளையுடைய மலர்கள் அவரது மார்பில் மாலைகளாக அணி செய்கின்றன.

குவளைக் குரவங் கடம்பணி மார்பர் (5)
கடப்பர் தொடைசேர் கடியார் புயத்தர் (19)
கல்லார மார்பர் (77), அலங்கல் கமழ் பொற்புயத்தர் (89)

களபம், சந்தனம் ஆகிய கலவைகளும் முப்புரி நூலும் அவரது மார்பில் எழில் கூட்டுகின்றன. 'தார்ப் புயத்திற் களபமே சேருங் குழந்தைக் குமாரர், (களபம் - கலவைச் சந்தனம்) பொற்கலமே பிணையுங் குழந்தைக் குமாரர் (4); மார்பிற் பிரகாசப் புரி நூற் குழந்தைக் குமாரர் (60)

வேற்படையே அவருக்குரிய ஆயுதமாகக் கரங்களில் மிளிர்கிறது. ''வேற்கைக் குழந்தைக் குமாரர், கைக்கான சத்திக் குழந்தைக் குமாரர் (79)

சூரனையழித்து வெற்றி வாகை சூடிய மாவீரர் ஆவார்
(சூருங் கௌவிய வேற்கைக் குழந்தைக் குமாரர் (3))
வெஞ்சூரனிருக்கையை யழிக்குங் குழந்தைக் குமாரர் (73)

செம்மையான சேவற் கொடியை அவர் பெற்றுள்ளார். ('கைக்கலாயுதத்தர்' (32). அழகான செங்கட்கலாயுத்தர் (58). செங்கமலக்கை வாரணத்தர் (33)) விரைந்து செல்லும் அழகிய மயில் அவருக்குரிய ஊர்தியாகும்.

கந்தபுராணத்தில் இடம் பெற்றுள்ள சில சம்பவங் களைக் குழந்தைக் குமாரருடன் ஒப்புமைப்படுத்தி ஆசிரியர் புனைந்துள்ளார். வள்ளி வனத்தில் கால்கள் நோவு எடுக்குமாறு நடந்து சென்றார்.

(வள்ளிக்காய் வனத்திற்கால் நோவ வந்த
குழந்தைக் குமாரர் (6))
சங்கரனுக்கு மந்திரத்தை உபதேசித்துத் தகப்பன்
சுவாமி எனப் புகழப் பெற்றவர்
(சங்கரற் கருணைக் கன்னமதிற் சொல்
குழந்தைக்குமாரர் (13))
உமையன்னையின் முலைப்பாலை உண்டு மகிழ்ந்தவர்
(உமைமுலைப்பால் கௌவியே யுண்ணுங்
குழந்தைக்குமாரர் 101))
சூரபத்மனின் நகரை அழித்து வாகைசூடியவர்.
''சூரனிருக்கையை யழிக்குங் குழந்தைக்குமாரர்''

இங்ஙனம் கபிலமலைக் கோவையில் இத்திருத்தலம் பற்றியும், இங்கு எழுந்தருளியுள்ள இறைவன் பற்றியும் அரிய பல குறிப்புகள் கிடைத்துள்ளன.

சீவெல் பாதிரியாரின் குறிப்புக்கள் மூலம் இவ்வூரில் இரு செப்பேடுகள் இருந்ததாக அறியலாம். கி. பி. 1574 ஆம் ஆண்டைச் சேர்ந்த செப்பேடு மூலம் இவ்வூர் மக்களால் ஒரு மண்டபம் கட்டப்பட்டதாக அறியலாம். மதுரை திருமலை நாயக்கர் கோயிலுக்குத் தானம் அளித்த செய்தியை மற்றொரு செப்பேடு தெரிவிக்கிறது. முருகப் பெருமான் திருக்கோயிலின் படிகளில் இரு கல்வெட்டுக்கள் படியெடுக்கப்பட்டுள்ளன.

ஸ்ரீரங்க தேவமகாராயரின் ஆட்சிக் காலத்தில் (1834), சங்கரன் என்பான் கோவிலுக்குச் செல்ல படிக்கட்டுகள் கட்டினான். செட்டியார் ஒருவர் படிகளையமைத்த செய்தியை மற்றொரு கல்வெட்டு தெரிவிக்கிறது.

அஞ்சாமல் தம் பொருளை அள்ளியள்ளித் தருகின்ற
மிஞ்சுபுகழ் பாலசுப்ரமணியனுக்கு ஈடாகத்
தஞ்சமலாத் திருமகளும் கபிலர்மலைக் கற்பகமே!
தஞ்சமென பொருளீயும் தரும குணம் இனித்திடுமே
(கபிலர் மலை அந்தாதி)

# 4. காரைக்குடி

(பசும்பொன் திருமகனார் மாவட்டம்)

## கொப்புடையம்மன் திருக்கோயில்

அருள் மணக்கும் கொப்புடையாள் பொருள் மணக்கும்
    காரை நகர் அமைந்த தேவி
குரு மணக்கும் சீமையெல்லாம் குலம் மணக்கும்
    சீலங்கள் கொழித்த தாயே
திருமணக்கும் இல்லங்கள் தெரு மணக்கும்
    தொழில் யாவும் திளைக்கும் அம்மா
தரு மணக்க வீடெல்லாம் தமிழ் மணக்கும்
    நலமெல்லாம் தருவாய் அம்மா!

(பொற்கிழி கவிஞர் காசி ஸ்ரீ அரு. சோமசுந்தரன்)

உலக வரலாற்றின் ஏட்டைப் புரட்டினால் தாய்க்கே அனைத்திலும் முதலிடம் அளிக்கப்பட்டது தெளிவாகும். வரலாற்றுக்கு முற்பட்ட சிந்துவெளி நாகரீகக் காலத்திலும் பெண் தெய்வங்கள் வழிபடப்பட்ட செய்தி கிடைத்துள்ளது. காலப் போக்கில் இயற்கையை அன்னையாக வழிபடும் பழக்கம் ஏற்பட்டது. இது போலவே பத்தினிப் பெண்களையும் தெய்வமாக வழிபடும் பழக்கம் உருவாயிற்று. கிராமத்தின் பெயருடனோ அல்லது சூழ்நிலையுடனோ

இணைந்த கிராம தேவதைகளின் வழிபாட்டிற்குத் தாய் வழிபாடே வித்திட்டது.

நமது நாட்டில் அதிக அளவில் மக்கள் கிராமப் பகுதியில் வாழ்கின்றனர். விவசாயம், நீர், வயல், ஆகியவற்றுடன் தொடர்புடையனவாகவே இறைவழிபாடு கிராமப் பகுதிகளில் துவங்கியது. கிராம மக்கள் வழிபடும் தெய்வங்களை யோகினி எனக் குறிப்பிடுவர்; இவை 64 என்று கணக்கிட்டுள்ளனர். ஆதிகாலத்தில் இவர்களை உக்கிர சொரூபிகளாகவே வழிபட்டு வந்தனர். இவ்வாறு கிராம மக்கள் மனதார வழிபடும் பெண் தெய்வங்களுள் மாரியம்மனே பிரதான இடத்தைப் பெற்றுள்ளார்.

கிராமங்களில் வடகிழக்கு, தெற்கு, மேற்கு ஆகிய திசைகளில் மாரியம்மன் ஆலயங்கள் அமைந்திருக்கும். சில இடங்களில் வேப்ப மரத்தடியில் ஒரு செங்கல் மீது மஞ்சள் பூசி, குங்குமம் இடப்பட்டு அதனையே மாரியம்மனாக வழிபடுவதுண்டு. வேறு சில இடங்களில் வெறும் முகமாகவோ அல்லது சிலையாகவோ மாரியம்மனை இடம் பெறச் செய்வதுண்டு. மழை பெய்து வளத்தைப் பெருக்குபவளையே தமிழகத்தில் மாரி என்று வழிபடுவதாகக் கூறுவர். சில பகுதிகளில் வெறும் சிரத்திற்கு நாகம் குடை பிடிப்பது போலமைத்துப் பூசிப்பதும் உண்டு. ஐயனார், மதுரை வீரன் போன்ற தெய்வங்களையும் அருகில் வைப்பது உண்டு. மகமாயி, மஹாமாரி, ரேணுகா தேவி, சீதலாதேவி, கங்கம்மா, முத்தாலம்மா என்று பல்வேறு பெயர்களுடன் இதே அன்னையை வழிபடுகின்றனர்.

இவ்வாறே காலத்திற்கும், இடத்திற்கும் ஏற்றாற் போல் பல்வேறு உருவங்களும், பெயர்களும் கொண்டு அம்பிகை அருளாட்சி நடத்துகிறார். நவமாரி, சிவமாரி, தவமாரி, கருமாரி, முத்துமாரி, தண்டுமாரி, அருள்மாரி,

கவிமாரி போன்றன மாரியம்மனின் பல்வேறு அம்சங்களே. இவ்வாறு அந்தந்த வட்டாரத்தில் தனிப் பெயருடன் பிரசித்தி பெற்று விளங்கும் அம்மனின் ஆலயங்கள் பக்தர்களை அதிக அளவில் கவர்ந்துள்ளன. இத்தகைய தலங்களுள் காரைக்குடியும் ஒன்று. இங்கு அருளாட்சி நடத்துபவள் கொப்புடை அம்மன். பசும்பொன் முத்துராமலிங்கத் திருமகனார் மாவட்டத்தில் திருப்பத்தூரிலிருந்து 24 கி. மீ. தொலைவில் இவ்வூர் அமைந்துள்ளது.

ஊரின் மையப் பகுதியில் கிழக்கு நோக்கியவாறு கொப்புடையம்மன் கோயில் அமைந்துள்ளது. அமைப்பால் சிறியதாக இருப்பினும் இக்கோயில் அம்பிகையின் அருள் வெள்ளத்தில் நீராடி, பக்தர்களுக்கு மன அமைதியையும், காரிய சித்தியையும் அளிக்கவல்லது. நுழைவாயிலிலுள்ள மூன்று நிலை க்கோபுரம் தெய்வத் திருவுருவங்களைப் பெற்று வண்ணமயமாகத் தோற்றம் கொண்டுள்ளது. இக்கோபுரத்தைக் கடந்து சோபனா மண்டபத்தையடையலாம். இம்மண்டபத்தின் இடப்புறத்தில் கருப்பர், விநாயகர் ஆகியோரின் சந்நிதிகளும், வலப்புறத்தில் தண்டபாணியின் சந்நிதியும் உள்ளன. இவர்களைத் துதித்தவாறு இரண்டாவது வாயிலையும், அர்த்த மண்டபத்தையும் கடந்து மூலஸ்தானத்தையடையலாம்.

கருவறையில் கொப்புடையம்மனின் திருக்காட்சியைப் பெறலாம். கருவறையில் பீடம் மட்டுமே உள்ளது. மூல விக்கிரகம் இல்லை. உற்சவ விக்கிரகமே மூலவராக இருந்து பக்தர்களுக்கு அருள்பாலிப்பது இக்கோயிலுக்கேயுரிய சிறப்பான அம்சமாகும். இத்திருவுருவம் நான்கு கரங்களுடன் காட்சியளிக்கிறது. மேல் வலது கரத்தில் சூலமும், மேல் இடது கரத்தில் கபாலமும், கீழ் இடது கரத்தில் பாசக் கயிறும் இடம் பெற்றுள்ளன. கீழ் வலது கை அபயமளிக்கும் நிலையில் காட்சியளிக்கிறது. பொதுவாகக் காளியம்மன் போன்ற கிராம தேவதைகள்

வடக்கு நோக்கியவாறே எழுந்தருளியிருப்பது வழக்கம். கொப்புடையம்மன் கிராம தேவதையான போதிலும், கிழக்கு நோக்கியவாறு தோற்றம் கொண்டுள்ளது குறிப்பிடத்தக்க அம்சமாகும்.

பண்ணிறைந்த தமிழ்ப் படிப்பார் ஒருபால் நிற்க
பாசமுடன் கைகுவிப்பார் ஒரு பால் நிற்க
கண்ணிறைந்த பொருளுன்னைக் கண்களாலே
கண்கண்டு மகிழ்ந்திடுவார் ஒரு பால் நிற்க
வண்ணமுறும் இசை முழங்க வியங்குகாரைக்
குடிவளரும் வாழ்முதலே! கொப்பர்த்தாளே!
விண்ணவர்க்கும் அருள்தேவி! ஆடாய் ஊஞ்சல்
வியன் தமிழர் குடிவாழ ஆடாய் ஊஞ்சல்!

(காப்பியக் கவிஞர் நர். மீனவன்)

கொப்புடைத்தாயே போற்றி குலமகளாம் கொடியே
போற்றி
செப்பரிய தேவி போற்றி திருமகளின் அருளே போற்றி
மெய்ப் பொருளின் ஒளியே போற்றி மேலான பணியே
போற்றி
இப்பெரிய காரைநகர்க்கு ஏற்றத்தை நல்கும் தாயே.

(கொப்புடையவள் துதிமாலை - நா. நாராயணன்.
ஈப்போ, மலேசியா)

தீயின் செம்மை ஒளியானாய்!
தீண்டும் தென்றல் சுகமானாய்!
தோயும் வையைப் புனலானாய்!
தூய்மை வான வெளியானாய்!
ஆயும் அன்பர்க் கிசையானாய்!
அறிஞர்க்கென்றும் அரிதானாய்!
ஆயன் தங்கை ஆனவளே
அம்மா! கொப்பே! துயில்களைவாய்

(காரைக்குடி கொப்புடை நாயகி திருப்பள்ளியெழுச்சி-
சிவநெறிக் கவிஞர். இராகவன்முத்து பி. எஸ்.ஸி.,)

கோப்பு என்ற சொல்லுக்குச் சேகரமாகக் காப்பவள் என்ற பொருள் உண்டு. கோப்பாக மக்களைப் பாதுகாத்து வந்த அன்னைக்குக் 'கோப்புடையாள்' என்று பெயர் ஏற்பட்டிருக்கும். அதுவே நாளடைவில் 'கொப்புடையாள்' என்று பேச்சு வழக்கில் மாறியிருக்கலாம். முகமதிய அரசர்கள் காலத்தில் இந்து ஆலயங்களிலுள்ள தெய்வத் திருவுருவங்களுக்குப் பங்கம் நேரிட்டது. பாதுகாப்புக் கருதி தேவியின் திருவுருவத்தை வழிபாடு முடிந்தவுடன் பழைய, முதிய, பெருத்த வேப்ப மரத்தடியில் பெரும் பொந்து ஒன்றில் சிலகாலம் ஒளித்து வைத்தனராம். இவ் வண்ணம் ஒப்படை செய்யப்பட்டதால் 'ஒப்புடையாள்' என்ற பெயர் ஏற்பட்டு அதுவே காலப்போக்கில் கொப் புடையாள் என மருவியிருக்கலாம். கொப்பு என்ற காத ணியை அணிந்திருந்ததால் கொப்புடையம்மன் என்று பெயர் ஏற்பட்டதாக மற்றொரு கருத்து உண்டு. பெயர்க் காரணம் எதுவாக இருப்பினும் மாரியாத்தா, காளி யாத்தா என்று அழைப்பது போலவே கொப்பாத்தா என்று உரிமையுடன் விளிக்கப்படும் இந்த அம்மன் சிறந்த வரப் பிரசாதி என்பதில் ஐயமில்லை.

சுமார் 300 ஆண்டுகளுக்கு முன் ஒரு குட்டையிலிருந்து இந்த அம்மனின் விக்கிரகத்தைக் கண்டெடுத்த இடத்தில் கோயில் எழுந்ததாகவும் கூறுவர். மழைக் காலத்தில் இவ்விடத்தைச் சுற்றி நீர் தேங்கி விடுவதால் நகர்ப்புறத் தில் கோயில் கட்டி, அதில் உற்சவ விக்கிரகத்தை நிறுவினர். ஆண்டுதோறும் திருவிழாவின் போது உற்சவ ரைச் சப்பரத்திலிட்டு ஆதியில் அம்மன் கிடைத்த இடத் திற்கு எடுத்துச் செல்வது வழக்கம். இத்திருவிழா துவங்கு முன்னர் 'செங்கதேட்டு' என்ற சடங்கு நிகழும். குட்டையில் இரு இடங்களில் பூசாரி குழிகளைத் தோண்டி, இரு பானைகளில் நீரைச் சேகரித்து, மூலஸ்தானக் கோயில்களில் பத்து நாட்கள் பத்திரப்படுத்துவர். கருவ

றையில் இப்பானைகளை வைத்தவுடன் மழை பெய்யும் என நம்புகின்றனர்.

இப்பகுதியைச் சுற்றியுள்ள கல்லுக்கட்டி போன்ற இடங்களை உள்ளடக்கிய பகுதியில் பல அந்தணக் குடியிருப்புகள் இருந்தன. அக்காலத்தில் இங்கு கிருஷ்ணன் கோயிலை அந்தணர்கள் பேணி வந்தனர். இப்பகுதியைப் பதினேழாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் சிவகங்கை ஜமீந்தார்கள் தங்களது ஆட்சிக்குள் கொணர்ந்தனர். சில காலத்திற்குப் பின்னரே தேவ கோட்டை ஜமீன் தோன்றியது. தேவகோட்டை ஜமீந் தார்கள் இப்பகுதியைச் சிவகங்கை ஜமீந்தார்களிடம் 'கவுல்' வாங்கி வைத்திருந்தனர். தேவகோட்டை ஜமீந் தார்கள் காலத்தில் கொப்புடை அம்மன் கோயிலைப் போற்றினர். இக்கோயில் சுமார் 200 ஆண்டுகளுக்கு முன்னரே இன்றுள்ள அமைப்பில், ஓரளவு பெரிய நிலையையடைந்தது.

பொன்னும் மணியும் அணியாகப்
பொலியும் செல்வக் கொப்புடையாய்
கண்ணும் கருத்தும் பதமலரில்
களிப்பாய் உடைய நல்லவரை
எண்ணிப் புரந்தே அரசாக்கி
இனிமை புரியும் கருணையினால்
பொன்னில் பொலியும் திருத்தேரில்
புகழார் வீதி வலம் வருவாய்!

('தேரில் தெரியும் கொப்புடையாள்'
-கவிஞர் இராகவன் முத்து).

காரைக்குடிக்குத் தென்புறத்தில் 2 கல் தொலை விலுள்ள செஞ்சை சங்கராபுரம் என்ற பகுதியிலுள்ள காட்டம்மன் கோயிலில் எழுந்தருள் திருமேனியாக (உற்சவர்) விளங்கிய விக்கிரகத்தை அக்காலத்தில்

எடுத்துவந்து கொப்புடையம்மன் கோயிலில் பிரதிஷ்டை செய்ததாகப் புறச்சான்றுகள் மூலம் அறியலாம். அக்காலத்தில் இப்பகுதியை அரசாண்ட வேந்தன் தினந்தோறும் தனது வழிபடு முறைகளையும், தனது வரவு, செலவு கணக்குகளையும், ஆட்சி பற்றிய விவரங்களையும் கொப்புடையாளிடம் ஒப்புவித்து வந்த தாகச் செவிவழிச் செய்தி வழக்கிலுள்ளது.

கொப்புடையம்மனின் தோற்றம் குறித்துச் சில கர்ண பரம்பரைக் கதைகள் வழக்கிலுள்ளன. செஞ்சை சங்கராபுரம் என்ற கிராமத்திலுள்ள காட்டம்மனும், காரைக்குடி கொப்புடையம்மனும் சகோதரிகளாகக் கருதப்படுகின்றனர். காட்டம்மனுக்கு ஏழு மக்கள் இருந்தனர். அம்மக்கள் கொப்புடையம்மனைச் சந்திப்பதைக் காட்டம்மன் விரும்பவில்லை. இதனால் அவர்களை ஒரு கூடையில் அடைத்தாளாம். இந்நிகழ்ச்சியை அறிந்து மனம் வருந்திய கொப்புடையம்மன் காட்டம்மனைக் கல்லாக மாறுமாறு சபித்தாள். இதனால் ஏற்பட்ட சினத்தால் கொப்புடையம்மன் காரைக்குடி சென்று அங்குள்ள கோயிலில் அமர்ந்தாள்.

கர்ரைக்குடியைச் சுற்றியுள்ள பள்ளத்தூர், பில்லமங்கலம், கோனாபட்டு ஆகிய கிராமங்களிலுள்ள கிராம தேவதைகளைக் காட்டம்மன், கொப்புடையம்மன் ஆகியோரின் சகோதரிகளாகக் கருதுகின்றனர். அனைத்து கிராம தேவதைகளையும் உயர்வு, தாழ்வு பார்க்காமல் ஒன்றாக இணைந்து வழிபட வேண்டும் என்ற நோக்கத்துடன் இந்த உறவு முறையை ஏற்படுத்தியிருக்கலாம்.

கல்லல் என்ற ஊரையடுத்துள்ள சிவரக்கோட்டையிலிருந்த அம்மனின் சிலை ஒன்று பழைய செஞ்சை என்ற இடத்திற்கு எடுத்து வரப்பட்டது. காலப்போக்கில் அத்திருவுருவம் பூமியில் புதையுண்டது. இவ்விடமே

ஆதியில் சங்கராபுரம் என அழைக்கப்பட்டது. காலப் போக்கில் இப்பகுதி வளர்ந்து பெரிய கிராமமாகியது. ஊர் விரிவடைந்தபோது தற்போதுள்ள பகுதிக்கு அந்த விக்கிரகம் கொண்டு வரப்பட்டது.

அம்மனின் திருவுருவம் பூசிக்கப்பட்ட காலத்தில் அவ்விடத்தில் வாழ்ந்து வந்த ஒரு இடையர் குலப் பெண் அம்மன் மீது பெரும் பற்று கொண்டிருந்தாள். தான் ஈடு பட்டுள்ள மோர் வியாபாரம் சிறப்பாக நடைபெற்றால் அதன் மூலம் பெரும் வருவாயில் ஒரு பகுதியைக் கோயில் திருப்பணிக்காகச் செலவிடுவதாக வேண்டுதலை மேற் கொண்டிருந்தாள். தாயின் நல்லருளால் அவளது வியாபாரம் தழைத்தோங்கி, அவளது பொருட் செல்வமும் பெருகியது. வாக்கிற்கு ஏற்றவாறு கோயிலுக்கு அருகே ஒரு குளத்தை ஏற்படுத்திச் செம்புராங்கல்லால் கட்டி வைத்தாள். இப் பெண் கல்லுக்கட்டி என்ற இடையர் குலத்தைச் சேர்ந்தவள். ஒரு வகைக் கல்லை அழகாகத் தேய்த்து, மெருகேற்றி அதனையே தாலியாக இக்குலத் தைச் சேர்ந்த பெண்கள் அணிவர். அப்பெண்ணின் திருப் பணியைப் பெற்ற இக்குளம் ‘கல்லுக்கட்டி திருக்குளம்’ எனப் பெயர் பெற்றது. அதனைச் சுற்றித் தோன்றிய வியாபார மையம் கல்லுக்கட்டி என நாளடைவில் பெயர் பெற்றது.

இக்கோயிலில் நாள்தோறும் காலசந்தி, உச்சி காலம், சாயரட்சை, அர்த்த ஜாமம் ஆகிய நான்கு காலங்களிலும் காரண ஆகமப்படிப் பூஜைகள் நடைபெறுகின்றன. கிராம தேவதையான ஒரு தெய்வத்திற்கு ஆகம முறைப்படி, அந்தணர்களால் வழிபாடு நடைபெறுவது இத்தலத் திற்கே உரிய ஒரு தனிச் சிறப்பு ஆகும்.

சித்திரையில் நடைபெறும் செவ்வாய்த் திருவிழாவே இக்கோயிலில் மிகவும் பிரசித்தி பெற்றது. ஆண்டுதோறும்

சித்திரை மாதம் இறுதிச் செவ்வாய்க்கிழமையன்று துவங்கி வைகாசி முதல் வாரம் முடிய 10 நாட்களுக்கு வெகு விமரிசையாக நடைபெறும். பத்து நாட்களிலும் இரவில் இன்னிசை நிகழ்ச்சிகளும், நாதஸ்வரக் கச்சேரி களும் உண்டு. ஏழாம் நாளன்று அம்மன் வெள்ளிக் குதிரை வாகனத்திலேறி பவனி வருவதுண்டு. எட்டாம் நாளன்று தேரோட்டமும், பத்தாம் நாளன்று தெப்போற் சவமும் மிக விமரிசையாகக் கொண்டாடப்படும். இத்திரு விழாவை முன்னிட்டுக் காப்புக் கட்டிய நாள் முதல் விழா முடியும் நாள் வரை இவ்வூர் மக்கள் வெளியூர் செல்வ தில்லை. இத்திருவிழாவைக் காண வெளியூர்களி லிருந்து ஏராளமான பக்தர்கள் வருவதுண்டு.

மார்கழி மாதம் முழுவதும் காலையில் திருப்பள்ளி யெழுச்சி சிறப்பாக நடைபெறும். புரட்டாசி மாதத்தில் பத்து நாட்களுக்கு நவராத்திரி விழா கோலாகலமாகக் கொண்டாடப்படும். சித்திரை வருடப் பிறப்பு, பூச்சொரி தல், மார்கழி நவசக்தி அர்ச்சனை ஆகியனவும் சிறப்பாக நிகழும். ஆடி முதல் செவ்வாயன்று புஷ்ப வியாபாரி களின் முயற்சியால் மண்டகப்படியும், தை இறுதி வெள்ளிக் கிழமையன்று கோடி அர்ச்சனை ஞாபகார்த்த மண்டகப் படியும், பங்குனி மாதத்தில் இந்து வர்த்தக சங்கத்தின் சார்பில் தாராபிஷேகமும் நடைபெறும். சித்திரை வருடப் பிறப்பன்று இந்து வர்த்தக சங்கத்தினரின் உபயத்தில் அம்மன் வெள்ளிக் குதிரையில் பவனி வருவதுண்டு. அம்மனுக்கு அன்று விலையுயர்ந்த நகைகள் அணிவிக்கப் படும். அன்று இரவு முழுவதும் இன்னிசை நிகழ்ச்சிகள், கலைநிகழ்ச்சிகள் ஆகியன உற்சாகத்துடன் நடைபெறும்.

கோயிலில் நாள்தோறும் பத்து குழந்தைகளுக்கு தேவாரப் பாடல்கள் கற்றுக் கொடுக்கப்படுகின்றன. திங்கட் கிழமையன்று கூட்டு வார வழிபாடு நிகழும். தினமும் சேவார்த்திகளுக்குத் தயிர் சாதம் வழங்கப்படு

கிறது. அப்பம், வடை, புட்டு ஆகிய பிரசாதங்கள் சமைக்கப்பட்டு, விற்கப்படுகின்றன. சித்திரை 15, 16 ஆகிய நாட்களில் காரைக்குடி நகரில் 12 இடங்களில் இசை நிகழ்ச்சிகளுடன் பூச்சொரிதல் விழா விமரிசையாக நடை பெறும். இக்கோயிலுக்குச் சொந்தமாக 17. 10 ஏக்கர் நன்செய் நிலமும், 6. 49 ஏக்கர் புன்செய் நிலமும், 110 கட்டிடங்களும், 5 காலியிடங்களும் உள்ளன. இவற்றி லிருந்து ஆண்டு ஒன்றுக்கு 5 லட்சம் ரூபாய் வரை வருவாய் கிடைக்கிறது. தமிழக அரசின் இந்து சமய அற நிலைய ஆட்சித் துறையின் பொறுப்பில் இக்கோயிலின் நிர்வாகம் நடைபெற்று வருகிறது.

வெகுகாலமாகவே சங்கராபுரத்து வல்லம்பர்கள், கண்டனூர் பாலையப்பட்டி வம்பர்கள் ஆகியோர் இக் கோயிலுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தனர். வியாபாரிகள், பேட்டையார், தச்சர்கள், கொத்தனார் ஆகியோரும் கோயிலில் மண்டகப்படி செய்கிறார்கள். கோயில் தோன்றுவதற்கான இடத்தை அளித்த பெருமை தேவகோட்டை ஜமீந்தார்களுக்கே உரியது. அவர்களே முதல்மண்டகப்படியைச் செய்து வருகிறார்கள். நகரத் தார் இக்கோயிலில் பெரும் ஈடுபாடு கொண்டு திருப் பணிகள் பலவற்றைப் புரிந்துள்ளனர். செவ்வாய்த் திருவிழாவில் 1, 2, 3, 7, 8 ஆகிய நாட்களில் விழாவிற் கான செலவுகளை நகரத்தாரே ஏற்று, அன்றைய நிகழ்ச்சி களை முன்னின்று நடத்துகிறார்கள். அவ்விழாவின்போது நகரத்தார் ஊரைவிட்டு வெளியே செல்ல மாட்டார்கள். புது மணமக்களை விழாவில் கலந்து கொள்ள அழைப் பார்கள். கோவிலின் அலங்கார முன் மண்டபம் காரைக்குடி அள. அழ. குடும்பத்தினரால் கட்டப்பட்டது, 1960, 1989 ஆகிய ஆண்டுகளில் இக்கோயிலில் குடமுழுக்கு நடைபெற்றது.

திரு. சொக்கலிங்க ஐயா, சேவு, மெய்யப்ப செட்டியார், அரு. ராம. அருணாசலம் செட்டியார், அழ. சித. சொ.

தெய்வராயன் செட்டியார், ரெ. முத்துகணேசன், நா. அண்ணாமலை செட்டியார், தமிழ்க் கடல் ராய. சொ. போன்ற பெருமக்கள் இக்கோயிலைப் பாடித் துதித்துள்ளனர்,

"எப்பொழுது அழைத்தாலும் உடனே வந்து
இரவு பகல் பாராமல் அருள் கொடுப்பாள்
அற்புதங்கள் பல நடத்திக் காட்டு கின்ற
அழகான காரை நகர் குடியிருப்பாள்
செப்பு மொழியாய் இருந்த போதும்
சேவித்தால் அவர்களுக்குச் செல்வம் சேர்ப்பாள்!
கொப்புடையாள் எனும் பெயரைப் பெற்ற அந்தக்
குலம் காக்கும் தேவியினைப் போற்றுவோமே.
('குலம் காக்கும் தேவி கொப்புடையாள்',
கண்ணதாசன், கீழச் சீவல்பட்டி)

மாகாளி கொப்புடையாள் மாதுர்கை பரஞ்சோதி
அந்தரி பொற்பாதம் சிந்தை செய்து
நீடிய மக்கள் நேயம் உயரவும்
நின்னடி பாதத்தை துதித்து நின்றோம்.
(கோயிலூர் ஆதினம் ஸ்ரீலசீ. காசி விசுவநாத
ஞான தேசிகர்).

# 5. குச்சனூர்

(மதுரை மாவட்டம்)

## சனீஸ்வர பகவான் திருக்கோயில்

''நீலாஞ்ஜந ஸமாபாஸம் ரவி புத்ரம் யமாக்ரஜம்
ச்சாயா மார்த்தாண்ட ஸம்பூதம் தம் நவாமி சனநச்சரம்''

(அஞ்சனமை போன்ற, அழகிய திருமேனியைப் பெற்றிருப்பவரும், சூரியதேவனின் திருக்குமாரரும், யமதருமனின் சகோதரரும், சாயாதேவி, ஆதவன் ஆகியோருக்குப் புத்திரனாகப் பிறந்த தவச் செல்வருமான சனீஸ்வரனைத் துதிக்கிறேன்.) (வியாசர் அருளிய தியான ஸ்லோகம்)

காகத்தின் மீது ஆரோகணித்தவாறு, மேற்கு முகம் நோக்கியவாறு, நீலநிற ஆடையை அணிந்து, அபய முத்திரையை அளிக்கும் சனீஸ்வரன் தீவினைகளைப் போக்குபவர். ஆரம்பத்தில் பக்தர்களைச் சோதிப்பது போலத் தோன்றினாலும், உள்ளன்புடன் ஆராதிப்பவர்களின் துன்பங்களை நீக்கி அருளுவது அவரது இயல்பு. அனைத்து சிவாலயங்களிலும் பிற கிரகங்களுடன் சேர்ந்தோ அல்லது தனியாகவோ காட்சியளிக்கும் சனீஸ்வரன் குச்சனூர் என்ற தலத்திலுள்ள சிறு ஆலயத்தில் மூலமூர்த்தியாக அருள்புரிகிறார். இத்திருத்தலம் மதுரை மாவட்டத்தில், கம்பம் பள்ளத் தாக்கில், சுரபிநதி

என்றும் இலக்கியத்தில் போற்றப்படும் முல்லைப் பெரியா றிலிருந்து (சுருளி நதி) உற்பத்தியாகும் ராஜா வாய்க் காலின் மேற்குக் கரையோரமாக அமைந்துள்ளது. தேனி அல்லி நகரத்திற்குத் தெற்கே 20 கி. மீ. தொலைவிலும், உத்தம பாளையத்திற்கு வடக்கே 10 கி.மீ. தொலைவிலும் இவ்வூர் உள்ளது. தேனியிலிருந்து உப்புக் கோட்டை வழியாகவும், உத்தம பாளையம், சின்னமனூர் ஆகிய ஊர்களிலிருந்து மார்க்கயன் கோட்டை வழியாகவும் செல்லும் நகரப் பேருந்துகளில் சென்றால் இவ்வூரை அடையலாம்.

வான் பொய்த்தாலும் தான் பொய்க்காத நீர்வளம் மிக்க நாடாகக் குலிங்கம் என்ற பெயருடைய நாடு விளங் கியது. சிவகங்கை என்ற புண்ணிய நதியால் வளம் ஊட்டப்பட்ட அந்நாட்டில் உழவுச் செல்வம் மிகுந்து விளங்கியது. அந்நாட்டின் தலைநகரான மணி நகரம் கலைமகளும், அலைமகளும் வீற்றிருக்கும் தாமரை மலர் போலச் சாலச் சிறந்து விளங்கிற்று. அறிவாற்றல் மிக்க ஆடவரும், கற்பில் திளைத்த காரிகையரும், சமயச் சான்றோரும் கலை வல்லுநர்களும் அந்நகருக்குப் பொலிவையூட்டினர். இத்தகைய பெருமை மிக்க நாட்டை. ஆண்ட தினகரன் என்ற அரசன் குடிமக்களைத் தனது கண் போலவே பாவித்து அரசாண்டு வந்தான்.

அனைத்துச் செல்வங்களையும் பெற்றிருந்த போதிலும் அம்மன்னனுக்குப் பிள்ளைப் பேறு இல்லா மையால் மிகவும் வருத்தமுற்றான். அவனது அரசியான விந்துரு என்பாள் இதனால் பெரிதும் துயருற்ற அரசனிடம் கலந்தாலோசித்தாள். இறை வழிபாடு, சான்றோருக்கும் வறியவர்களுக்கும் தானதர்மம் அளித்தல் ஆகியவற்றில் ஏதேனும் குறைபாடு இருப்ப தால் இவ்வாறு பிள்ளைச் செல்வம் இல்லையோ என அரசியார் சந்தேகப்பட்டார். பட்டத்தரசியின் விருப்பத்

திற்கேற்றவாறு அனைத்து ஆலயங்களிலும் முறைப்படிப் பூஜைகளும், திருவிழாக்களும் நடைபெற ஏற்பாடு செய்தான். ஆன்றோருக்கும், ஏழை எளியவர்களுக்கும் பொருட்களை வாரி வழங்கினான். தினகரனின் புகழ் திக்கெட்டும் பரவி, வானுலகையும் எட்டியது. அரசனின் நல்லாட்சியைக் காண வானுலக அரம்பையர்கள் குலிங்க நாட்டிற்கு வருகை புரிந்து ஆடல் பாடல்களால் அரசவையில் விருந்து அளித்தனர். தினகரன் அவர்களுக்கு விலையுயர்ந்த பரிசில்களை வழங்கியபோது அவற்றை ஏற்க அரம்பையர் மறுத்தனர். பிள்ளைப்பேறு இல்லாதவர் வீட்டில் எப்பொருளையும் ஏற்பது முறையல்ல என்று அவர்கள் தெரிவித்தனர். இக்குறை நீங்குவதற்கான வழியை அரம்பையர்களிடமே மன்னன் வினவினான். "மக்கள் நலனைப் பேணிக் காக்கும் அரசே! நாங்கள் இவ்விடத்தை விட்டகன்றதும் உனது இல்லத்திற்கு ஒரு அந்தணக் குழந்தை வந்தடையும். அக்குழந்தை வந்தவுடன் உனது பட்டத்தரசியின் முலைகளில் பால் சுரக்கும். அக்குழந்தையை உனது குழந்தையாகவே வளர்த்து வருவாய். உரிய காலத்தில் உனக்கு மற்றொரு மகன் பிறப்பான்" என்று அருளியபின் அப்பெண்டிர் மறைந்தனர்.

அரசனும், அரசியும் இணைந்து ஆலோசித்த பின்னர் ஊரிலுள்ள அனைத்து ஏழைக் குழந்தைகளையும் அரண்மனைக்கு வரவழைத்து அவர்களுக்கு அழகிய உடைகளும், வயிறார உணவும் வழங்கினர். அந்நேரத்தில் குலிங்க நாட்டிலுள்ள ஒரு ஏழை அந்தணத் தம்பதிகளுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்கு உணவுகூட வழங்குவதற்கான பொருள் இன்றி அந்தணன் வறுமையால் வாடினான். தினகர மன்னனைக் காணுமாறு அருகிலுள்ளோர் அந்த வறிய அந்தணனிடம் அறிவுறுத்தினர். அவ்வாறே அரண்மனைக்கு அந்தணத் தம்பதிகள் சென்றனர். அக் குழந்தையை

அரசியார் கரத்தில் ஏந்தியவுடன் அவரது தனங்களில் பால் சுரந்தது. இறைவனின் கருணையை எண்ணி வியந்த அரசனும் அக் குழந்தையைத் தனது மகனாகவே வளர்க்க முடிவு செய்தான். ஏழை அந்தணனுக்குப் பெரும் செல்வம் அளித்தனர். அக்குழந்தைக்குச் சந்திர வதனன் என்று பெயர்சூட்டி அவனைச் சீரும் சிறப்புமாக வளர்த்து வரலாயினர்.

சில காலத்தில் திருமாலின் கரத்தையலங்கரிக்கும் வலம்புரிச் சங்கு ஈன்ற அழகிய முத்து போல அழகிய ஆண் மகவு ஒன்றை அரசி ஈன்றாள். அக்குழந்தைக்குச் சாதகன் என்று பெயரிட்டனர். இரு குழந்தைகளும் கல்வி வேள்வி களிலும், வீர வித்தைகளிலும் முறைப்படிப் பயிற்சி பெற்று இணை பிரியாத சகோதரர்களாகவே திகழ்ந்தனர். உரிய காலத்தில் சந்திரவதனனுக்கு முடிசூட்ட அரசன் விரும்பி னான். அந்தணன் ஈன்ற மகவுக்கு முடி சூட்டுவதற்கு முதலில் எதிர்ப்புத் தெரிவித்த அவையோரும், அரசியல் அதிகாரிகளும் அரசனின் சொல்லை இறுதியில் ஏற்றுக் கொண்டனர். உரிய வேளையில் சந்திரவதனனுக்கு முடி சூட்டினர்.

சதாகனின் துணையோடு ஒற்றுமையாகவே அரசாட்சி செலுத்தி வந்த போதிலும், சந்திரவதனனின் மனம் சஞ் சலம் அடைந்தது. முறைப்படிப் பிறந்த சதாகனை விடுத்து, வளர்ப்பு மகனான தனக்கு முடி சூட்டியதன் காரணத்தை உணர இயலாமல் சந்திரவதனன் தடுமாறி னான். சோதிடர்களைச் சந்தித்துத் தினகரனின் ஜாத கத்தைப் பார்க்க முடிவு செய்தான். தினகரனின் ஜாத கத்தை ஆராய்ந்த ஜோதிடர்கள் அவரது பிறந்த ராசியில் சனி பகவான் ஏழரையாண்டுகள் இருப்பதால் அக்காலத் தில் தினகரனுக்குப் பலவிதமான துன்பங்கள் ஏற்படக் கூடும் என்று கணித்தனர். நெறிமிக்க வேதியர்களுக்கு முறைப்படிப் பசு, கம்பளம், எள், தேங்காய், பழம், பூசணி

ஆகியவற்றைத் தானமாக வழங்குவதுடன், சனிக்கிழமை யன்று சனீஸ்வரருக்குப் பால், பச்சரிசி, வெற்றிலை, பாக்கு, பழம், அவல், தேங்காய், சந்தனம், சர்க்கரை, உளுந்து, பிண்ணாக்கு ஆகிய பொருட்களைப் படைத்து முறைப்படி உள்ளன்போடு வழிபட்டால் தினகரனுக்கு ஏற்படவல்ல தொல்லைகள் குறையும் என்று சோதிடர்கள் பரிகாரம் கூறினர்.

அவ்வாறே சந்திரவதனனும் சனிக்கிழமைகளில் தீவிர மாகச் சனிபகவானைத் தொழுது வந்தான். ''தன்னை உளமாரத் துதிக்கும் அரசன் முன் சனீஸ்வரன் காட்சி யளித்தார்.

''திருமுடியில் மணிமுடி; கழுத்தில் மணம்மிக்க மாலை;
அகன்ற மார்பில் மெருகூட்டும் சந்தனக் குழம்பு;
அதனிடையே ஒளிவிடும் விலைமிக்க பதக்கம்; கரங்களில்
ஒளிமிக்க கடகம்'', இங்ஙனம் சனீஸ்வரர்
காட்சியளித்தார்.

''இன்னவிதந்துதிபுரிய மெழிறிகழு மதிவதன வேந்தன்
முன்னோ
தன்னலஞ்சே ரொளிபரவுந் தினகரன் மாமதலை
யருணல் கவெண்ணிப்
பொன்னுலவு மணிமவுலி புனைந்தகன்மார்
பதிற்பதைக்கம் பொருந்தகையின்
மன்னிய கங்கணந்திகழ வயமிகும் வாயசப் பரியின்
மகிழ்ந்து தோன்றி
வானோர்கண் மலர்மாரி பொழிந்திட நன் முனிவரர்கண்
மகிழ்ந்து போற்றத்
தேனாரு மலர்மாலை பரிமளவா சக்கலவை திகந்தம்வீச
மானாரும் விழிமடவார் மடனூரு மெழிற்சொரூப
மதனன் கல்வி
மானாருந் துதிசெய்முத்து மகிபதி போற்றிடும் பகவான்
வந்துற்றாரே''
—(தலபுராணம்)

தனக்குக் காட்சியளித்த சனீஸ்வரரைச் சந்திரவதனன் போற்றித் துதித்தான். தனது தந்தையைப் பீடித்துள்ள தோஷத்திலிருந்து விடுதலையளிக்குமாறு இறைஞ்சினான். சிவபெருமான், திருமால், தேவர்கள், முனிவர்கள் ஆகியோரே என்னால் பீடிக்கப்பட்டிருக்கிறார்கள். அதிலிருந்து தப்புவது இயலாது, உன்னுடைய பக்திக்கு மெச்சி உன் தந்தையைப் பீடித்திருக்கும் காலத்தை ஏழரை ஆண்டிலிருந்து ஏழரை மாதமாகக் குறைக்கிறேன்'' என சனிபகவான் அருளினார். தனது தந்தைக்குப் பதிலாகத் தன்னையே பற்றிக்கொள்ளுமாறு சந்திரவதனன் வேண்டினான். சந்திரவதனன் தந்தைமீது கொண்டுள்ள அன்பைக் கண்டு வியந்த சனீஸ்வரரும் அதனை ஏற்றுக் கொண்டார்.

பெற்ற வரத்தால் திருப்தியடையாத சந்திரவதனன் தவத்தைத் தீவிரமாகத் தொடரலானான். அரசவையைத் துறந்து கானகம் ஏகினான். சனீஸ்வரரைப் போன்ற உருவத்தை இரும்பினால் அமைத்து வழிபட்டு வந்தான். சுருளிமலையருவிகளால் செழுமையர்க்கப் பெற்ற சண்பக வனத்தைத் தான் தவம் செய்வதற்கு உரிய இடமாகத் தேர்ந்தெடுத்தான். சந்திரவதனனின் கடுந்தவத்தை மெச்சிய சனீஸ்வரர் மீண்டும் காட்சியளித்தார். ''பக்தா! உனது மனவுறுதியை மெச்சி ஏழரை மாத காலத்தை ஏழரை நாழிகையாகக் குறைக்கிறேன். அதனையும் விடுத்தால் பூவுலகிலுள்ள சகல ராசிகளுக்கும் குற்றம் ஏற்படும். எனவே உன்னைச் சிறிதும் பீடிக்காமல் விடுவது இயலாது. இந்த ஏழரை நாழிகைக்குள் உனது உற்றார்களிடமிருந்து உனக்குப் பற்பல துன்பங்கள் ஏற்படும். முடிவில் நான் அருள் புரிகிறேன்'' என்று சனி பகவான் அருளினார்.

அரண்மனையை விடுத்துச் சென்ற சந்திரவதனனைத் தேடியவாறு அவனது தம்பியான சதாகன் கானகத்தினுள்

சென்றான். அரசகுமாரர்கள் இருவரையும் காணாமல் அரசன் துயருற்றான். கானகத்திற்கு அரசனின் சேனைகள் சென்றன. படை வீரர்களின் கண்களுக்குச் சனீஸ்வரனின் மாயையால் ஒரு திடுக்கிடும் காட்சி தென் பட்டது. சாதகனைப் பல கூறுகளாகத் துண்டித்து அவனது குடலை மார்பிலணிந்தவாறு சந்திரவதனன் பூசிப்பதை அவர்கள் கண்டு சினத்துடன் பாய்ந்தனர். வீரர்கள் கண்ட காட்சியை அறியாத சந்திரவதனன் தனது தவத்திற்கு இடையூறு விளைவிக்க முயன்றவர்களை வாளால் வெட்டி விடுவதாக அச்சுறுத்தி விரட்டினான்.

வீரர்கள் மூலம் செய்தியறிந்த தினகரன் துயரக் கடலில் மூழ்கினான். பின்னர் படைகளுடன் செண்பக வனத்திற்குச் சென்றான். முறைப்படிப் பூசையில் ஆழ்ந் திருந்த சந்திரவதனனை அனைவரும் கடுமையாக ஏசிய போதும் அவன் பதிலளிக்காததால் படை வீரர்கள் அவனை அடித்துத் துன்புறுத்தினர். சந்திரவதனனை வாய்ச்சியால் வெட்டிக் கொல்லுமாறு அரசன் தச்சன் ஒருவனிடம் ஆணையிட்டான். தச்சன் சந்திரவதனன் மீது வாளை வீச எத்தனித்தபோது, ஏழரை நாழிகை காலம் முடிந்து விட்டதால் சனீஸ்வரனின் பிடியிலிருந்து சந்திர வதனன் விடுபட்டான்.

அண்ணனைத் தேடிக் கானகத்தில் அலைந்து திரிந்து களைப்படைந்திருந்ததால் உறங்கிக் கொண்டிருந்த சதாகன் கண் விழித்து அவ்விடத்திற்கு வந்து உரிய காலத்தில் தச்சனைத் தடுத்தான். சனீஸ்வரனின் மாயை விலகியவுடன் அனைவரும் உண்மையை உணர்ந்தனர். பூஜைக்குப் படைக்கப்பட்ட பூசணிக்காய், கீரை, எள்ளுப் பிண்ணாக்கு, கரும்பு, பால் போன்ற பொருள்களே துண்டிக்கப்பட்ட உறுப்புக்களாகத் தோன்றின என உணர்ந்தனர். உண்மையறிந்த தினகரன் பெரிதும் வருத்தமுற்றான்.

அத்தருணத்தில் சனிபகவான் அங்கு காட்சியளித்து அனைவருக்கும் அருள்புரிந்ததுடன், தனக்கு அவ்விடத்தில் கோயிலெழுப்புமாறு கட்டளையிட்டார். சந்திர வதனனின் முடிசூட்டு விழா சனீஸ்வரரின் முன்னிலையில் முறையாக நிறைவேறியது. பின்னர் அரசவையோர் செண்பகவனத்தை யடைந்த போது காணற்கரிய காட்சியைக் கண்டனர். கரியமேகம் திரண்டு உருவேற்று ஆதவனின் பிரகாசத்துடன் பூமியிலிருந்து வெளி வந்ததைப் போலச் சனீஸ்வரன் சுயம்புமூர்த்தியாகக் காட்சியளித்தார்.

''கார்முகிற் றிரண்டு கதிரவ னொளியுடன்
பாரினைப் பிளந்து பரிமளிப்பது போற்
பேரழகோடு பேரா சுயம்புவாய்
வீறுடனாங்கு விளங்கினன் கரியோன்'' (தலபுராணம்)

செண்பக மலர்ச் சோலையில், ஒரு விடத்தலை மரத்தின் நிழலில் சனீஸ்வரர் எழுந்தருளியுள்ள இடத்தில் ஒரு சிறு கோயிலையெழுப்பி அதற்குக் குச்சுப் புல்லால் கூரை வேய்ந்தனர். குச்சுப்புல்லால் வேயப்பட்ட அல்லது குச்சுப் போன்ற குடிலில் கோயில் கொண்டுள்ள சனீஸ்வரருக்குக் 'குச்சன்' என்று பெயரிட்டனர். குச்சன் குடி கொண்டுள்ள திருத்தலம் குச்சனூர் என வழங்கப் பெற்றது. செண்பக மரங்கள் மிகுந்துள்ள அவ்வூர் செண்பகநல்லூர் என்றும் அழைக்கப்படலாயிற்று. இதுவே, குச்சனூரில் சனீஸ்வரர் கோயில் கொண்ட வரலாறு ஆகும்.

சனீஸ்வரர் திருக்கோயில் மிகவும் சிறியது. முகப்பில் கோபுரமோ, பிரம்மாண்டமான மண்டபமோ இல்லை. மூலஸ்தானத்தின் மீது சிறிய விமானம் மட்டுமே உள்ளது. மூலஸ்தானத்திற்கு வெளிப்புறத்தில் விநாயகர், சுப்பிரமணியர் ஆகியோரின் திருவுருவங்கள் உள்ளன. கருவறை

யில் சனீஸ்வரர் சுயம்புமூர்த்தியாகக் கோலம் கொண்டுள்ளார். சுயம்புவாகத் தோன்றியதால் ஆகமங்களில் சனீஸ்வரருக்கு விதிக்கப்பட்டுள்ள உருவ அமைப்பைப் பெறாமல், சற்று அகலமான லிங்கம் போலவே காட்சியளிக்கிறார். இவர் கருமையான வண்ணத்தாலானவர். அருகில் உலோகத்தினாலான உற்சவமூர்த்தி இடம் பெற்றுள்ளார்.

சேரநாட்டைச் சேர்ந்த லாடசன்னியாசி என்ற பக்தர் சனீஸ்வரரைத் தன்னுடைய நாட்டிற்கு அழைத்துச் செல்ல விரும்பியவராய்க் கடுமையான தவத்தில் ஈடுபட்டார். சனீஸ்வரர் குச்சனூரிலேயே குடிகொள்ள விரும்பியதால் லாடசன்னியாசியைத் தனது திருவடிகளில் ஐக்கியமடையச் செய்தார். லாடசன்னியாசியைத் தனது துணைத் தெய்வங்களுள் ஒருவராகவும் கோயிலில் இடம் பெறச் செய்தார். மூலஸ்தானத்திற்கு இடப்புறத்தில் லாடசன்னியாசியின் திருவுருவம் உள்ளது. விசேட நாட்களில் இவருக்கும் வழிபாடு நடைபெறுகிறது.

சனீஸ்வரரின் முன்னோடித் தெய்வமாகவும், காவல் கடவுளாகவும் திகழும் சோணை கருப்பண்ண சாமியின் சந்நிதி சற்று தொலைவில் வாய்க்கால் கரையிலுள்ளது. சோணை முத்தையா என்றும் வழங்கப்படும் இவர் வெள்ளைக் குதிரை மீது கம்பீரமாக வீற்றிருக்கிறார். தம் தொண்டர்களின் உடமைகளைக் காப்பதற்கு இரவில் காவலன் போல் இவர் பவனி வருவதாக மக்கள் நம்புகின்றனர். உண்மையான பக்தர்களின் கோரிக்கைகளை இவர் நிறைவேற்றுகிறார். இவருக்கு உரிய இடத்தில் விழாக் காலங்களில் சாராயத்தை ஊற்றிச் செல்வது ஊராரின் வழக்கம். இச்சந்நிதிக்கு அருகே கன்னிமார் கோயிலும், நாகர்கோயிலும் உள்ளன.

பெரியாறு நீர்த்தேக்கத்திலிருந்து பிரிந்து வந்து இப்பகுதியை வளப்படுத்தும் சுரபிநதியே இங்கு புண்ணிய

தீர்த்தமாகும். சனீஸ்வர பகவானுக்கு உகந்த விடத் தலை மரம் இங்கு தல விருட்சமாகும். இம் மரம் சனீஸ்வரர் ஆலயத்தின் பின்புறத்தில் உள்ளது.

இக்கோயிலில் விடியற்காலை, உச்சிகாலம், மாலைப் பொழுது ஆகிய மூன்று வேளைகளில் பூசைகள் நடை பெற்று வருகின்றன. உச்சிக் கால வழிபாடு முடிந்தவுடன் சனீஸ்வரரின் வாகனமான காகத்திற்குத் தளிகை அளித்த வுடனே அன்பர்களுக்குப் பிரசாதம் வழங்கப்படும். காகம் தளிகையை ஏற்காவிடில் சனீஸ்வரரின் திருவடிகளில் அடிபணிந்து குற்றம் ஏதாவது நேர்ந்திருந்தால் மன்னிக்கு மாறு வேண்டுவர்: பின்னர் காகம் தளிகையை ஏற்பது இங்கு காணற்கரிய காட்சியாகும். சனிபகவானுக்கு உகந்த எள்ளாலான பொங்கலை இக்கோயிலில் படைப்பது சிறப்பு.

ஆண்டுதோறும் ஆடிமாதத்தில் சனிக்கிழமையன்று இங்கு திருவிழா நடைபெறும். முதல் சனிக்கிழமையன்று கலிப்பணம் கழித்து சுத்த நீர் தெளித்துக் காகத்தின் உருவம் பொறித்த கொடியை ஏற்றி விழாவைத் துவக்குவர். அன்று அண்மைப் பகுதியைச் சேர்ந்த பூலானந்தபுரம், கம்பளத்தார் கோடாங்கி நாயக்கர் வகையறாவினர் பரம்பரை, பரம்பரையாக நடத்தும் சாத்திர சடங்குகளுடன் இங்கு திருவிழா ஆரம்பமாகும். மூன்றாம் சனிக்கிழமையே அதிவிசேடமான திருநாளா கும். அதற்கு முந்தைய வெள்ளிக்கிழமை சனீஸ்வரர் திருக்கலியாண உற்சவம் நிகழும். சனிக்கிழமை இரவு சக்திகரகம் எடுத்தல், மஞ்சனக் காப்புச் சாற்றுதல் ஆகிய சம்பவங்களுடன் பெருவிழா நடைபெறும். ஞாயிற்றுக் கிழமையன்று இரவு உற்சவர் சகல அலங்காரங்களுடன் பவனி வருவார். திங்கட்கிழமையன்று இரவில் லாடசன் னியாசி பூஜையும், மஞ்சள் நீராட்டமும் நிகழும். நான்காவது சனிக்கிழமையையடுத்த திங்கட்கிழமையன்று

சோணை கருப்பண்ணசாமிக்குப் பொங்கல் படைத்துப் பூசைகள் புரிவர்.

இரண்டரை ஆண்டுகளுக்கு ஒருமுறை சனிபகவான் ஒரு இராசியிலிருந்து மற்றொரு இராசிக்குச் செல்லும் பொழுது சனிப் பெயர்ச்சி என்று சிறப்பிக்கப்படுகிறது அத்தருணத்தில் இடைக்காலத் திருவிழா விமரிசையாக நிகழும்.

அமரர் திரு. சோணையா பிள்ளை, திரு. முத்துப் பிள்ளை இவர்களின் வம்சத்தைச் சார்ந்த ஏழு தர்மகர்த்தாக்கள் பரம்பரை முறையில் இக்கோயிலை நிர்வகித்து வருகின்றனர். அரசினர் மேற்பார்வையும், தணிக்கையும் மட்டுமே உண்டு. கோயிலுக்குரிய 3½ ஏக்கர் நன்செய் நிலத்திலிருந்து வரும் வருவாய், உண்டி, காணிக்கைகள் ஆகியவற்றின் மூலம் வழிபாடுகள் நடைபெறுகின்றன. இக்கோயிலில் ரூபாய் 2½ லட்சம் செலவில் திருப்பணிகள் நடத்தத் திட்டமிட்டுள்ளனர்.

'தினகரன் மான்மியம்' என்ற இத்தல வரலாற்றைச் சிவகிரி சமஸ்தான வித்துவான் இராயகிரி உயர் மா. அ. முத்துசாமிக் கவிராயர் சென்ற நூற்றாண்டின் இறுதியில் செய்யுள் வடிவில் இயற்றினார். அதனைத் தமிழ்ப் பண்டிதர் கு. செல்லையா உரைநடையில் எழுதியுள்ளார். இத்தலத்தின் மீது பல புலவர் பெருமக்கள் பாக்கள் புனைந்துள்ளனர்.

# 6. சிவசைலம்

(நெல்லை கட்டபொம்மன் மாவட்டம்)

## சிவசைலப்பர் திருக்கோயில்

*சீரார் சிவசைலச் செம்மேனிப் பெருமானார்*
*தார்ரார் கலியாணத் தாயாரோ—பேரார*
*வாழும் வரலாறு வாய்குளிர யாமுரைப்போம்*
*சூடும் வினைப்போம் துணிந்து* (தலபுராணம்)

தற்போதைய நெல்லை மாவட்டத்தில், பொருநை யாற்றங்கரையில் கடம்ப மரங்கள் அதிக அளவில் ஓங்கி வளர்ந்துள்ளதால் கடம்பவனம் என அழைக்கப்பட்ட ஒரு பகுதி இருந்தது. தவநெறியில் தழைத்தோங்கும் அத்திரி முனிவர் ஒரு ஆசிரமத்தில் அமைதியான வாழ்க்கையை நடத்தி வந்தார். சிவபெருமானின் அருள் வெள்ளத்தில் திளைத்து அதனை நன்கு அனுபவித்த குறுமுனியான அகத்தியரிடம் அத்திரி முனிவர் பெருமதிப்பு கொண்டிருந் தார். அகத்தியர் பாபநாசத்தில் கடும் தவம்புரிந்து சுயம்பு லிங்க வடிவில் இறைவனின் தரிசனத்தைப் பெற்ற சம்ப வத்தை அத்திரி முனிவர் அறிந்தார். தனக்கும் அதுபோன்ற பாக்கியம் கிடைக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் கடம்ப வனத்தில் அரியதவம் ஒன்றை அத்திரிமுனிவர் புரியத் துவங்கினார். ஒருநாள் கனிகளைக்

கொய்து வரச் சென்ற அவரது சீடர்கள் அடர்ந்து வளர்ந்த கடம்ப மரங்களிடையே ஒரு சுயம்புலிங்கத்தைக் கண்ணுற்றனர். தாங்கள் கண்ட காட்சியைக் குருவிடம் தெரிவித்தனர். தனது விருப்பம் கைகூடும் தருணம் வந்துவிட்டதை யெண்ணிய அத்திரி முனிவர் மகிழ்ச்சிக் கடலில் திளைத்தார். கடம்பவனத்தில் சுயம்புலிங்கத்திற்கு உளமாரப் பூசைகள் புரிந்தார். அத்திரி முனிவரின் ஆழ்ந்த பக்தியை மெச்சிய ஈசன் அம்மையப்பராகக் காட்சியளித்தார். அத்திரி முனிவரும்

''கோதிலாத் திரிகூடமால் வரை இன்று முதல்
ஆதியாம் சிவசைலம் என்று அகிலமெலாம்
வியந்தே ஓதிடும்படி செய்க''
என்று இறைவனிடம் வேண்டுதல் விடுத்தார்.

அன்று முதல் இத்திருத்தலம் சிவசைலம் என்றே பெயர் பெற்றது.

இத்திருத்தலம் நெல்லை கட்டபொம்மன் மாவட்டத்தில், அம்பாசமுத்திரம்-தென்காசி நெடுஞ்சாலையிலமைந்துள்ள ஆழ்வார்குறிச்சி என்ற ஊரிலிருந்து 4 கி. மீ. தொலைவிலுள்ளது. இவ்வூருக்கு அம்பாசமுத்திரத்திலிருந்து பேருந்துகள் செல்கின்றன.

சிவசைலத்தின் பெருமையையறிந்த பிருங்கி முனிவர் இத்தலத்திற்கு வருகை புரிந்தார். உமையைப் பொருட்படுத்தாமல் ஈசனை மட்டுமே வலம் வந்து பணிவது இவரது வழக்கம். இச்செயலுக்கான காரணத்தை உமையன்னை அரனாரிடம் வினவினார். ''தன்னையன்றி உமைக்கொரு தனிப் பண்பில்லை'' என முனிவர் எண்ணுவதாக ஈசன் பெருமிதத்துடன் கூறினார். இதனால் ஊடல் கொண்ட உமையன்னை அரனாரைப் பிரிந்து சென்று அத்திரி முனிவரின் தவக்குடிலில் சிலகாலம் தங்கினார்.

சில நாட்கள் சென்றவுடன் கங்கையை உமையிடம் தூதுவ ராக ஈசன் அனுப்பினார். தனக்கு இறைவனின் உடலில் இடப் பாகத்தை அளித்தாலன்றித்தான் வரப் போவ தில்லை என அன்னை மறுத்தாள். அத்திரி முனிவரின் அறிவுரையின் பேரில் புரட்டாசி மாத வளர்பிறையில் துவங்கி 21 நாட்களுக்குக் கேதார கௌரி விரதத்தை அம்மை கடைப்பிடித்தார். உமையின் விரதத்தால் உளம் மகிழ்ந்த இறைவன் மேற்கு (பச்சிமம்) நோக்கியவாறு ''கலியாணியை இங்கு அழைத்து வா'' என்று அருளி னார். உமையன்னைக்குத் தனது திருமேனியில் இடப் பாகத்தை அளித்தார். அன்று முதல் உமையன்னையும் 'பரம கல்யாணி' என்ற திருநாமத்துடன் சிவசைலத்தில் கோயில் கொண்டார். இச்சம்பவத்திற்கு ஏற்ப சிவசைல நாதர் திருக்கோயிலும் மேற்கு நோக்கியவாறு அமைந் துள்ளது.

அத்திரி முனிவர் கண்டெடுத்த சைலப்பர் காலப் போக்கில் வழிபடுவாரின்றிப் பூமியில் புதையுண்டார். அப்பகுதியில் கால்நடைகளை மேய்த்து வந்த இடை யர்கள் அந்த இடத்தில் ஒரு பசு தானாகவே பால் சொரிவது கண்டு ஆச்சரியம் அடைந்தனர். இச்செய்தியை அருகிலுள்ள கிராமத்திலுள்ள அந்தணர்களிடம் தெரிவித் தனர். அந்தணர்கள் லிங்கத்தைக் கண்டு அதற்கு முறைப் படி வழிபாடுகளை நடத்தினர். ஒருமுறை இவ்வழியே சென்ற முகமதிய நவாப் ஒருவன் இவர்களைக் கேலி செய்தான். இதனால் வெகுண்ட அந்தணர்கள் அவரது நாட்டில் மழை பெய்யாமல் போகுமாறு சபித்தனர். இதனால் நாடு வறட்சியின் கோரப்பிடியில் சிக்கியது. அந்தணர்களின் மகிமையையுணர்ந்த நவாப் மன்னிப்பு கோரினான். அந்தணர்கள் இறைவனிடம் வேண்டிக் கொண்டவுடன் மழை பொழிந்தது. தான் உறுதியளித்த வாறு சைலப்பருக்கு ஒரு சிறு ஆலயத்தை நவாப் கட்டிக்

கொடுத்தான். அதில் வழிபாடுகள் நடைபெற நிலபுலன் களையும் வழங்கினான்.

மணலூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்து வந்த சுதர்சன பாண்டியன் என்ற மன்னன் புத்திரப்பேறு இன்றி வருந்தினான். பொருநை ஆற்றங்கரையில் மாபெரும் அசுவமேதயாகம் ஒன்றை அம்மன்னன் நடத்தினான். அசுவமேதயாகக் குதிரை சிவசைலத்தை நோக்கிச் சென்றது. மன்னனுக்கு அருள்புரிய அரனார் முடிவு செய்தார். ஈசனின் கட்டளையின் பேரில் முருகப் பெருமான் மாறுவடிவில் யாகக் குதிரையைப் பிடித்துக் கட்டிப் போட்டார். குதிரையை மீட்கப் போரிட்ட சுதர்சன பாண்டியன் மீது முருகன் வேற்படையை எறிந்து அவனை மூர்ச்சையடையச் செய்தார். சுதர்சன பாண்டியன் மயக்கம் நீங்கிக் கண் விழித்தபோது சிவபெருமான் இடபவாகனராகக் காட்சியளித்து அருளினார். இறையருளால் பாண்டியனுக்கு ஆண் மகன் பிறந்தான். நன்றிக் காணிக்கையாக இப்பாண்டிய மன்னனே சிவசைலநாதருக்கு மாபெரும் கோயிலைக் கட்டினான்.

இச்சம்பவத்தின் நினைவாக இரு சிற்றூர்கள் காட்சியளிக்கின்றன. சிறுவன் வடிவில் முருகன் போர் புரிந்த இடம் குமாரசளம் எனப்படுகிறது, அன்பு மிகுதியால் இறைவன் அரசனுக்கு அருளிய இடம் அன்பூர் என அழைக்கப்பட்டது; காலப்போக்கில் அதுவே ஆம்பூராயிற்று.

அத்திரி முனிவரின் சீடர்கள் ஒன்று கூடி வரப்போகும் தைப்பூச நன்னாளன்று காசிக்குச் சென்று கங்கையில் நீராட முடிவு செய்தனர். இதற்காகக் குருவிடம் அனுமதி பெற விழைந்தனர். அத்திரி முனிவர் ஆழ்ந்த தியானத்தில் ஈடுபட்டிருந்ததால் கண் திறக்கவில்லை. புண்ணிய காலம் கடந்துவிடும் என்று அஞ்சிய சீடர்கள் முனிவரிடம்

கூறாமலேயே பயணத்தை மேற் கொண்டனர். கோரட்சகர் என்ற சீடர் மட்டும் குருவை விட்டுப் போகவில்லை. தவத்திலிருந்து விழித்த அத்திரி முனிவர் நிகழ்ந்ததை அறிந்தார். கோரட்சகரின் குருபக்தியை மெச்சிய அத்திரி முனிவர் தனது யோக தண்டத்தை நிலத்தில் ஊன்றி அங்கிருந்து கங்கை நதியைப் பெருகச் செய்தார் அத்தீர்த் தத்தில் நீராடினால் காசியில் கங்கை நதியில் நீராடிய பலனைப் பெறலாம் என்ற வரத்தையும் வழங்கினார். கோரட்சகரும் அத்தீர்த்தத்தில் நீராடிக் காசியில் புனித நீராடிய அதே பலனைப் பெற்றார். அத்திரி முனிவரால் உண்டாக்கப்பட்ட இத்தீர்த்தம் சிவசைல மலையில் 1500 அடி உயரத்திலிருந்து தோன்றுகிறது. இதனை அத்திரி தீர்த்தம் என அழைப்பர். இத்தீர்த்தத்திற்கு அருகாமையில் முருகனுக்கு ஒரு சிறு கோயில் உள்ளது. இங்ஙனம் தோன்றிய கங்கை, கருணையாற்றுடன் சங்கமமாகிச் சிவசைலநாதர் ஆலயத்திற்கு வடபுறமாகச் சென்று திருப்புடைமருதூரில் பொருநையாற்றுடன் கலக்கிறது. ஆண்டுதோறும் தைப்பூசத்தின் போது கங்கை, பொருநை, கருணையாறு (கடனாறு) ஆகிய மூன்று ஆறுகளும் சங்கமமாகும் விழா குதூகலமாகக் கொண் டாடப்படுகிறது.

இத்தலத்திற்கு வெகு தொலைவிலுள்ள தருமபுரத்தி லுள்ள ஆதீனத்தின் குருமுதல்வர் சிவசைலத்தின் திருத் தலப் பெருமையை உணர்ந்தார். சிவசைலத்திற்கு வருகை தந்து ஈசனை வழிபட்டதுடன், ஆலயத்தின் வடபுறத்தில் கருணையாற்றின் கரையில் ஒரு திருமடத்தை நிறுவினார். அதன் தலைவராக ஒரு தம்பிரான் சுவாமியை நியமனம் செய்ததுடன் மடம் முறைப்படிச் செயல்பட ஒரு அறக் கட்டளையையும் ஏற்படுத்தினார். நாள்தோறும் சிவசைல பதிக்கு முறைப்படி வழிபாடு நடைபெற ஏற்பாடுகள் செய் தார். ஆதீனக் குரு முதல்வரே முன்நின்று திருப்பணிகளை நடத்தி வைத்துக் குடமுழுக்கு நிறைவேறவும் ஏற்பாடுகள்

செய்தார். தருமையாதீனத்தின் 25-வது பட்டமான ஸ்ரீலஸ்ரீ கயிலை குருமணி சுப்பிரமணிய தேசிக ஞான சம்பந்த சுவாமிகள் இக்கோயிலில் அர்த்தஜாமக் கட்டளையை நிறுவினார். கோயில் திருப்பணிகளிலும் பங்கேற்றார். 8-11-1970 அன்று சிவசைலம் கோயிலுக்கு விஜயம் செய்து கோபுரத் திருப்பணியைத் துவக்கி வைத்தார். இக்கோயிலில் 1938, 1770 ஆகிய ஆண்டுகளில் குடமுழுக்கு வைபவங்கள் நடைபெற்றன.

சிவசைலம் திருக்கோயிலின் முகப்பிலுள்ள வாயில் மீது 5 நிலை ராஜகோபுரம் அணி செய்கிறது. முகப்பிலுள்ள அதிகார விநாயகரை வணங்கிய பின், கோபுரத்தையும், உள்புற மண்டபங்களையும் கடந்து மூலஸ்தானத்தை அடையலாம். மூலவர் சிவசைலநாதர் சுயம்புலிங்க வடிவில் மேற்கு நோக்கியவாறு காட்சியளிக்கிறார். அரனாருக்கு ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்யோஜாதம் ஆகிய 5 திருமுகங்கள் உள்ளதாக ஆகம நூல்கள் கூறும். இவற்றிற்கேற்ப ஒவ்வொரு பகுதியில் உள்ள மக்களும் ஒவ்வொரு விதமாக வழிபடத்துவங்கினர். கிழக்கு நோக்கிய சிவாலய மூர்த்திகளைத் தத்புருஷம் என்பர்: மேற்கு நோக்கிய மூர்த்தங்கள் சத்யோஜாதம் எனப்படும். வீரசைவர்கள் சத்யோஜாத மூர்த்தியை வழிபட்டு வந்தனர். கிழக்கு நோக்கி அமர்ந்தவாறு அவர்கள் பூசிப்பதால் அம்மூர்த்தி மேற்கு நோக்கியே கோலம் கொண்டிருக்கும். அவ்வாறு வழிபடப்பட்ட லிங்கங்களைச் சுற்றிக் கோயில்கள் தோன்றியபோது அத்தகைய ஆலயங்களும் மேற்கு நோக்கியவாறே அமைந்தன. மேற்குநோக்கிய கோயில்களை வீரசைவர்கள் வழிபட்ட ஆலயங்களாகக் கருதுவதுண்டு சிவசைலமும் இத்தகைய கோயிலாக இருந்திருக்கலாம் என்று கருதுகின்றனர். மூலவருக்குப் பின்புறம் சடை முடியிருப்பது போல் அமைந்துள்ளது. இம்முடியழகைப் பின்புறத்திலிருந்து நோக்குவதற்கு ஏற்ப வடக்கு, கிழக்கு, தெற்கு

ஆகிய மூன்று திசைகளிலும் மூன்று சன்னல்கள் கருவறைச் சுவரில் அமைக்கப்பட்டுள்ளன. இதற்குக் காரணமாக ஒரு சம்பவம் செவிவழிச் செய்தியாகக் கூறப்படுகிறது.

இப்பகுதியை ஆண்டு வந்த சுதர்சன பாண்டியன் என்பான், அர்த்தஜாம பூஜையின் போது இறைவனைத் தரிசித்து விட்டுப் பிரசாதம் பெற்றுச் செல்வது வழக்கம், ஒருமுறை ஆற்றில் வெள்ளப் பெருக்கெடுத்ததால் அரசன் உரிய நேரத்தில் வரவில்லை. அரசன் வரமாட்டான் என்ற எண்ணத்துடன் மாலையை அருகிலுள்ள நடனமாதுவிடம் கொடுத்துவிட்டனர். கதவு மூடுவதற்குள் அரசர் வருவ தாக அறிந்த அர்ச்சகர் அந்த நடனமாது அணிந்த மாலையை அவசரம் அவசரமாகப் பெற்று அரசருக்குப் பிரசாதத்துடன் அளித்தார். அம்மாலையில் ஒரு உரோமம் இருப்பதைக் கண்டு அரசன் வெகுண்டான். அந்த உரோமம் சிவபெருமானின் தலையிலுள்ள சடையி லிருந்து வந்ததாக அர்ச்சகர் சமாதானம் கூறினார். அதனை நம்பாத அரசன் அவரது கூற்றிலுள்ள உண்மை யைச் சோதித்தறிய முடிவு செய்தான். கருவறையினுள் அரசன் செல்ல அனுமதி இல்லாததால், பின்புறச் சுவரில் துவாரங்கள் இடுமாறு கட்டளையிட்டான். அர்ச்சகரோ தன்னைக் காப்பாற்றுமாறு இறைவனிடம் முறையிட் டார். மறுநாள் துவாரத்தின் வழியாகச் சிவலிங்கத்தின் பின்பகுதியைக் கண்ட அரசர், சிவபெருமானுக்கும் சடை முடி இருப்பதைக் கண்டு வியப்புற்றார். அர்ச்சகரைக் காப்பாற்ற இறைவன் திருமுடியுடன் காட்சியளித்த சம்பவங்கள் திருக்கண்ணபுரம், குடுமியான்மலை ஆகிய தலங்களிலும் வழக்கிலுள்ளன.

இரண்டு காற்பசுவெனவே யெந்த நாளும்
இறைதேடி யண்டிறங்கும் இயல்பு கொண்டு
உரம் பெறவே உயிர்க்குறுதி நாடதேங்கி
உலகியற்கை மயக்கினிலே மூழ்கி நின்றோர்
பரம்பொருளே தஞ்சமெனக் கருதித்தேற

பனுவல்பல நுவலுவதைத் தெளிந்த நல்லோர்
திரண்டுரிமை யர்ற்பரவும் திண்மைப் பண்பின்
சீராரும் சிவசைலநாதர் போற்றி
எல்லெவர்க்கும் கருணைமொழி முகிலே யென்ன
இக்கலியில் அருள்வழங்கும் வள்ளலே யென்
வெவ்வினையை யறவொழித் திங்கின்பு சாரும்
விதிமுறையில் வழுவாத சீலம் தராய்
அவ்வர்க்கு வேண்டுமருள் அன்பாலீயும்
அம்மையுடன் ஆலயங்கொள் தேவே கோவே
திவ்வியதின் மலர்பதத்தில் பணிந்தேன் காண்பார்
சீராரும் சிவசைலநாநா போற்றி

(ஸ்ரீ சிவசைலநாதர் பதிகம்)

கருவறைக் கோஷ்டத்தில் தக்ஷிணாமூர்த்தியின் திருவுருவம் மட்டும் இடம் பெற்றுள்ளது. நெல்லையப்பர், பைரவர், துர்க்கை, கஜலெட்சுமி, சூரியன், சந்திரன், சண்டேஸ்வரர். சப்த மாதர்கள், சைல விநாயகர், அறுபத்து மூன்று நாயன்மார்கள் ஆகிய திருவுருவங்களை உட்பிரகாரத்தில் தரிசிக்கலாம். ஸ்ரீசைல விநாயகருக்கும், வள்ளி, தெய்வயானை சமேதரான சுப்பிரமணியருக்கும் தனி சந்நிதிகள் உள்ளன. மண்டபங்களின் மேற்பகுதிகளில் மீனாட்சி சுந்தரேஸ்வரர், அறுபடை வீடுகளில் கோலம் கொண்டுள்ள முருகப் பெருமான், கஜலட்சுமி, நெல்லையப்பர், காந்திமதியம்மன் போன்ற பல திருவுருவங்கள் வண்ண ஓவியங்களாக வரையப்பட்டுள்ளன இத்தகைய வண்ணப்பூச்சுகளும், வேலைப்பாடுகளும் 1975ம் ஆண்டில் நடைபெற்ற குடமுழுக்கு விழாவின் போது பூசப்பெற்றன.

## நந்தி

பலிபீடம், கொடிமரம் ஆகியவற்றையடுத்து இடம் பெற்றுள்ள நந்தி ஒரு பெரும் வனப்பு மிக்க படைப்பாகும்.

சிற்பி இந்த நந்தியை உருவாக்கிக் கொண்டிருந்த போது உயிர் பெற்று எழுந்து ஓட முயன்றதாம். உடனே சிற்பி தனது உளியால் அதன் இரு கொம்புகளுக்கிடையே தட்டினாராம். உடனே நந்தி சிலாரூபியாக மாறி விட்டதாம். பிற ஆலயங்களில் காலை மடித்தவாறு படுத்துக் கொள்ளும் நந்தி இக்கோயிலில் முன்னங்கால் களை உயரத் தூக்கி எழும்பி நிற்க முயற்சி செய்வது போல அமைந்துள்ளது. அதன் தலையில் சிற்பி உண்டாக்கிய காயத்தின் தழும்பு இன்றும் காட்சியளிக் கிறதாம்.

இந்த நந்திக்கு முழுக்காப்பு செய்து பார்த்தால் நிஜமான காளை ஒன்று படுத்திருப்பது போலவே தோன்றுமாம். ஒரு இடத்தில் இருந்தவாறு அதன் முழு அங்கங்களையும் காண முடியாது. மேற்கிலிருந்து கோயிலுக்குள் வீசும் காற்றை இது தனது நாசியால் உறிஞ்சிக் கொள்ளுமென்று கூறுகிறார்கள். சுற்றுவட்டா ரத்திலுள்ள மக்கள் இந்த நந்தி மீது பெருமதிப்பு கொண்டுள்ளனர். கால்நடைகளை நோய் தாக்கினாலும், வேறு எவ்வித துன்பம் ஏற்பட்டாலும் நந்தியம் பெருமானுக்கு அபிஷேகம் செய்வதாக வேண்டிக் கொள்வதுண்டு. இதன் மீது எவ்வளவு எண்ணெய் ஊற்றினாலும் அதனை இந்த நந்தி அப்படியே உறிஞ்சிக் கொள்ளும் என்று நம்பப்படுகிறது. சாதி மத வேறு பாடின்றி அனைவரும் நந்திக்கு அபிஷேகம் செய்வது கண்கொள்ளாக் காட்சி. அண்மையிலுள்ள பொட்டல் புதூரைச் சேர்ந்த முகமதியர்கள்கூட நந்திக்கு அபிஷேகம் செய்து பிரசாதம் பெறுவது உண்டு: நவகிரகங்கள் இக் கோயிலில் இடம் பெறாமையால் சனி, செவ்வாய் போன்ற கிரகங்களுக்குச் செய்யப்படும் வழிபாடுகள் இந்த நந்திக்கே நடைபெறுகின்றன. உயிர்த் துடிப்புடன் விளங் கும் நந்திக்கு ஆண்டுதோறும் ஆடிமாதம் இறுதி வெள்ளிக்

கிழமையன்று ஒப்பரிய முழுக்காப்பு தவறாமல் நடைபெறும். இங்கு நடைபெறும் விழாக்களுள் இதுவே பிரசித்திபெற்றது.

நான்கு கரங்களுடன் நின்ற கோலத்தில் தனி சந்நிதியின் அழகே உருவாகிக் காட்சியளிக்கும் அன்னை பரமகல்யாணி சிறந்த வரப்பிரசாதியாக விளங்குகிறார்.

''நேராக வந்து பணிந்தேத்தும் தொண்டர்
நினைவிலருள் பூந்தருளி இருளை நீக்கி
ஆறாத மனக்கவலை துன்பம் எல்லாம்
அகற்றி நிறை செல்வமொரு சிறப்புந்தந்தே
சீரார்ந்த வாழ்க்கை நலம் செழிக்கச் செய்வாய்
சிறியனது உளக்கவலை கன்மம் தீராய்
பாராரும் சிவசைலப் பதியில் மேவும்
பண்போங்கு பரமகல்யாணித் தாயே
குற்றமிலா அடியார்கள் கூடிக்கூடி
குணமாரப் பணிபலவுங் குயிற்றா நிற்பர்
முற்றுமன மோனமொடு சிலநாள் வைகி
முறை தவறா நியமநிலை நிற்போர்க் கெல்லாம்
தெற்றனவே தெரிசனமும் சேவைச் சீரும்
சிறப்பாகப் பாலித்துக் காக்கும் வண்மை
பற்றியுணர் சிவசைலப்பதியில் மேவும்
பரமசிவையே பரமகல்யாணித் தாயே''
(''ஸ்ரீபரமகல்யாணியம்மை பதிகம்''

அக்னிஹோத்திரி என்பவருக்கு வெகு நாள் பிள்ளைப் பேறு இல்லை. இதனால் பெரிதும் வருத்தமுற்ற அவரது மனைவி உமையன்னையைக் குறித்து விரதம் இருந்தாராம். அவளது கனவில் தோன்றிய பார்வதிதேவி ஆம்பூர் என்ற இடத்தில் கிணறு ஒன்றைத் தோண்டி அதில் கிடைக்கும் அம்மனின் விக்கிரகத்தைக் கோயிலில் பிரதிஷ்டை செய்யுமாறு கட்டளையிட்டார். அக்கட்டளைக் கேற்பப் பிரதிஷ்டை செய்யப்பட்ட திருவுருவமே பரம கல்யாணி ஆகும். பரமகல்யாணியின் அருளால் அத்தம் பதியருக்குக் குழந்தையும் பிறந்தது.

சிவசைலத்திலுள்ளோர் மாப்பிள்ளை வீட்டார் என்றும், அம்மனின் விக்கிரகம் கிடைத்த இடமான ஆம்பூரிலுள்ள மக்கள் பெண் வீட்டார் என்றும் கருதும் பழக்கம் இன்றும் இவ்வட்டாரத்தில் நிலவி வருகிறது. அக்காலத்தில் சிவசைலம் பகுதியில் அதிக மக்கள் நடமாட்டம் இல்லாததால் அதிக ஜனசஞ்சாரம் உள்ள ஆம்பூருக்கு உற்சவர்களைத் திருமணக் கோலத்தில் எடுத்துச் சென்றிருந்தனர். பங்குனி பிரம்மோற்சவத்தின் பதினொன்றாம் நாளன்று தேர் நிலைக்கு வந்தவுடன் ஆம்பூர் (மறுவீடு) செல்ல நாள் குறிப்பார்கள். குறித்த நாளில் பரமகல்யாணீ சமேதரான சைலப்பர் ஆழ்வார் குறிச்சி வந்து அங்கு ஒரு நாள் தங்கியபின் ஆம்பூருக்குப் பயணமாவார்கள். அன்று ஊர் முழுவதும் பூர்ண கலசத்துடன் அவர்களை வரவேற்று வேங்கடாஜலபதி கோயிலருகேயுள்ள மேடையில் நிறுத்துவர். பூர்ண அலங்காரத்துடன் ஆம்பூர் வழியே பவனி வந்த பின்னர் மூன்றாம் நாள் பூப்பல்லக்கில் நிறுத்தி வழியனுப்புவர். ஆம்பூரில் நடைபெறும் இந்த மூன்று நாள் விழா வசந்த விழா எனப்படும். இதில் பங்கேற்க வெளியூரில்பணியாற்றும் இவ்வூரைச் சேர்ந்தவர்கள்கூட வருவதுண்டு. பிரம்மோற்சவத்தின்போது பத்து நாட்களுக்கு ஏற்படும் செலவை விட இந்த மூன்று நாட்கள் அதிகமாகச் செலவிடப் படும்.

இக்கோயிலில் நடராஜர், சோமாஸ்கந்தர் போன்ற திருவிழாப் படிமங்கள் உள்ளன. இக்கோயிலில் விபூதி பிரசாதமே அளிக்கப்படுகிறது. கையை நீட்டித் திருநீறு பெறுவது யாசகம் கேட்பது போலிருப்பதாக எண்ணிய ஆதீனத்தம்பிரான் ஒருவரின் ஆலோசனையின் பேரில் இலையில் விபூதியை மடித்துக் கொடுக்கும் பழக்கம் ஏற்பட்டது.

இக்கோயிலில் பூஜைகள் ஆகம விதியை அனுசரித்து ஒழுங்காக முறையுடன் நடைபெறுகின்றன. ஆலயம்

காலை ஆறு மணி முதல் மதியம் பன்னிரண்டு மணி வரையிலும் மாலை ஐந்து மணி முதல் இரவு எட்டு மணி வரையிலும் தரிசனத்திற்காகத் திறந்திருக்கும். மகா சிவராத்திரி, ஆழ்வார் குறிச்சி தேர்விழா, ஆம்பூர் வசந்த மண்டகப்படி, சிவசைலம் நந்தி பகவான் ஆடித் திங்கள் முழுக்காப்பு, பங்குனி பிரம்மோற்சவம் ஆகிய விழாக்கள் இவ்வட்டாரத்தில் பிரசித்தி பெற்றவை. இவ்வட்டார மக்கள் சிவசைலபதி, பரமகல்யாணி ஆகியோரைக் கண் கண்ட தெய்வமாகவே போற்றுகின்றனர். இதற்கேற்ப அநேகக் குடும்பங்களில் ஆண் குழந்தைக்குச் சைலப்பர் என்றும் பெண் குழந்தைக்குப் பரமகல்யாணி எனவும் பெயரிடும் வழக்கம் இவ்வட்டாரத்திலுண்டு.

சிவசைலம் தலபுராணம் நெற்குன்றை மாநகர் சைவத் திரு வீரப்ப முதலியாரால் 1910ம் ஆண்டில் பிரசுரிக்கப் பட்டது. கி. பி. 1720 ஆம் ஆண்டில் ஆழ்வார் குறிச்சி இராமநாத கவிராயர் என்பார் சிவசைலப்பற்று என்ற சிற்றிலக்கிய நூலை இயற்றினார். குருவிகுளம் ஜமீன், மீனாட்சி சுந்தர முதலியார் இயற்றிய சிவசைலேசர் துதி வெண்பாவும், ஆம்பூர் கோபாலகிருஷ்ணையர் யாத்த 'பரமகல்யாணி ஆசிரிய விருத்தமும்' இத்தலத்தின் மீது எழுந்த சிற்றிலக்கிய நூல்களுள் குறிப்பிடத்தக்கன. அனந்தராம கிருஷ்ணன் என்ற தனவந்தர் பரமகல்யாணி யம்மன் பெயரால் உயர்நிலையப் பள்ளி, கல்லூரி, ஆஸ்பத்திரி ஆகியவற்றைப் பெரும் பொருட் செலவில் ஆழ்வார் குறிச்சியில் ஏற்படுத்தினார்.

''சித்தமிசை பத்திநலம் நித்த நித்தம் ஓங்கிடவும்
தத்துவஞ்சேர் வித்தையினில் புத்திமகிழ் தேங்கிடவும்
ருத்திரம் கோள்மலிந்த கொங்கையரை நீங்கிடவும்
அத்தவுனைப் போற்றி நிற்கும் அருள்வளமே
தாங்கிடவும் சிவசைலநாதா சிந்தையில் நீ வாவா''

(கண்ணிகள்).

ஆழ்வார்குறிச்சியிலிருந்து கலியாணிபுரம் என்ற கிராமத்தின் வழியாகச் செல்லும் கிளைப் பாதையில் சிறிது தொலைவு சென்று கடனா அணை வழியாக உள்ள ஒற்றையடிப் பாதையில் சென்று மலைப்பகுதியில் உள்ள அத்திரி முனிவரின் தபோவனத்தையடையலாம். அங்கு அத்திரி முனிவரின் சிலாவுருவமும், அருகே அவரது சீடரான கோரக்நாதரின் (கோரட்சகர்) சிறுகோயிலும் உள்ளன. இப்பகுதியில் பல சாமியார்கள் வாழ்ந்திருக்கிறார்கள். தற்போது சுவாமி நிர்மலாநந்தர் என்பவரின் மேற்பார்வையில் சில அன்பர்களின் உதவியுடன் இத்த போவனத்தைச் சீரமைக்கும் பணி நடைபெறுகிறது. மண்டபத்தில் இரு சிவலிங்கங்கள் உள்ளன. இரண்டின் மீதும் சூலக்குறி பொருத்தி வைக்கப்பட்டுள்ளது. இவற்றுள் ஒன்றை ஆண் என்றும், மற்றொன்றைப் பெண் என்றும் கருதுகின்றனர். இதுவே கோரக்நாதரின் ஆலயம்; வாயிலில் செல்வி என்ற பெண்மணியின் திருவுருவம் இடம் பெற்றுள்ளது. விசுவ இந்து சபையினரின் உதவியுடன் இப்பகுதியைச் சுற்றிச் சுவர் எழுப்பிப் புதுப்பிக்கும் பணிகள் நடைபெறுகின்றன.

கோரக்நாதர் ஐயப்பனைப் போல வீராசனத்தில் யோகபட்டம் கட்டியவாறு தாடியும், சடையும் தரித்தவாறு காட்சியளிக்கிறார். கோரக்நாதரின் கோயிலின் மீது கவிழ்ந்துள்ள மரங்களை அமிர்தவர்ஷணி மரங்கள் என்று கூறுவர். சித்திரை மாதம் முதல் மூன்று நாட்களில் இவற்றிலிருந்து பூச்சொரிவது போல் நீர் தெறிக்கிறது. சுவாமிகள் கோரக்நாதருக்கு ஒரு கால வழிபாடு நடத்துகிறார். வெள்ளி, சனி, ஞாயிறு போன்ற நாட்களில் இங்கு அதிக அளவில் பக்தர்கள் வருகை புரிந்து சுவாமிகளின் ஆசிகளைப் பெற்று வருகிறார்கள். கூடிய விரைவில் இது ஆத்ம அமைதியும், மனநிறைவும் அளிக்கக்கூடிய அமைதிமிக்க வழிபாடு தலமாக மாறும் என்பதில் ஐயம் இல்லை.

# 7. சென்னை,

## சென்னை கேசவப் பெருமாள், சென்னை மல்லீஸ்வரர் கோயில்கள்

''தொண்டை மண்டலத்துப் புழல் கோட்டத்து ஞாயிறு நாட்டுச் சென்னப்பட்டினம்'' என்று பழைய ஏடுகளில் குறிப்பிடப்பட்டுள்ள பெருமை சென்னை நகருக்கு உண்டு. அனைத்து வசதிகளையும் உடைய இந்நகரில் விநாயகர், முருகர், சிவன், திருமால், அம்மன் ஆகிய அனைத்து உருவினருக்கும் ஆலயங்கள் உள்ளன. பஜனைக் கூடங்கள், மடங்கள், பண்பாட்டு மையங்கள் ஆகியன நிரம்பிய இன்ப ஆத்திகக் கோட்டையாக இந்நகர் திகழ்கிறது. இந்நகரில் திருவான்மியூர், திருவொற்றியூர், திருமயிலை ஆகிய பாடல் பெற்ற சிவத்தலங்களும், திருவல்லிக்கேணி என்ற வைணவத் தலமும், வேறு பல பழமையான திருத்தலங்களும் உள்ளன. இந்நகரின் மையப் பகுதியில் அதன் இரு கண்கள் போலச் சென்னை கேசவர் கோயில், சென்னை மல்லீசுவரர் கோயில் ஆகிய இரு கோயில்கள் விளங்குகின்றன. நேத்தர்ஜி சுபாஷ் சந்திரபோஸ் சாலை, தேவராஜ முதலித் தெரு, இராசப்ப செட்டித் தெரு, நயினியப்ப நாயகர் வீதி ஆகிய நான்கு மாட வீதிகளுக்கு நடுவே இவை அமைந்துள்ளன. இவற்றைப் பட்டணம் கோயில், பூக்கடைக்கோயில் என்று மக்கள் அழைக்கின்றனர்.

இன்று உயர்நீதி மன்றம் கம்பீரமாகத் தோற்றம் அளிக்கும் இடமே ஆதியில் சோலைகள் சூழ்ந்த சென்னி கேசவபுரம் என்று வழங்கப்பட்டது. உயர்நீதி மன்றத்தின் தென்புறத்தில், இன்று ரிசர்வ் வங்கி அமைந்துள்ள இடத்தில் சென்னை கேசவப் பெருமாள் கோயிலும், சென்னை மல்லீஸ்வரர் திருக்கோயிலும் ஒன்றையொன்று அணைத்ததுபோல் அருகாமையில் அமைந்திருந்தன. நகரின் சென்னிபோல் விளங்கிய இக்கோயில்கள் இருந்த இடமே சென்னிநகர் எனப்பட்டுக் காலப்போக்கில் சென்னை நகரமாக மாறியிருக்கக் கூடும். கி. பி. 1646ஆம் ஆண்டில் நாகபட்டர் என்ற தனவந்தரும், 1668இல் திம்மப்பர் என்ற செல்வரும் இக்கோயில்களுக்கு மானியங்களை வழங்கியுள்ளனர்.

கி. பி. பதினெட்டாம் நூற்றாண்டில் பரதவர்களின் தலைவனான மதுரேசனுடைய வாழைத் தோட்டங்கள் இன்றைய கோட்டை பகுதியில் இருந்தன, அங்கு பரதவர்களின் சிறு குப்பங்கள் மட்டுமே அமைந்திருந்தன. பின்னர் பல இனத்தவர்கள் அங்கு குடியேறத் துவங்கினர். கிழக்கு இந்தியக் கம்பெனியார் தங்களது வர்த்தகத்தைப் பெருக்கும் நோக்கத்துடன் மதுரேசனின் வாழைத் தோட்டத்தை விலைக்கு வாங்கி, அங்கு ஒரு பண்டக சாலையை அமைத்தனர். போர்த்துக்கீசியரும், டச்சுக் காரர்களும், பிரான்ஸ் நாட்டவரும் இங்கு வந்து வணிகத்தில் ஈடுபடத் துவங்கியதும் சண்டை, சச்சரவுகள் தலை தூக்கத் துவங்கின. மைசூர் மன்னர் ஹைதர் அலி சாந்தோமைத் தாங்கிச் சூறையாடினான். இதே நேரத்தில் சென்னையில் நிலையாகப் பல காலம் வாழ்ந்து வந்தவர்களுக்கும், பின்னர் வந்து குடியேறிய மக்களுக்கு மிடையே ஏற்பட்ட பூசல்கள் வலங்கை, இடங்கைப் போராக வலுத்தது.

ஹைதர் அலி ஆலயங்களிலுள்ள விக்கிரங்களைக் கொள்ளையடிப்பதாகச் செய்தி பரவியது. வைதிகர் பலர்

தங்களது அபிமான ஆலயங்களிலுள்ள உற்சவத் திருமேனிகளை எடுத்துச் சென்று பாதுகாப்பான பகுதி களில் ஒளித்து வைத்தனர்.

கிழக்கு இந்தியக் கம்பெனியார் தங்களது படை பலத்தைப் பெருக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டதால், 1708ம் ஆண்டில் வலுவான கோட்டையைக் கட்டினர். இராணுவத்தை அதிகரிக்க நிலம் தேவைப்பட்டதால் சென்னை மல்லீஸ்வரர், சென்னை கேசவப் பெருமாள் ஆகிய இரு கோயில்களையும் இடித்தனர். இதனால் வெகுண்ட மக்கள் கம்பெனி ஆட்சிக்கு எதிராகக் கலகத்தைத் துவக்கினர். சூறாவளி போலப் பரவிய கலகத்தையடக்க இயலாமல் ஆங்கிலேயர் தவித்தனர்

அக்காலத்தில் உலகியல் அனுபவமும், செல்வமும் நிரம்பிய தமிழ்ப் பெருமக்கள் பலர் கோட்டையில் கம்பெனி யாருக்கு உதவியாக உத்தியோகம் பார்த்து வந்தனர். அவர்களுள் ஒருவரே மணலி முத்துகிருஷ்ண முதலியார். இவர் கம்பெனியில் முக்கிய பதவி வகித்து வந்த பிக்கோட் கோமகனிடம் மொழித் தரகராகப் பணிபுரிந்து வந்தார். ஒரு நாள் பிக்கோட்கோமகன் கலகத்தைத் தீர்ப்பதற்கான வழிவகைகளை முத்துகிருஷ்ண முதலியர்ரிடம் கலந்து ஆலோசித்தார். சேனைகள் தங்குவதற்கு வேறு இடங் களைத் தேடாமல் மக்கள் பெரிதும் மதித்துவந்த கோயில் களை இடித்தது தவறு என்று பிக்கோட்கோமகன் உணரு மாறு முத்துகிருஷ்ணர் உரைத்தார். இடித்த கோயில் கற்களைக் கொண்டே வேறு இடத்தில் அதே கோயில் களைக் கட்டி விடுவதாகவும் முதலியார் கருத்துத் தெரிவித் தார். இதனால் மனம் மகிழ்ந்த பிக்கோட்துரையவர்கள் ஆலயம் அமைப்பதற்குப் போதிய இடமளித்தார். கம்பெனியாரின் ஆதிக்கத்திற்குட்பட்ட சாணிகுளம், பெருமாள் கோயில் தோட்டம், செக்குமேடு, தண்டையார் பேட்டை ஆகிய பகுதிகளையும் கோயிலின் நிர்வாகத்திற் காக உவந்தளித்தார். புதிதாக ஆலயங்களைக் கட்டுவ

தற்காக 500 பூவராகன் அளிப்பதாகவும் உறுதியளித்தார் ஆனால் பணத்தை ஏற்றுக்கொள்ள முதலியார் மறுத்தார்; பிறவற்றை ஏற்றுக் கொண்டார். ஆத்திகச் செம்மலான மணலி முத்துகிருஷ்ண முதலியாரின் உன்னத முயற்சியால் கம்பெனியார் அளித்த நிலத்தில் இரு அற்புத ஆலயங்கள் எழுந்தன. இரு மூலஸ்தானங்களிலும் ஆதி கோயில்களிலிருந்த உற்சவத் திருவுருவங்களே இடம் பெற்றன. கோயில் கட்டுவதற்கான முழுச் செலவுகளையும் முத்துகிருஷ்ண முதலியாரே ஏற்றுக் கொண்டார். கோயில்கள் காரணமாகத் துவங்கிய கலவரம் அடங்கியது. இச்சம்பவங்கள் கி. பி. 1700ம் ஆண்டில் தாமஸ் மன்றோ கவர்னராக இருந்த காலத்தில் நிகழ்ந்தன.

ஆலயம் கட்டி வழிபாடுகள் தொடங்கிய போதிலும் கேசவப் பெருமாளின் உற்சவத் திருவுருவம் கிடைக்கவில்லை. ஹைதர் அலியின் வெறிக்கு அஞ்சிய ஒரு பட்டர் கேசவரின் உற்சவத் திருவுருவத்தை எடுத்துச் சென்று திருநீர்மலை ஆலயத்தில் பதுக்கி வைத்திருந்ததாகச் செய்தி முதலியாரை எட்டியது. திருநீர்மலைக்கு உடனே பயணமானார், கேசவரின் உற்சவரை எடுத்து வந்த பட்டாச்சாரியார் உயிர் துறந்து பல நாட்கள் ஆகிவிட்டதாக அறிந்தார். திருநீர்மலையிலுள்ள உற்சவத் திருவுருவங்களுடன் கேசவரின் திருவுருவமும் கலந்து விட்டதாகவும் அவருக்குச் செய்தி கிட்டியது.

நின்றான் இருந்தான் கிடந்தான்
நடந்தாற்கு இடமாம் மலையாவது திருநீர்மலையே''

என்ற திருமங்கையாழ்வாரின் பாசுரத்திற்கேற்ப நான்கு உற்சவத் திருமேனிகள் இவ்வாலயத்தில் இருந்தனவாம். அவற்றுடன் சென்ன கேசவனும் சேர்ந்து ஐந்து விக்கிரகங்கள் கருவறையில் இடம் பெற்றிருந்தன. கோவில் நிர்வாகிகளுடன் மணலி முத்து கிருஷ்ண முதலியார் ஆலோசனை நடத்தினார். ஐந்து உற்சவர்களுள் சென்ன

கேசவரின் திருவுருவம் எது என்பதை எவராலும் அடையாளம் காட்ட முடியவில்லை. ஐந்து விக்கிரகங்களுள் ஒன்றான நரசிம்மரின் உருவத்தைச் சென்ன கேசவப் பெருமாள் கோயிலில் உற்சவராக அமர்த்தினர். சில காலம் கழிந்த பின்னரே கேசவரின் உற்சவ விக்கிரகம் திருநீர்மலையிலேயே தங்கிவிட்ட விபரத்தை அறிந்தனர். இதுவும் தெய்வச் செயலே என மணலியார் மனம் அமைதியடைந்தார்.

இவ்வாறு கேசவப் பெருமாள் கோயிலில் கேசவர் மூலவராகவும், நரசிம்மர் உற்சவராகவும் அருள் பாலிக்கின்றனர். மூலவரான கேசவரின் திருநட்சத்திரம் திருவோணம்; உற்சவரான நரசிம்மரின் நட்சத்திரம் சுவாதி, திருநீர்மலையிலுள்ள உற்சவர் கேசவப் பெருமாள் கோயிலில் இடம் பெற்றிருப்பதால் இக்கோயிலிலுள்ள பெருமாளைத் திவ்விய தேசத்து எம்பெருமாள் என்றே குறிப்பிடுகின்றனர். திருமங்கை ஆழ்வார் பாடிய பத்து பாசுரங்கள் (பெரிய திருமொழி, இரண்டாம் பத்து, நான்காம் பதிகம்) நித்தியானு சந்தானத்தில் இன்றும் இங்கு அனுசரிக்கப்படுகின்றன. அழகிய சிங்கரைப் போற்றும் ''தாங்காததோர் ஆளரியாய்'' என்ற பாசுரம் (நான்காவது பாசுரம்) மட்டும் இருமுறை சேவிக்கப்படுகிறது. திருவாராதனைப் பொழுதில் மந்திர மண்டபத்தில் பூதத்தார் இயற்றிய

''பயின்றது அரங்கம் திருக்கோட்டி பன்னாள்
பயின்றதுவும் வேங்கடமே பன்னாள்—பயின்றது
அணிதிகழும் சோலை அணிநீர் மலையே
மணி திகழும் வண்தடக்கை மால்'' (இரண்டாம் திருவந்தாதி) என்ற பாடல் பெருமாளிடத்தில் இருவேளையும் ஓதப்படுகிறது.

சென்னை கேசவப் பெருமாள், சென்னை மல்லீசர் ஆகிய கோயில்களுக்குப் புனர் வாழ்வு அளித்த மணலி

முத்துகிருஷ்ண முதலியார் இலக்கியத்திலும், சமயத்திலும் பெரும் பற்று உடையவராய்ப் பல திருப்பணிகளையும், அறக்கட்டளைகளையும் செய்வித்தார். இக்கோயில்களின் நிர்வாகம் அவரது குடும்பத்தினராலேயே இன்றும் மேற் கொள்ளப்பட்டு வருகிறது. கோயிலில் இவர்களே பல திருப்பணிகளைச் செய்தனர். மணலி சரவண முதலியார், கிருஷ்ணசாமி முதலியார் ஆகியோரின் முயற்சியால் கேசவர் கோயிலில் மண்டபம் எழுந்தது. ஸ்ரீநிவாச முதலியார் பல மண்டபங்களைக் கட்டுவித்தார். மாண வர்கள் தங்கிப் படிப்பதற்காக விடுதி ஒன்றை அமைத்து, மாணாக்கர்களுக்கு உபகாரச் சம்பளம் அளிக்கவும் வழி செய்தார். மணலி இராமகிருஷ்ண முதலியார் காலத்தில் கேசவர் கோயிலில் திருப்பாவையும், மல்லீசர் ஆலயத்தில் கந்தர் அனுபூதியும் சலவைக் கற்களில் பொறிக்கப் பட்டன. மல்லீஸ்வரர் கோயிலில் தளவரிசை புதுப்பிக்கப் பட்டது. அருணகிரிநாதரின் திருவுருவம் பிரதிஷ்டை செய்யப்பட்டது. தேர்ச்சீலை, குடை, கொடி, மகரத் தோரணம், மேற்கட்டி, பள்ளியறை தலையணை, மெத்தை, பட்டு பரிவட்டம், வெள்ளிக் கட்டியம் ஆகியன அளிக்கப்பட்டன. ஆண்டாளுக்கு வெள்ளிக்கவசம் சார்த்தப்பட்டது, இவருக்குப் பின்னர் பல திருப்பணிகள் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன.

சென்னைகேசவர் ஆலயத்தின் மீது பற்றுடைய ரொட்டல அப்பாயி செட்டியார் என்ற செல்வந்தர் முறை யாகத் திருவிழா நடத்த விரும்பினார். அதற்கு மூலதன மாகப் பதினொன்றாயிரம் வெண்பொற் காசுகளும் நாதஸ் வரக் கச்சேரிக்கு மூலதனமாக 10000 வெண்பொற்காசு களும் அளித்தார். அந்த மூலதனத்திலிருந்து கிடைக்கும் வட்டித் தொகை ஆனித் திருவிழா மற்றும் மாத விழாக்கள் கொண்டாடப் பயன்படுகின்றது. பொதுமக்களிடமிருந்து பொருளை வசூலித்துக் கோயில் மண்டபத்தைக் கட்டினார்.

# கேசவப் பெருமாள் கோயில்

தேவராஜ முதலி வீதியிலிருந்து நோக்கினால் இடப் புறம் தெரிவது கேசவப் பெருமாள் ஆலயமாகும். வர்த்தகம் நன்கு நடைபெறும் கடைகள் நிறைந்த நீண்ட மண்டபம் வழியாகக் கோயிலை நோக்கிச் செல்லலாம். அடுத்துள்ள அலங்கார மண்டபத்தில் திருவிழாக் காலத்தில் பெருமாள் பூர்ண அலங்காரங்களுடன் காட்சியளிப்பார். வடக்கு நோக்கிய இம்மண்டபத்தில் எம்பார் காட்சி தருகிறார். பின்னரே ஒரே பிரகாரத்தையுடைய திருக்கோயிலினுள் நுழையலாம். தெற்குப் பிரகாரத்தில் சக்கரத்தாழ்வார், ஆஞ்சநேயர், முதலாழ்வார்கள், திருமழிசை, குலசேகரர், தொண்டரடிப் பொடி, திருப்பாண், திருமங்கையார் ஆகிய ஆழ்வார்கள், திருக்கச்சி நம்பிகள், பராசரபட்டர், வேதாந்த தேசிகர் ஆகியோரை வரிசையாகத் தரிசிக்கலாம்.

மேற்குப் பிரகாரத்தில் சக்கரவர்த்தித் திருமகனைத் துதித்தவாறே தாயாரின் சந்நிதியை அடையலாம். செங்கமலத் தாயார் என்ற திருநாமத்தையுடைய அம்மன் கனிவூட்டும் பார்வையுடனும், பரிவுமிக்க கண்களுடனும் எழிலூட்டும் வதனத்துடனும் பக்தர்களை வரவேற்கிறார்.

"திருமகளும் மண்மகளும் ஆய்மகளும் சேர்ந்தால்
திருமகட்கே தீர்ந்தவாறு என்கொல்—திருமகள் மேல்
பாலோதம் சிந்தப் படநா கணைக் கிடந்த
மாலோத வண்ணர் மனம்"

என்ற பொய்கையாழ்வாரின் பாடலைப் பாடியவாறே தாயாரை வணங்கி விடை பெறலாம். வைகுண்ட வாசலைக் கண்ணுற்றவாறு வடக்குப் பிரகாரத்தையடையலாம்.

வடக்குப் பிரகாரத்தின் துவக்கத்தில் ருக்மணி, சத்திய பாமா சமேதரான வேணுகோபாலன் மூலவராகவும் உற்சவராகவும் தரிசனம் தருகிறார். இதே சந்நிதியில் நவநீத கிருஷ்ணனின் உலோகத் திருமேனியையும் காண லாம். அடுத்து ஆண்டாள், பிள்ளை லோகாச்சாரியார், மணவாள மாமுனிகள், நம்மாழ்வார், மதுரகவியாழ்வார், நாதமுனிகள் ஆகியோரையும் தரிசிக்கலாம்.

வெளிப் பிரகாரத்தை வலம் வந்து முடித்தவுடன் தங்க முலாமிட்ட பலிபீடம், துவஜஸ்தம்பம் ஆகியவற்றைக் கண்டவாறு மகா மண்டபத்தையடையலாம். இதன் கீழ்ப் புறத்தில் பெரிய திருவடியான கருடாழ்வார் மேற்கு நோக்கியவாறு காட்சி தருகிறார். சேனை முதலியார், ஆளவந்தார், கூரத்தாழ்வார், இராமானுஜர், முதலி யாண்டார் ஆகியோரைத் தரிசித்தவாறு மூலஸ்தானத்தை யடையலாம்.

மூலஸ்தானத்தில் ஆதார பீடத்தின் மீது சென்னை கேசவர் ஸ்ரீதேவி பூதேவி சமேதராக எழுந்தருளியுள்ளார். அவருக்கு முன்னர் தங்க பூபாலராயன் என்ற பீடத்தின் மீது உற்சவர்கள் தங்கியுள்ளனர். கேசவரைக் கண்டவுடன்

"ஆசைவாய்ச் சென்ற சிந்தையராகி
அன்னைஅத்தனென் புத்திரர் பூமி
வாசவார் குழலாள் என்று மயங்கி
மாலும் எல்லைக்கண் வாய்திறவாதே

கேசவா! புருடோத்தமா! என்றும்
கேழல் ஆகிய கேடிலீ என்றும்
பேசுவார் அவர் எய்தும் பெருமை
பேசுவான் புகில் நம்பரம் அன்றே''
என்ற பாடலைப் பாடியவாறு வணங்கலாம்.

ஒரே சந்நிதியில் மூலவர், கௌதுகர், உற்சவபேரர், சயனபேரர், பலிபேரர், சக்கரத்தாழ்வார் ஆகியோரைத் தரிசித்தபின் கோவில் வலம் முடிவுறுகிறது.

(1) மூலவர்—திரவபேரம், அசையாப் பொருள். (2) கௌதுபர்—அசையாப் பொருள்: மூலவருக்கு அடுத்தவர், மூலவர் சிலாரூபி; கௌதுபர் உற்சவமூர்த்தி, (3) உற்சவபேரர்—வீதியுலா வருபவர் (4) சயனபேரர்—பள்ளியறைக்குச் செல்பவர், (5) பலிபேரர்—உற்சவம் இல்லாத நாட்களில் பிரகாரத்தை வலம் வந்து துஷ்ட தேவதைகள் அணுகாமல் காப்பவர், (6) சக்கரத்தாழ்வார்—உற்சவத்தில் முன் செல்பவர்.

இக்கோயிலில் சித்திரையில் (10 நாட்கள்) பிரம்மோற்சவம் நடைபெறும். திருவோணத்திற்கு ஒன்பது நாட்களுக்கு முன் கொடியேற்றப்பட்டுத் திருவோணத்தன்று தீர்த்தவாரி நிகழும். பஞ்சபருவ விழாக்களும், ஆழ்வார்களின் திருநட்சத்திரங்களும் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன. பெரியாழ்வார் உற்சவம் விமரிசையாக நடைபெறும். இக்கோயிலில் தங்கமுலாம் பூசிய கருடவாகனமும், குதிரை வாகனமும், வெள்ளி முலாம் பூசிய சேஷவாகனமும், வெள்ளியாலான சிறிய யானை வாகனமும், ஜெர்மன் சில்வராலான பெரிய யானை வாகனமும், கண்ணாடியாலான அன்ன வாகனமும் பயன்படுத்தப்படுகின்றன. மரத்தாலான அன்னம், புன்னை, சிம்மம், யாளி, சந்திரப்பிரபை ஆகியனவும் உள்ளன.

# சென்னை மல்லீஸ்வரர் திருக்கோயில்

தேவராஜ முதலித் தெருவிலிருந்து நோக்கினால் வலது புறத்தில் சென்னை மல்லீஸ்வரர் திருக்கோயிலைக் காணலாம். இக்கோயிலின் முகப்பிலுள்ள மண்டபத்தில் மலர்களும் மாலைகளும் விற்கப்படுகின்றன. இக்கோயி லில் இரண்டு பிரகாரங்கள் உள்ளன. யாக சாலை, சூரியர், வரதகணபதி ஆகியோரைக் கடந்து சென்று பிரசன்ன விநாயகரின் தரிசனத்தைப் பெறலாம். அவருக்குப் பின்புறம் அபிஷேகக் கிணறு உள்ளது. மேற்குப் பிரகார முதலில் பசுமடமும், வில்வமரமும் காண லாம். குமரக்கடவுளைத் துதித்தவாறு கோடியில் தனிச் சந்நிதியில் கோயில் கொண்டுள்ள பிரமராம்பிகை அம்மனின் அருளைப் பெறலாம்.

ஆரணனும் ஆரணனும் ஆரணத்துக்(கு)
எட்டாத அரனும் என்னும்
காரணர்கள் மூவரையும் தரித்துயிர்த்த
அடையாளம் காட்டுமாபோல்
சீரணவும் திருவயிற்றின் மூவரை வார்ந்(து)
அழகெறிக்கும் செல்வத்தாயை
பேரணவும் சென்னைநகர்ப் பிரமராம்
பிகை மயிலைப் பேசி வாழ்வாம்.

(விநாயக புராணம்).

பக்தர்கள், ஆன்மிகச் சொற்பொழிவுகளைக் கேட்டு மகிழும் அனுபூதி மண்டபத்தில் சிவனடியார்களின் முயற்சி

யால் பிரதிஷ்டை செய்யப்பட்ட அருணகிரிநாதரின் திருவுருவைக் காணலாம். மேற்குப் பிரகாரத்தின் கீழ்க்கோடியில் ஆறுமுகர் (உற்சவர்), பைரவர், ஆதிசங்கரர் ஆகியோருக்கு இடமுள்ளது. கலியாண மண்டபத்திலுள்ள ஒன்பது தூண்களை யலங்கரிக்கும் நிருத்த கணபதி, தென்முகக் கடவுள், மாணிக்கவாசகர், சந்திரசேகரர் போன்ற சிற்பங்கள் காட்சிக்கு இனியன.

கிழக்குப் பிரகாரத்தின் முகப்பில் வேத, ஆகமங்கள் ஆகியவற்றில் குறிப்பிடப்படும் பதி, பசு, பாசம் ஆகிய தத்துவங்களை விளக்கவல்ல துவஜஸ்தம்பம், பலிபீடம், ரிஷபதேவர் ஆகியோரைக் கண்டு துதிக்கலாம். உட்பிரகாரத்தின் தென்கிழக்கு மூலையில் நவகிரகங்களும் அவர்களுக்கு எதிரில் சோமாஸ்கந்தர், கணபதி, பிரமராம்பிகை, சண்டேஸ்வரர் போன்ற உற்சவ விக்கிரகங்களும் உள்ளன. தெற்குப் பிரகாரத்தில் மகாகணபதி, ஆத்மலிங்கேசர், சமயக்குரவர் நால்வர், பொல்லாப் பிள்ளையார், தட்சிணாத் துவார கணபதி, அனுக்கிரக தட்சிணாமூர்த்தி ஆகியோர் இடம் பெற்றுள்ளனர். அறுபத்து மூவர் தெற்கு, வடக்கு ஆகிய இரு பிரகாரங்களில் காட்சியளிக்கின்றனர். மேற்குப் பிரகாரத்தில் சித்த கணபதியையும், மண், நீர், தீ, காற்று ஆகிய நான்கு சக்திகளுக்கு உரிய ஈசானம், தத்புருடம், வாமதேவம், அகோரம் ஆகிய நான்கு லிங்கமூர்த்திகளையும் காணலாம். கருவறையின் புறச்சுவர்களிலுள்ள கோஷ்டங்களில் நான்முகன், துர்க்கை, திருமால், தட்சிணாமூர்த்தி ஆகியோருக்கு இடமுள்ளது. வடக்குப் பிரகாரத்தில் பிட்சாடனரின் அற்புதமான திருவுருவத்தையும், சிவகாம சுந்தரி, மாணிக்கவாசகர் ஆகியோருடன் தோன்றும் நடராஜரின் சபையையும் கண்ணுறலாம்.

மூத்த மகனிடத்து ஆர்வம் ஈன்றெடுத்த
பிதாமகற்கு முதிரும் ஆற்றால்
பூத்த பொழில் சென்னைநகர்ப் புகுந்து
பிரசன்னமுகப் புத்தேன் அன்பர்

ஏத்தெடுப்ப பிரசன்னமாயிருக்கும்
ஆலயத்துள் எய்தி மன்றுள்
கூத்தியற்றும் இளைப்பாறும் சிதம்பரே
சுரர்மலர்த்தாள் குறித்து வாழ்வாம்.

(விநாயக புராணம்)

பள்ளியறையை அடுத்துக் கோலம் கொண்டுள்ள பால சுப்பிரமணியரை வணங்கியவாறு கருவறையை அடையலாம். வாயிலருகேயுள்ள சோமாஸ்கந்தர், சந்திரசேகரர் ஆகியோரைக் கடந்து துவாரபாலர்கள் காவல் புரியும் அர்த்தமண்டபத்துள் நுழைந்து மூலவரான மல்லீசுவரர் என்ற லிங்கமூர்த்தியைக் கைகூப்பித் துதிக்கலாம். புனித பூரணி மல்லீசுரரை நோக்கியவாறு அருந்தவ மாற்றுகிறார்.

''ஒன்றாகிப் பலவாகி உருவாகி அருவாகி உபயமாகி
நன்றாகித் தீதாகி நான்மறைக்கும் எட்டாத நலத்ததாகித்
தொன்றாகிப் புதிதாகிச் சுடராகி இருளாகித் துகள்
தீர்ந்தன்பர்
சென்றாடும் சுவைக்கடலாம் சென்னை மல்லீஸ்வரர்
மலர்த்தாள் சேர்ந்து வாழ்வாம்.
(கச்சியப்ப முனிவர் புனைந்த விநாயக புராணம்)

இக்கோயிலில் பங்குனி மாதப் பௌர்ணமியின் போது பிரமோற்சவம் நடைபெறும். பஞ்ச பருவங்களும், மாதந்தோறும் பௌர்ணமியும் இங்கு சிறப்பாக நடைபெறுகின்றன. இங்கு வெள்ளி ரிஷபம், பிரதோஷ நாயகரின் புறப்பாட்டிற்காகச் சிறிய வெள்ளி ரிஷபம், தங்கப்பால் பூசிய குதிரை, யானை வாகனங்கள், வண்ணப்பூச்சு நிறைந்த பூதம், இராவணன், மயில், சூரியபிரபை ஆகிய வாகனங்கள் உபயோகத்திலுள்ளன.

# 8. தருமபுரி

(தருமபுரி மாவட்டம்)

## பரவாசுதேவர் திருக்கோயில்

ஒன்றெனப் பல அறிவரும் வடிவினுள் நின்ற பரம் பொருள் உலகத்தைக் காப்பதற்காக ஐந்து நிலைகளில் காட்சியளிக்கிறான். கருணையே உருவமான ஈசன் உருவம் இல்லாத குறையைப் போக்கிப் பரமபதம் எனப் படும் வைகுந்தத்தில் திவ்விய மங்கள சொரூபியாக எழுந்தருளியுள்ளார். இந்த நிலையே மிக உயர்ந்த தாகக் கருதப்படுவதால் இதனைப் பரத்துவம் என்று கூறுவர். பரமபதம் நிறைவடையாத அழகினையுடைய பிரதேசமாக நலம் அந்தம் இல்லாத நாடாகும். எனவே, இதனை நித்திய விபூதி என்பர். ஆனால் இந்நிலையை நித்தர் முக்தர்களான பரமஞானிகள் மட்டுமே தமது அனுபவத்தால் அடைய முடியும். நான்கு சுவர்களுக்கும் இடையே அமைந்த நீர்போல எவருக்கும் எட்டாத பகுதியில் உள்ள இந்நிலையில் எழுந்தருளியிருப்பவரைப் பரவாசுதேவன் அல்லது மகாவிஷ்ணு என்று குறிப்பிடுவர்.

எவராலும் அடைய முடியாது என்ற குறையை நீக்கப் பரமன் மேற்கொண்ட நிலையே வியூகம் எனப்படும். பிரிந்து நிற்றல் என்ற பொருளையுடைய இச்சொல்

பாற்கடலில் மாயோன் எழுந்தருளியுள்ள நிலையை உணர்த்தும். இந்நிலையில் வாசுதேவன், சங்கர்ஷணன், பிரத்யும்நன், அநிருத்தன் என்ற நான்கு உருவங்களாக அவர் பிரிந்து நிற்கிறார். வியூக நிலையை இந்திரன் போன்ற வானவர்களால் மட்டுமே அடைய முடியும். இக்குறையை நீக்கவே விபவம் என்ற மூன்றாவது நிலையைப் பரந்தாமன் ஏற்றார். இந்நிலை அவதாரம், ஆவேசம், அம்சம் என மூவகைப்படும். கிருஷ்ணன், இராமன் போன்ற இறைவனின் பரிபூரணத் தோற்றங்களையே அவதாரம் என மொழிவர். பரசுராமர் போன்ற தற்காலிகத் தோற்றம் ஆவேசம் எனப்பட்டது. க்ஷத்திரிய மரபினரை ஒழிக்கும் வரை மட்டுமே அவருக்குத் தெய்வீக சக்தி நிலைத்தது. விஷ்ணுவின் பஞ்சாயுதங்கள் உலகத்தில் நன்மையை நிலைநாட்டும் பொருட்டு ஞானிகளாகவும் தோன்றும் தன்மையே அம்சம் எனப்படும். ஆழ்வார்கள் இத்தொகுதியில் அடங்குவர். விபவமும் அவை தோன்றிய காலத்தில் வாழ்ந்த மக்களுக்கே அதிகம் பயன்பட்டது.

இக்குறையை நீக்கவே இறைவன் அந்தர்யாமித்துவம் என்ற நான்காவது நிலையை மேற்கொண்டார். பக்தர்களின் உள்ளத்தில் குடியேறி அவர்களுக்கு ஏற்ற வழியைக் காட்டுவதே இந்நிலை. உள்ளத்தில் உறையும் இறைவனை யோக நெறியால் மட்டுமே காண இயலும். கடினமான இந்நெறியின் மூலம் இறையனுபவத்தைப் பெறுவது ஒரு சிலருக்கு மட்டுமே ஏற்றது. இக்குறையைப் போக்கவே ஐந்தாவது நிலையான அர்ச்சாவதாரத்தைப் பரமன் ஏற்றார். அன்பர்கள் விரும்பும் உருவ நிலைகளில் வீடுகள், மடங்கள், கோயில்கள் ஆகியவற்றில் விக்கிரமாக எழுந்தருளும் நிலையே அர்ச்சாவதாரமாகும்.

பரத்துவ நிலையில் எழுந்தருளியுள்ள இறைவன் அழகு, உண்மை, நன்மை ஆகிய உயர்குணங்களின் பிரதி

நிதியாகத் திகழ்கிறார். இவற்றுள் பொலிவுக்கே அதிக முக்கியத்துவம் உண்டு. இத்தகையோனை 'சுபாச்சயன்' என இராமானுஜர் மொழிவார். அவரது வடிவழகை அதிகரிக்கவே பீதாம்பரம், கிரீடம், வனமாலை, கௌஸ்துபம் ஆகிய அணிகளையும் அவர் சூடியுள்ளார். இத்தகைய தோற்றமுடைய பரவாசுதேவனின் பொலிவைப் பாகவத புராணம் விவரிக்கிறது. ஒளி வீசும் ஆயிரம் தலைகளையும், திருக்கயிலை போன்ற வெண்மை நிறத்தையும் உடைய ஆதிசேடன் மீது வீற்றிருக்கிறார். உடல் கார்மேக வண்ணத்தைப் பெற்றுள்ளது. கண்கள் செந்தாமரை நிறத்துடன் தோன்றுகின்றன. உடலில் மஞ்சள் நிறத்தாலான பட்டாடை துலங்கும்; இவரது உடலை அரனமாலை, தோள் வளையம், அரைஞாண், யஞ்ஞோபவிதம், குண்டலம் ஆகியன அணி செய்கின்றன. மார்பில் ஸ்ரீவத்ஸமும் கழுத்தில் கௌஸ்துபமும், கரங்களில், சங்கு, சக்கரம், கதை, தாமரை ஆகியனவும் எழிலூட்டும். புன்முறுவல், தவழும் முகம்; அன்பும், அருளும் கொழிக்கும் பார்வை; வசீகரம் நிறைந்த புருவங்கள்; சீராக அமைந்த அவயவங்கள்; பளபளக்கும் கன்னங்கள்; நீண்டு திரண்ட புஜங்கள்; திருமகளின் வாசஸ்தலமான திருமார்பு; சங்கினை யொத்த கழுத்து; இலை போன்ற திருவயிறு; வனப்புமிக்க தொடை; மலர்கள் போல் மெல்லியதாள்; இவ்வாறு எழிலின் மறுவடிவமான தோற்றத்தைப் பெற்றுள்ளவரே பரவாசுதேவர்.

ஸ்ரீ வைகுண்டத்தில் இவ்வாறு பரிபூரண அழகு சொரூபியாக எழுந்தருளியுள்ள வைகுண்டநாதனை ஞானக் கண்ணால் தரிசிக்க இயலுமே தவிர ஊனக் கண்ணால் கண்டு களிக்க இயலாது. இந்தக் குறையை நிவர்த்தி செய்யவே பரவாசுதேவரின் திருவுருவத்தை அர்ச்சாவதார மூர்த்தியாகக் கோயில்களில் எழுந்தருளச் செய்தனர். வைகுண்டவாசன், வைகுண்டநாதன், பரவாசுதேவன் போன்ற திருநாமங்களுடன் இத்தகைய

தோற்றத்தைப் பல ஆலயங்களில் காணலாம். இவ்வாறு பரவாசுதேவன் என்ற திருநாமத்துடன் பரத்துவ நிலையில் உள்ள அதே தோற்றத்துடன் திருமால் எழுந்தருளியுள்ள ஒரு ஆலயம் தருமபுரி நகரிலுள்ளது. இக்கோயில் தருமபுரி நகரின் எல்லையில், திருப்பத்தூருக்குச் செல்லும் பாதையின் அருகே அமைந்துள்ளது. இப்பகுதி 'கோட்டை' என்றே அழைக்கப்படுகிறது.

சிவாலயத்தை ஒட்டியவாறு இக்கோயில் அமைந்துள்ளது இதன் பரப்பு ஒரு ஏக்கர் இருக்கும். இக்கோயிலில் ஒரே ஒரு பிரகாரமும், ஒரே விமானத்துடன் கூடிய மூலவரின் பிரதான ஆலயமும் உள்ளன. உள்ளே நுழைந்தவுடன் ஒரு மண்டபத்தில் சில ஆழ்வார்களின் திருவுருவங்கள் உள்ளன. மூலவரின் சந்நிதிக்கு முன் கம்பீரமான தோற்றத்தையுடைய இரு துவாரபாலகர்கள் உள்ளனர் இதனை அடுத்துள்ள கருவறையில் பரவாசுதேவர் காட்சியளிக்கிறார்.

இருபுறமும் இரு சிம்மங்களால் தாங்கப்படும் ஒரு பீடம்; அதன் மீது ஏழு தலைகளையுடைய ஆதிசேடன் 3 சுற்று மண்டலமிட்டவாறு நிற்கிறார்: இதன் மீது பரவாசுதேவர் வலது காலைக் குந்துகாலிட்டவாறும், இடது காலைப் பீடத்தின் மீது இருத்தியவாறும் அமர்ந்துள்ளார். அவரது இடது கரம் டோலோஹஸ்தமாக அமைந்துள்ளது இடது பாகத்தில் தொடைமீது திருமகள் அமர்ந்துள்ளார். திருமகளின் கால்கள் தாமரை மலரின் மீது படிந்துள்ளன. ஆதிசேட மண்டலத்தில் திருமாலின் இடது கரம் ஊன்றியுள்ளது இரு கரங்களில் சங்கும், சக்கரமும் துலங்குகின்றன. அவரது வலது திருவடியின் கீழ் கருடாழ்வாரும், இடது திருவடியின் கீழ் ஆஞ்சநேயரும் தொழுகின்றனர். திருமாலின் மார்பில் மணியாரங்கள் அழகாகச் செதுக்கப்பட்டுள்ளன. இவை அனைத்தும் ஒரே பிம்பத்தில் உருவாகியுள்ளன. இதுவே இத்திருவுருவத்தின் சிறப்பு.

இவ்வாறு தருமபுரியில் இருந்த கோலத்தில் பரவாசு தேவனாகத் தோன்றும் மகாவிஷ்ணுவே திருமலையில் ஸ்ரீநிவாசனாக நின்ற கோலத்திலும், திருவரங்கத்தில் அரங்கநாதனாகக் கிடந்த கோலத்திலும் காட்சியளிக்கிறாராம். இம்மூவருக்கும் நெருங்கிய தொடர்பு உள்ளதாம். பிரமனின் திருவுள்ளத்தின் பேரில் மூலவரின் திருவுருவம் பிரதிஷ்டை செய்யப்பட்டது. பின்னர் பஞ்ச பாண்டவர்களுள் ஒருவரான அருச்சுனன், சோழ வேந்தர்கள், நாயக்க மன்னர்கள். அதியமான் பரம்பரைச் சிற்றரசர்கள் ஆகியோர் இங்கு திருப்பணி புரிந்துள்ளனர்.

இங்கு தல விருட்சமாக ஆஷர்வும், உப தல விருட்சமாக வேப்பு. வில்வம் ஆகியனவும் உள்ளன. இம்மூன்று விருட்சங்களும் மும்மூர்த்திகளின் அம்சங்களாக விளங்குகின்றன.

இக்கோயிலில் காலையிலும், மாலையிலும் வழிபாடு நிகழும். இங்கு பணிபுரியும் பட்டரின் இல்லம் கோயிற் சுவரை ஒட்டியே அமைந்துள்ளது. வைகாசியில் தேரோட்டத்துடன் கூடிய பிரம்மோற்சவம் நிகழும். சித்திரைப் புத்தாண்டு நாள், சித்திரை பௌர்ணமி, நரசிம்ம ஜெயந்தி, லக்ஷ்மி திருநட்சத்திரம், ஆடிப்பூரம், தட்சிணாயணம், ஆவணி வரலட்சுமி விரதம், கிருஷ்ண ஜெயந்தி, நவராத்திரி. விஜயதசமி, தீபாவளி, கார்த்திகை தீபம், மார்கழி தனுர்மாத வழிபாடு, வைகுண்ட ஏகாதசி, உத்திராயாணம், தை சங்கராந்தி, ரத சப்தமி போன்ற திருநாட்கள் கொண்டாடப்படுகின்றன.

தர்மபுரியிலுள்ள கோலவிழி மகாமாரியம்மன் கோயில் அண்மையில் கட்டப்பட்டு நல்ல முறையில் இயங்குகிறது, தர்மபுரிக்குக் கிழக்கே பல காத தூரத்திற்கு அதியமான் பெருவழி என்னும் பெரிய பாதையை அதியமான் மன்னர்கள் அமைத்துள்ளனர். இவ்வழி முழுவதும்

பல கற்கள் நடப்பட்டுக்காத தூரம் குறிக்கப்பட்டுள்ளது. தர்மபுரிக்கு அருகேயுள்ள அதியமான் கோட்டையில் புராதனமான சென்னகேசவப் பெருமாள் கோயில் உள்ளது.

முற்காலத்தில் பரவாசுதேவர் கோயிலுக்கு அருகே ஒரு கோட்டை இருந்ததாகவும், அதனைத் திப்புசுல்தான் புதுப்பித்ததாகவும் கருதுகின்றனர். இப்பகுதி கன்னட மொழியில் 'ஹலே தர்மபுரி' என வழங்கப்பட்டது. தாமஸ் மன்றோ இப்பகுதியில் கவர்னராகப் பதவி வகித்த போது தோட்டம், குளம் ஆகியவற்றை அமைத்து அழகூட்டினார். ஜாவிளி சுப்பிரமணிய ஐயர் என்பவர் இவ்வூர் மீது பல அழகிய கீர்த்தனைகளை இயற்றியுள்ளார். ஏரிக்கரையில் கண்டெடுக்கப்பட்ட புத்தர் சிலையும், ராமக்கா, லெக்ஷ்மணக்கா என்ற சிலைகளும் அருங்காட்சியகத்திற்கு அனுப்பப்பட்டன.

வரலாற்றுச் சிறப்புமிக்க கோட்டை ஈஸ்வரன் கோயில் எனப்படும், மல்லிகார்ஜுனேஸ்வரஸ்வாமி திருக்கோயில் பரவாசுதேவர் கோயிலுக்கு மிக அண்மையில் உள்ளது.

# 9. திரிமூர்த்தி மலை

(கோவை மாவட்டம்)

## அமணலிங்கேஸ்வரர் திருக்கோயில்

மலை, ஆறு, கடல் போன்ற அனைத்து இயற்கைப் பொருட்களையும் இறைவனின் தெய்வநலம் பொருந்திய திருமேனியாகவே கொண்டு பாவித்தல் நலம்.

"எங்கும் திருமேனி யெங்குஞ் சிவசக்தி
எங்குஞ் சிதம்பரம் எங்குந் திருநட்டம்
எங்குஞ் சிவமாயிருத்தலா லெங்கெங்கும்
தங்குஞ் சிவனருட்டன் விளையாட்டதே" என்று
திருமூலர் இக்கருத்தையே வலியுறுத்துகிறார்.

வானளாவிய மலைச் சிகரங்களும், அகன்ற பெரிய அருவிநீரும், பச்சைப் பசேலென்று ஒளிரும் செடி, கொடிகளும் கடினமான சித்தத்தையும் உருக்கவல்லன. மலை, ஆறு, சோலை போன்றவை கூடிய இத்தகைய பதிகளே சித்தர்களின் இருப்பிடமாகும். இத்தகைய சூழலில் அமைந்துள்ள திருத்தலமே திரிமூர்த்திமலை (திருமூர்த்தி மலை). இத்திருத்தலம் கோயம்புத்தூர் மாவட்டத்தில், உடுமலைப் பேட்டையிலிருந்து 23 கி. மீ. தொலைவில் அமைந்துள்ளது. உடுமலைப் பேட்டையிலிருந்து 11, 11எ, 19, 24, ஆகிய எண்ணுள்ள நகரப் பேருந்துகள் திரிமூர்த்திமலை வரை செல்கின்றன.

ஒருமுறை நாரதமுனிவர் கற்புடைய பெண்களின் சிறப்பை அனைத்து உலகத்திலுள்ளவர்களும் அறிந்து கொள்ள வேண்டும் என்று திருவுள்ளம் கொண்டார். இரும்பினால் செய்யப்பட்ட இரு கடலைகளை ஏந்திய வாறு அவற்றைப் பொரித்துத் தருமாறு இந்திரன் போன்ற வானவர்களிடமும், அவர்களது பத்தினியர் களிடமும் அளித்தார். நாரதரின் விருப்பத்தை வானவர் களால் நிறைவேற்ற இயலவில்லை. நாரதர் முனிபத்தினி களிடம் கடலைகளை அளித்தார். கடலைகளைப் பொரிக்க அவர்களாலும் முடியவில்லை. பின்னர் கலைமகள், திரு மகள், அலைமகள் ஆகியோரையும் நாரதர் நாடினார். கற்புடைய பெண்டிரின் பெருமையை நிலைநாட்ட நாரதர் நடத்தும் நாடகத்தையறிந்த முப்பெரும் தேவியரும் பூவுலகிற்கு நாரதரை அனுப்பினர்.

எழில்மிகு இயற்கைச் சூழலிலுள்ள அத்திரி முனிவரின் ஆசிரமத்தை நாரதர் அடைந்து அவரது பத்தினி யான அனுசூயையிடம் இரும்புக் கடலைகளை அளித் தார். கற்பு நெறியில் சிறிதும் வழுவாத அக்காரி கையும் தனது உள்ளங்கைகளுக்கு இடையே அக்கடலை களைத் தேய்த்து இவற்றை வறுத்துக் கொடுத்தார். இந்நிகழ்ச்சியையறிந்த மும்மூர்த்திகளும் ஒரு சிறு நாட கத்தை நடத்தி, அதன் மூலம் அனுசூயையின் உயர்வை அனைத்துலகோரும் அறிந்து கொள்ளச் செய்ய எண்ணினர். நிர்வாண கோலத்திலுள்ள பிட்சாடனர் உருவத்தில் மும்மூர்த்திகளும் அத்திரி முனிவர் ஆசிரமம் முன் சென்று பிட்சை கேட்டனர். அப்போது அத்திரி முனிவர் வேறு இடம் சென்றிருந்தார். ஆடையணியாத துறவிகள் முன்னர் செல்வது முறையாகாது என எண்ணிய அனுசூயை தனது கற்பு நெறியின் மகிமையால் அவர் களைக் குழந்தைகளாக மாற்றி உணவளித்துச் சீராட்டி னார்.

மும்மூர்த்திகள் குழந்தைகளாக மாறிய செய்தியை நாரதர் மூலம் அறிந்த முப்பெரும் தேவியரும் இந்நாடகத்தில் தாங்களும் பங்கேற்க விரும்பினர். மும்மூர்த்திகளுக்கும் சுயஉருவத்தை அளிக்குமாறு மூவரும் அனுசூயையிடம் வேண்டினார். மும்மூர்த்திகளும், அவர்களது தேவியரும் தனது ஆசிரமத்திற்கு எழுந்தருளியுள்ளதால் அத்திரி முனிவரும், அனுசூயை தேவியும் பேருவகை அடைந்தனர். கற்பு நெறியில் சிறந்தோங்கும் அனுசூயையின் பெருமையை அனைத்து உலகோரும் அறிந்து, அவரைப் போற்றித் துதித்தனர். மும்மூர்த்திகளும் ஒரே பரம் பொருளின் மூன்று அம்சங்கள் என்பதையும் இச்சம்பவத்தின் மூலம் உலகோர் உணர்ந்து கொண்டனர். இவ்வாறு மும்மூர்த்திகள் எழுந்தருளிய தலமே திரிமூர்த்தி மலையாகும்.

அறநூல்களிலும், சாத்திரங்களிலும் நன்கு தேர்ச்சி பெற்றிருந்த கோகருணர் என்ற இரு மறையோர்கள் வாழ்ந்து வந்தனர். யமனின் கட்டளையின் பேரில் யமதூதுவர்கள் அவர்களுள் ஒருவனை யமலோகம் அழைத்துச் சென்றனர். அவ்வந்தணனுக்குச் சொர்க்கம், நரகம் ஆகியவற்றின் தன்மைகளை யமதருமன் உணரச் செய்தான். சிவபிரானை உள்ளன்புடன் பூசித்தால் நரகத்திலிருந்தும் விடுதலை பெற முடியும் என்ற உண்மையை யமதருமன் மூலம் அந்தணன் அறிந்தான். பூவுலகிலுள்ள திரிமூர்த்திமலையே சிவபூஜை புரிய உரிய இடம் என்பதையும் அந்தணன் உணர்ந்தான். பூவுலகிற்குத் திரும்பிய மறையவன் தனது தோழனுடன் திரிமூர்த்திமலையில் தவமியற்றி நற்கதியைப் பெற்றான்.

அரிச்சந்திரனும், சந்திரமதியும் இத்தலத்தில் சிவபெருமானை வழிபட்டுப் புத்திர பாக்கியம் அடைந்தனர். உமையன்னையை இருவரும் வழிபட மறந்ததால் அன்னை கோபம் கொண்டு அவர்களுக்குப் பிறந்த புத்திரன் பாம்பு

கடித்து உயிர் துறப்பான் என்று சபித்தார். அரிச்சந்திரனும், சந்திரமதியும் தங்களது தவறைப் பொறுக்குமாறு உளமாரத் துதித்தனர். பக்தர்களின் வழிபாட்டால் மனம் மாறிய அன்னையும் இறந்த பாலகன் உயிர் பிழைத்து நெடுநாள் புகழுடன் வாழ்வான் என்று பரிகாரம் கூறினார். அவ்வண்ணமே அரிச்சந்திரன் கொடுந்துன்பங்களை அனுபவித்த பின் இழந்த அரசை மீண்டும் பெற்று ராஜசூய வேள்வி நடத்தினான். இறையருளால் அவர்களது வாழ்வும் வளமிக்கதாக அமைந்தது.

கலிங்க நாட்டில் ஒழுக்க சீலனாக விளங்கிய ஒரு அந்தணனுக்கும், புண்ணியத்தின் உருவான அவனது இல்லத்தரசிக்கும் சுகுமாரி என்ற புத்திரி தோன்றினாள். இப்பெண் தனது பன்னிரண்டாவது வயதிலேயே மறுமையை அடைவதில் நாட்டம் கொண்டு உரிய முறையில் சிவபூஜை புரியலானாள். பொய்கைக் கரையில் கடும்தவம் புரிந்துவந்த சுகுமாரியின் அழகில் மனம் லயித்த விதூமன் என்ற கந்தர்வன் அவளையே பின் தொடரலானான். எத்துணை முறை தடுத்தும் கேளாத கந்தர்வனைக் குரங்காக (முசு) மாறுமாறு சபித்தாள். இவனே முசுகுந்தன் என்ற பெயருடன் பூவுலகில் செங்கோலாட்சி செலுத்தி வந்தான். தேவர்கள் அகிதவுஷ்டிரன் என்ற அரக்கனால் துன்புறுத்தப்பட்ட போது முசுகுந்தனின் உதவியை நாடினர். முசுகுந்தனும் அரக்கர்களை விரட்டியடிக்க உதவினான். அச்சமயத்தில் இந்திரன் ஒரு சாபத்தால் பீடிக்கப்பட்டிருந்ததால் முசுகுந்தனையே தேவலோகத்தையும் ஆட்சி செய்யுமாறு தேவர்கள் வேண்டினர். ஒருமுறை தேவலோகத்திலுள்ள அரம்பையர்கள் முசுகுந்தனின் முகத்தைக் கண்டு எள்ளி நகையாடினர், இதனால் பெரிதும் வருத்தமுற்ற முசுகுந்தன் நாரதர், சூரியன் ஆகியோரைச் சந்தித்தான். இருவரும் அருளியவாறு பூவுலகிலுள்ள திரிமூர்த்திமலை சென்று ஈசனை வழிபட்டு

மனித முகம் பெற்றான். வெகுகாலம் பூவுலகில் நல்லாட்சி புரிந்த பின்னர் சிவபெருமானின் திருவடிகளையடைந் தான்.

பிருகு முனிவரின் சாபத்தால் அசுரனாக மாறிய இந்திரன் கானகத்தில் சுயநினைவு இன்றித் திரிந்து கொண்டிருந்த போது திரிமூர்த்தி மலையில் தவம் புரியுமாறு நாரதர் அருளினார். இங்குள்ள ஈசனின் அருளால் அவனுக்குச் சாபவிமோசனம் கிடைத்தது. நார தரும் இங்கு முறையுடன் தவத்தில் ஈடுபட்டார். மும்மூர்த்தி களும் நாரதருக்குக் காட்சியளித்து அருள் புரிந்தனர். மூவரும் இங்கு ஒருங்கேயெழுந்து அருளாட்சி நடத்துமாறு நாரதர் வேண்டினார். மும்மூர்த்திகளும் அவரது விருப் பத்தை ஏற்றுக் கொண்டனர். தருமபுத்திரன் அஞ்ஞாத வாசத்தின் போது கிருஷ்ண பரமாத்மாவைச் சந்தித்தார். துரியோதனன் தீய சிந்தையுடையவனாகையால் போர் நடந்தே தீரும் என்று வலியுறுத்திய கண்ணபிரான் திரிமூர்த்தி மலைக்குச் சென்று இறைவனை வழிபடுமாறு கூறினார். அவ்வாறே பாண்டவர்கள் ஐவரும் திரௌபதி யுடன் திரிமூர்த்தி மலையில் ஈசனைப் பூசித்து மும்மூர்த்தி களின் அருளைப் பெற்றனர். நளமகாராஜனும் திரிமூர்த்தி மலையில் மும்மூர்த்திகளைத் துதித்து நல்லருள் பெற் றான்.

கஞ்சமலைக்கருகேயுள்ள காமதம் என்ற ஆரண்யத்தில் அத்திரி முனிவர் கற்பின் சிறப்பில் தனக்கு இணையற்ற வளும், திருமகளுக்கு ஒப்பானவளும் ஆன அனுசூயை யுடன் வசித்து வந்தார். அரனாரை வழிபடுவது, உற்றவர் களுக்கு உதவி புரிவது, மாணவர்களுக்குக் கல்வியும், நன்னெறியும் கற்பிப்பது ஆகிய புனித செயல்களைப் புரிந்தவாறு இவ்விருவரும் வாழ்ந்து வந்தனர். இயற்கை யின் சீற்றத்தால் மழை பொய்த்து வளம் குன்றியதால் மாணாக்கர்கள் தவக்குடிலை விடுத்து இடம் பெயர்ந்

தனர். அனுசூயை பிருதிவிலிங்கத்தை நிறுவி அதனை முறைப்படி வழிபட்டு வந்தார். பூசைக்குரிய இலைகளும், மலர்களும் வறட்சியால் கிடைப்பதற்கு அரிதான போதும் தனது மனத்தால் அவற்றைக் கற்பனை செய்து வழிபட்டு வந்தார். ஒருமுறை திதியின் புதல்வர்களான சில அசுரர்கள் அனுசூயையின் அழகில் மயங்கித் தொல்லைகள் அளித்தனர். தனது கற்பான நெருப்பும், இறைவனை வழிபடுவதாலுண்டான தபஸ் அக்கினியும் சேர்ந்து அவர்களை விரட்டியது. நீண்ட நாட்களாக யோகத்தில் ஈடுபட்டிருந்த அத்திரி முனிவர் நிஷ்டை கலைந்து தாகசாந்திக்காக நீர் கேட்டார். நீர் வறண்ட பகுதியில் நீரைத் தேடி அலைந்த அனுசூயையின் முன்பு கங்காதேவி தோன்றிக் குறிப்பிட்ட இடத்திலுள்ள பள்ளத்தைத் தோண்டுமாறு பணிந்தார். அவ்விடத்தில் பெருகிய நீரை முனிவருக்கு அளித்தார். சுற்றியுள்ள பகுதிகளில் செடி, கொடி எதுவும் இன்றி வறண்டிருப்பதைக் கண்ட அத்திரி முனிவர் நடந்தவற்றை மனைவி மூலம் அறிந்தார். கங்காதேவி அருளிய இடத்திலுள்ள நீரில் நீராடிக் கங்காதேவியைத் துதித்தார். இங்கு நிரந்தர நீர்நிலை ஒன்றை ஏற்படுத்துமாறு வேண்டினார். கங்கை அருளியவாறு வானநதி உற்பத்தியாயிற்று. சிவபெருமானும் காட்சியளித்து இத்தலத்தில் எழுந்தருள ஒப்புக்கொண்டார். அப்பகுதியில் பஞ்சம் நீங்கிச் சுபிட்சம் நிலவியது

கங்கையின் ஆணைப்படி அனுசூயை தோண்டிய பள்ளத்தில் உற்பத்தியான தோணிநதி எங்கும் வியாபிக்கும் தன்மையுடையது. இந்நதியுடன் தென்னாறு, பாலாறு ஆகிய நதிகளும் மலையினின்று வந்து சேரும். இக்கூடல் துறையில் நீராடினால் சகல பாவங்களிலிருந்தும் விமோசனம் பெறலாம். மலை மேலுள்ள பஞ்ச லிங்கங்களில் தோய்ந்து வருவதால் பஞ்சலிங்க தீர்த்தம் என வழங்கப்படும் நீர்நிலை கங்கையை விட அதிக புனிதத்துவம் பெற்றது. வசிஷ்டர் அளித்த சாபத்தால் புலை

யுருவம் பெற்ற திரிசங்கு என்று அரசன் விசுவாமித்திரரின் அறிவுரையின் பேரில் தோணி நதியில் நீராடி மும்மூர்த்தி களை வழிபட்டான். அம்மன்னனுக்குச் சொர்க்கத்தில் வீற்றிருக்கும் வாய்ப்பு கிடைத்தது.

இவ்வாறு திரிமூர்த்தி மலையின் புராதனப் பெருமை களையும் அங்குள்ள தீர்த்த மகிமைகளையும் உணர்த்தும் 'திரிமூர்த்தி மலைத் தலபுராணம்' என்ற நூல் விருத்தப் பாவரலான 963 பாடல்களையும், 18 படலங்களையும் உடையது. இதன் ஆசிரியர் வேலாயுத பண்டிதர் என்பவர். நாவிதர் என்ற மயிர்வினைஞர் குலத்தில் பிறந்த இப்பெருமான் மருத்துவப் பயிற்சியைத் தமது குலத் தொழிலாகக் கொண்டவர். சீறிய இலக்கிய நூற் பயிற்சி பெற்றுள்ள இவரது நடை எளியதாகவும் சுவை மிக்கதாகவும் உள்ளது. 78 அத்தியாயங்களும், 1857 பாடல்களும் உடைய சைவபுராணம் என்ற நூலையும், தாராபுரம் தலபுராணத்தையும் இவரே எழுதினார். இந்த நூற்றாண்டின் துவக்கத்தில் எழுதப் பெற்ற இந்நூல். 1910ஆம் ஆண்டில் அச்சிடப் பெற்றது. இத்தலபுரா ணத்தை உரைநடை வடிவில் எழுதியவர் சூரியனார் கோயில் சைவ ஆதீனகர்த்தராகிய ஸ்ரீலஸ்ரீ முத்துகுமார சுவாமி தேசிகரின் மாணவரான அருணாசலக் கவுண்டர் ஆவார்.

சக்கரகிரி எனப்படும் உடுமலையிலிருந்து 23 கி. மீ. தொலைவில் வனத்துறை மூலம் ஒதுக்கப்பட்ட 50 ஏக்கர் நிலப்பரப்பில் திருக்கோயிலும், 1 கி. மீ. தொலைவில் நீர் வீழ்ச்சியும், பஞ்சலிங்கேஸ்வரர் ஆலயமும் அமைந் துள்ளன. உயர்ந்த கோபுரமோ, நீண்டுயர்ந்த மதிற்சுவர் களோ இல்லாமல், தனித்தனியே அமைந்துள்ள சந்நிதி களுடன் கோயில் காட்சியளிக்கிறது. பாலாறு என்றும் அழைக்கப்படும் தோணி நதியின் கரையிலுள்ள சிறு குன்று ஆதியில் அதன் வடப்பக்கத்தில் வானுற வளர்ந்து

நிற்கும் கஞ்சமலையின் உச்சியிலிருந்து நழுவி வந்து இங்கு நின்று விட்டதாகக் கருதுகின்றனர். அருகிலுள்ள ஒரு பெரிய உருண்டைப் பாறையில் மூன்று தெய்வ உருவங்களைச் செதுக்கி அவற்றையே மும்மூர்த்திகளாக வழிபடுகின்றனர். இவ்வுருவங்கள் தலைகீழாக நிலை சாய்ந்திருப்பதைக் கண்டால் அவை செதுக்கியுள்ள பாறை நிலை பிறழியிருக்க வேண்டும் என்று எண்ண இடமுண்டு. முன்பு மலை மீதுள்ள செங்குத்தான இடத்திலிருந்த இப்பாறையின் மீது ஏற்பட்ட பூமியதிர்ச்சி அல்லது வேறு இயற்கை மாறுதலால் உருண்டு இந்நிலையடைந்திருக்கலாம். இவ்வியற்கை, செயற்கை உருவங்களையே திரிமூர்த்திகளாக வழிபடுகின்றனர். இயற்கையான பாறையில் செதுக்கப்பட்ட இவ்வுருவங்கள் முற்காலத்திலிருந்தே இவ்வாறு வழிபடப்பட்டிருக்க வேண்டும்.

இவற்றை அமணலிங்கம் என்றும் அமணலிங்கேஸ்வரர் என்றும் குறிப்பிடுகின்றனர் ஆணவ மலத்தை நீக்குவதற்கு உரிய கருவியாகிய குறி அல்லது அழகிய லிங்கம் என்ற பொருளில் அமலலிங்கம் என ஆதியில் வழங்கப்பட்டிருக்கலாம். அமலலிங்கம் என்ற பெயர் பிற்காலத்தில் மருவி அமணலிங்கமாக மாறியிருக்கக் கூடும். திரிமூர்த்திகள் கோயில் கொண்ட இக்குன்றையே அமணலிங்கம் என்றும் குறிப்பிடுவதுண்டு. இப்பதியை அடைவதற்காக இருந்த பாதையில், வடக்கே 1 கல் தொலைவில் முன்பு நிலப்பத்துக்கோயில் என்ற பதி இருந்ததாகவும் இன்று அக்கோயில் அழிந்து விட்டதாகவும் கூறுகின்றனர். மலைக்கோயிலிலிருந்து நிலக்கோயிலைப் பிரித்துக் காட்டவே இவ்வாலயம் இருந்ததாகவும் கருதுவர். நிலப்பத்துக் கோயிலிலிருந்த மூலவரான அமலநாதரின் திருவுருவமும் கிடைக்கவில்லையாம்.

வடக்கு நோக்கியவாறு அமைந்துள்ள திரிமூர்த்தி ஆண்டவர் சந்நிதிக்கு அருகே கிழக்கு நோக்கியவாறு

விநாயகர், சுப்பிரமணியர் ஆகியோர் தனி சந்நிதிகளில் எழுந்தருளியுள்ளனர். நவகிரகங்களுக்கும் தனி சந்நிதி உள்ளது. அருகேயுள்ள பழமையான கார்த்திகை ஜோதி கம்பம் ஒரே கல்லால் செதுக்கப்பட்டது. சுப்பிரமணியர், விநாயகர், திரிமூர்த்தி ஆகிய சந்நிதிகளின் முன்பு மண்டபங்கள் உள்ளன. அழகிய சிற்பங்களின் உறைவிடமான 8 கல் மண்டபம், ஆயிரம்கால் மண்டபம், திருமண மண்டபம் ஆகியனவும் இடம் பெற்றுள்ளன. மும்மூர்த்திகளும் பிட்சாடனர் கோலத்தில் கஞ்சமலை மீது தோன்றிய போது மலையின் சிகரம் ஒன்று பிளவுபட்டுத் தோணி நதி பக்கம் உருண்டு சென்றது. அங்கு நீராடிக் கொண்டிருந்த சப்தகன்னியர் மஞ்சள் உருண்டைகளை நிறுத்தி அச்சிகரம் இடம் பெயர்ந்து போகாமல் தடுத்து நிறுத்தினர். மும்மூர்த்திகளும் அக்கன்னியருக்குத் தரிசனம் அளித்து அருள் புரிந்தனர். இதற்கேற்ப சப்த கன்னியர்களின் திருவுருவங்களைக் குன்றின் கீழ்ப்பகுதியில் இன்றும் காணலாம். இக்கன்னியர்களை வழிபட்டால் திருமண பாக்கியம் கிடைக்கும் என நம்புகின்றனர்.

இங்கு தோணி நதியும் திருமலைக்கு மேல் 1 கல், தொலைவில் நான்முகனுக்குரிய தீர்த்தமும், சற்று உயர்ந்துள்ள மத்துவராயன் பாறைக்கு அருகே விஷ்ணு அல்லது அனுமந்த தீர்த்தமும், பஞ்சலிங்கங்களுக்கு அருகே சிவனுக்குகந்த தீர்த்தமும் உள்ளன.

இக்கோயிலில் காலசந்தி, உச்சிக்காலம், சாயரட்சை ஆகிய மூன்றுகால வழிபாடுகள் காமிக ஆகமமுறைப்படி நடைபெறுகின்றன. சந்நிதி காலை ஏழு மணிக்குத் திறக்கப்பட்டு மாலை ஏழு மணிக்கு மூடப்படும். காலை எட்டரை மணிக்குக் காலசந்தி பூஜையும், மதியம் 12½ மணிக்கு உச்சிக்கால வழிபாடும், மாலை ஆறுமணியளவில் சாயரட்சை பூஜையும் நடைபெறுகின்றன. இங்கு ஞாயிறு, அமாவாசை ஆகிய நாட்கள் வழிபடுவதற்குச் சிறப்பான நாட்களாகக் கருதப்படுகின்றன. அந்நாட்களில் சிறப்பு

அலங்காரமும், அபிஷேகமும் நிகழும். சிறப்பாக ஆவணி, தை ஆகிய மர்தங்களில் கதிரவனுக்கு உகந்த நாளான ஞாயிற்றுக் கிழமையன்று ஆயிரக்கணக்கில் சேவார்த்திகள் இங்குவந்து புனித நீராடி இறைவனைத் துதிப்பது உண்டு. ஆடி, புரட்டாசி, தை ஆகிய மாதங்களில் நடைபெறும் உலாக்களின்போது அதிக அளவில் பக்தர்கள் பங்கேற்பது உண்டு. புரட்டாசியில் சனிக்கிழமை விரதம் அனுசரிக்கும் அன்பர்கள் ஏழுமலையானின் ஆலயம் சென்று வழிபட்ட பின்னர் மறுநாள் திரிமூர்த்தி மலை வந்து தோணி நதியில் நீராடித் திரிமூர்த்திகளை வழிபடுகின்றனர். புத்திர பாக்கியம் நாடுவோர் பாலாற்றில் நீராடி உளமாற வழி பட்டால் தங்களது குறை நீங்கும் என நம்புகின்றனர். குன்றின் மீது உப்பு, குறுமிளகு ஆகிய பொருட்களைச் செலுத்தினால் உடலில் ஏற்படும் மரு, கட்டி போன்ற உபாதைகள் நீங்கும் என பக்தர்கள் நம்பிக்கை கொண் டுள்ளனர். இந்த வட்டாரத்தில் குழந்தைகளுக்குத் திரி மூர்த்தி அல்லது அமணலிங்கம் என்று பெயர் இடுவது உண்டு. கார்த்திகை மாதத்தில் நடைபெறும் சுவாமி புறப் பாட்டிற்கு மட்டும் ஒரு மரவாகனம் பயன்படுத்தப்படுகிறது. மகாசிவராத்திரியன்று மட்டும் இரவு நேரத்தில் பக்தர்கள் தங்கி வழிபாடுகளில் பங்கேற்பதுண்டு. இரவில் இங்கு தங்கினால் குளிர்ச் சுரம் ஏற்பட்டு மக்கள் இறந்து விடுவ தாக நம்புவதால் பிற நாட்களில் இங்கு இரவில் எவரும் தங்குவதில்லை. யோக சாதனைகளில் சிறந்து விளங்கும் பெரியார் ஒருவர்மட்டும் சிலகாலம் இங்கு தங்கியிருந்திருக் கிறார். இக்கோயிலுக்கு உண்டியல், சீட்டுகள், காணிக்கை, குத்தகை ஆகியவற்றின் மூலம் ஆண்டுக்கு நான்கு லட்சம் ரூபாய் வருமானம் கிடைக்கிறது. இக்கோயில் இந்து அறநிலையத் துறையின் இரண்டாம் செயல் அலுவலரின் மேற்பார்வையில் இயங்கி வருகிறது.

எத்துலப்ப நாயக்கர் என்பவர் காலத்தில் (கி.பி. 1793) நடைபெற்ற ஒரு ஒப்பந்தம் பற்றிய கல்வெட்டு

கோயிலுக்கருகேயுள்ள பாறையில் கிடைத்துள்ளது. அமணேஸ்வரருக்குத் திருமணவரியாக 4 பொன் வசூலித்துக் கொடுக்க அமணசமுத்திரத்தின் தலைவர் ஒப்புக் கொண்டார். நில உரிமைகளில் மாற்றம் ஏற்படாமல் தடுக்கவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

அகத்தியர் கயிலையில் நடைபெற்ற சிவபெருமான், பார்வதி ஆகியோரின் திருமணக் காட்சியைப் பொதிகை மலையில் கண்டார். மீண்டும் அக்கோலத்தை அகத்தியர் காண விரும்பியபோது அதற்கான இடத்தை இறைவன் திரிமூர்த்திமலையில் உணர்த்தியதாக நம்புகின்றனர். குறுமுனிவர் மலைமீது நிஷ்டையில் அமர்ந்து இக்காட்சியைக் கண்ட இடத்தில் பஞ்சலிங்கங்கள் உள்ளதாகக் கருதுவர். நான்முகன், திருமால், ருத்திரர், மகேஸ்வரர், சதாசிவன் ஆகிய ஐவரையும் குறிக்கும் பஞ்ச லிங்கங்கள் உள்ள பகுதி மலை மேல் 1 கி.மீ. தொலைவிலுள்ளது. ஈசன் கயிலைக் காட்சியை இங்கு காட்டியதால் இப்பகுதி தென்கயிலாயம் என்றும் வழங்கப்படுகிறது. இதற்கு அருகே அழகிய நீர்வீழ்ச்சியும் உள்ளது.

கோவை நகரத்தைச் சேர்ந்த சைவ பக்தரான பி. வெங்கடாசல முதலியார் அவர்களுக்கு இத்தலத்தில் இறையருள் கிடைத்தது. அவருக்கு ஒரு வயது முடிவதற்குள் நீரினால் ஆபத்து வர வாய்ப்பு உண்டு என்று ஒரு சோதிடர் ஆருடம் கூறியிருந்தார். இதனால் அவரது பெற்றோர்கள் சிறு பிராயத்தில் மிகவும் எச்சரிக்கையாயிருந்தனர். திரிமூர்த்தி மலைக்கு அவர் வந்தபோது ஒரு முறை மடுவில் தவறி விழுந்து இறையருளால் காப்பாற்றப்பட்டார். உடனே குளிர்ச் சுரமும் ஏற்பட்டது. தன்னைத் தொடர்ந்து ஒரு உருவம் வருவது போன்ற ஒரு பிரமை அவருக்குச் சில காலம் இருந்தது. திரிமூர்த்தி மலை ஈசரால் தான் காப்பாற்றப்பட்டதால் அத்தலத்தின் மீது அவர் பெரும் பற்று கொண்டார். ஆண்டுதோறும்

சித்திரை மாதத்தில் இத்தலத்திற்கு உறவினர், நண்பர்கள் சூழ வந்று பெருத்த பொருட்செலவில் சிறப்பு வழிபாடும், ஏழைகளுக்கு அன்னதானமும் அளிப்பதை அவர் வழக்க மாகக் கொண்டிருந்தார்.

உடுமலையிலிருந்து ஏழுகல் தொலைவிலுள்ள தளி என்ற ஊரையாண்டு வந்த பாளையக்காரர்கள் மலைக் கோயிலையும், நிலக்கோயிலையும் பெரிதும் பேணி வந்தனர். இங்கு அதிகாரிகளாகப் பணியாற்றியவர்கள் நளன், அரிச்சந்திரன் ஆகிய பெயர்களைப் பூண்டிருந் தனர்.

''உரை திரிமூர்த்தி வெற்பை ஒப்பதோர் தலமும் ஒண்சீர்
பெருகுமும் மூர்த்திக்கொப்பா மூர்த்தியும் பெரும் பாவங்கள்
கருகருட்டோணிக் கொப்பாந் தீர்த்தமும்கழறிலிந்த
ஒரு திரிபுவனத் துள்ளுமில்லை யென்ற றையவாகே''

(தலபுராணம்)

அமண சமுத்திரம், அமணேஸ்வரர் என்ற பெயர் களின் அடிப்படையிலும், பாறையிலமைந்துள்ள சிற்பங் களின் அமைப்பையும் கருத்தில் கொண்டு டாக்டர். சம்பக லட்சுமி என்ற தொல்பொருளியல் நிபுணர் இக்கோயில் சமணர் கோயிலாக இருந்ததென்றும், காலப் போக்கில் பாறைகள் சரிந்து நிலை மாறியவுடன் சமணத் தீர்த்தங் கரர்கள், காவல் தெய்வம் போன்ற உருவங்களை மும் மூர்த்திகள் உருவம் என்று கருதத் தொடங்கினர் என்றும் கருத்து தெரிவிக்கிறார்.

(ஆய்வுத்தேன் என்ற இதழ்)

# 10. திருக்கண்ணமங்கை

(நாகை-காயிதேமில்லத் மாவட்டம்)

## பக்தவத்ஸலப் பெருமாள் திருக்கோயில்

நித்தன் வருணை னெறி மார்க்கண்டேயனும் ரோமசனும்
கத்துந்தெரிசைப் புனல் உப்பலாவதகத்திலுயர்
புத்தமு தன்ன வபிடேக வல்லிமன் பூர்வநின்ற
பத்தர்களாவிப் பெம்மான் கணமங்கை பரஞ்சுடரே

(திருநின்றவூர் திருமலை அத்தங்கி தாதாரியர் தொண்டன் இயற்றிய 108 திருப்பதி அந்தாதி)

அமரர்களும், அவுணர்களும் அமுதம் பெறும் நோக்கத்துடன் திருப்பாற்கடலைக்கடைந்த போது முதலில் தோன்றிய காமதேனுவையும், கற்பகத் தருவையும் வானவர்கள் தங்களது உலகிற்கு எடுத்துச் சென்றனர். பின்னர் மகாலக்ஷ்மி பாற்கடலில் தோன்றினாள். திருமால் திருமகள் மீது பெருவிருப்பு கொண்டார். திருமகளும் திருமாலை மணவாளனாக அடைய விரும்பினார். தனது விருப்பத்தை நிறைவேற்றி வைக்குமாறு சோழ நாட்டிலமைந்துள்ள ஆரண்யத்தில் கடுந்தவம் புரிந்தார். தேவியின் தவத்தை மெச்சிய மகாவிஷ்ணு அவ்விடத்திற்கு வருகை

புரிந்து அருகாமையில் கோயில் கொண்டார். தேவியைத் திருமணம் புரிந்து கொள்ள விரும்புவதாக ஒரு மடல் வரைந்து, அக்கடிதத்தைத் தனது மெய்க் காவலரான சேனை முதலியார் (விஷ்வக்சேனர்) மூலம் கொடுத்தனுப்பினார். மகாவிஷ்ணுவின் அன்பிற்கு ஏங்கிய திருமகளும் பெருமகிழ்ச்சி வயப்பட்டவராய்த் தோழிகள் புடைசூழ இறைவன் கோயில் கொண்டுள்ள இடத்திற்குச் சென்றார். வானவர்களும், தவசிகளும், பக்தர்களும் கண்டுகளிக்குமாறு அவ்விடத்தில் திருமண வைபவம் நடந்தேறியது. ஸ்ரீவைகுண்டத்தைவிட அவ்விடத்தையே திருமால் அதிகம் விரும்பியதால் அங்கு தேவியுடன் கோயிலில் எழுந்தருளினார். திருமகளை அடையும் பொருட்டு மகாவிஷ்ணு தன்னுடைய ஸிந்துவை (க்ஷீராப்தி) விட்டு வேறு இடத்தில் தங்கியதால் அவருக்கு 'ப்ருஹத் பஹிஸ் ஸிந்து நாதன்' அல்லது 'பெரும் புறக்கடல்' என்ற திருநாமம் ஏற்பட்டது. இத்திருநாமத்துடன் எப்பெருமான் கோயில் கொண்டுள்ள திருத்தலமே திருக்கண்ணமங்கையாகும். திருவாரூர், கும்பகோணம் பேருந்துப் பாதையில் திருவாரூரிலிருந்து 7 கி. மீ. தொலைவில் இத்திருத்தலம் அமைந்துள்ளது. இத்தலத்தின் கீழ்வீதி, நெடுஞ்சாலையுடன் கலக்கும் இடத்தில் மகாரதமும், அதற்காக ஏற்பட்ட மண்டபமும் உள்ளன. அதன் மேற்புறத்தில் அழகிய தோற்றத்துடன் கூடிய தர்சனபுஷ்கரிணி என்ற திருக்குளத்தைக் காணலாம். திருக்குளத்தின் கரையிலுள்ள ஆஞ்சநேயரைத் தொழுதவாறே கோயிலின் நுழைவு வாயிலை அடையலாம். முகப்பில் கோபுரமில்லாத போதிலும், வண்ணம் பூசப் பெற்ற திருவுருவத்தைக் கொண்டுள்ள நுழைவு வாயில் உள்ளது. உள்ளே நுழைந்தவுடன் இடதுபுறத்தில் திருக்கோயில் அலுவலகமும், வலதுபுறத்தில் மண்டபமும் உள்ளன. இதனையடுத்துக் கம்பீரமாகக் காட்சியளிக்கும் அகன்ற ஐந்து நிலை கோபுரம் உள்ளது. அதனைக் கடந்தவுடன் கம்பீரமாகத் தோற்றமுடைய கருடாழ்வாரின் தரிசனம் கிடைக்கும். பக்தகோடிகளின்

நியாயமான விருப்பங்களை நிறைவேற்றும் இவரைச் சிறந்த வரப்பிரசாதியாகப் பக்தர்கள் வழிபடுகின்றனர். ஞாயிற்றுக் கிழமைகளில் பட்சிராஜனுக்குத் திருமஞ்சனம் உண்டு. அவருக்கு உரிய திருநட்சத்திரமான ஸ்வாதி யன்று விசேடமாகத் திருமஞ்சனம் நிகழும் அமிர்தகலசம் எனப் பெயருடைய சுவையான தின்பண்டம் அப்போது நிவேதனமாக அளிக்கப்படும். கொடி மரத்தின் வடபுறத்தில் மணவாள முனிகளின் தனி சந்நிதி உள்ளது.

இச்சந்நிதியிலிருந்து துவங்கும் இரண்டாம் உட்பிரகாரத்தின் மத்தியில் மூலவரின் கருவறையைக் காணலாம். மூலவரான 'பெரும்புறக்கடல்' உபயநாச்சியார் இருமருங்கும் சூழச்சேவை சாதிக்கிறார். மூலவரின் சிலாவுருவம் சுமார் 14 அடி உயரத்துடன் மிகவும் கம்பீரமாக, நின்ற கோலத்தில் காட்சியளிக்கிறது. ஆலயங்களில் மூலவராகக் காட்சியளிக்கும் திருமால் மிகப்பெரிய உருவத்துடன் கோலம் கொண்டுள்ள தலங்களுள் இதுவும் ஒன்று. இப்பெருமானின் திருவருளை இத்தலத்தில் பெற்ற மார்க்கண்டேயரும், வருணனும், கைகூப்பியபடி மண்டியிட்டவாறு எதிர்எதிராகக் காட்சியளிக்கின்றனர். கருவறையின் நாற்புறச் சுவர்களிலும் திருமாலின் திருக்கலியாணக் காட்சியைத் தரிசிக்க எழுந்தருளிய வானவர்கள், தவசிகள், சங்கரன் போன்றோரின் திருவுருவங்களைக் காணலாம். மூலவருக்கு முன்னர் கோலம் கொண்டுள்ள எழில்மிகு உற்சவரின் திருநாமம் பக்தவத்ஸலன் என்பதாகும். தாய்ப் பசு போல அன்பர்களுக்குக் கருணையைப் பொழிவதால் இவருக்கு இப்பெயர் ஏற்பட்டது இவரைப் பத்தராவிப் பெருமாள் என்று குறிப்பிடுவதுண்டு. பக்தவத்ஸலனுக்கு அருகே ஸ்ரீதேவி, பூதேவி, ஆண்டாள், சந்தானகிருஷ்ணன் ஆகிய திருவிழா படிமங்களும் இடம் பெற்றுள்ளன. இக்கருவறையின் மேற்பகுதியை அலங்கரிக்கும் விமானம் 'உத்பல விமானம்' என்று பெயர் பெற்றுள்ளது. தனது உடலைப் பொருட்டாகக் கருதாமல் எம்பிரான் சேவையில் ஈடுபடுவதால் வற்றி உலர்ந்த உடலையுடையவர்

களை உத்பலர் என்று குறிப்பிடுவர். அத்தகையோருக்கு அருள்நல்கும் பெருமாள் எழுந்தருளியுள்ள விமானம் உத்பல விமானம் எனப்பட்டது.

மூலவரின் சந்நிதியை விடுத்து வெளிப் பிரகாரத்தை வலம் வந்தால் தனிக் கோயிலில் உள்ள கண்ணமங்கை நாயகித் தாயாரின் தரிசனத்தைப் பெறலாம். உற்சவருக்கு அபிஷேகவல்லி என்ற திருநாமம் உள்ளது. திருமாலின் கட்டளையின் பேரில் திருமணத்திற்கு முன்னர் தர்சன புஷ்கர்ணியில் அபிஷேகம் செய்து கொண்டதால் அபிஷேகவல்லி என்ற திருநாமம் ஏற்பட்டதாம். மூலவரின் சந்நிதிக்கு வடபுறத்திலுள்ள தனி சந்நிதியில் ஆண்டாள் காட்சியளிக்கிறார்.

கருடாழ்வாரின் சந்நிதிக்குத் தென்கிழக்கிலுள்ள மடைப்பள்ளியையடுத்து திருவந்திக்காப்பு மண்டபம் என்ற நான்கு கல் மண்டபம் உள்ளது. பஞ்சபர்வ புறப்பாடு காலங்களில் இம்மண்டபத்தில் பெருமாளுக்கும் தாயாருக்கும் திருவந்திக் காப்பு நடைபெறுவதுண்டு. மேற்கிலுள்ள அகலமான பிரகாரத்தில் அமைந்த பத்தியுலா மண்டபத்தில் தை அமாவாசை, மட்டையடி போன்ற உற்சவங்களின் போது திருமாலும், நாச்சியாரும் எழுந்தருள்வது உண்டு.

ஆண்டாள் சந்நிதிக்கு அருகே தெற்கு நோக்கியவாறு பரமபதவாசல் அமைந்துள்ளது. வைகுந்த ஏகாதசியுடன் துவங்கும் இராப்பத்து உற்சவத்தின் போது பெருமாள் இக்கோபுர வாசல் வழியாகச் செண்பகப் பிரகாரத்திற்கு எழுந்தருளுவார். இதனையடுத்துத் தெற்கு நோக்கியவாறு நிகமாந்த மகாதேசிகன், நவநீதகிருஷ்ணன், கோதண்டராமன் ஆகியோரது சந்நிதிகள் உள்ளன.

மூலவரின் சந்நிதியின் உட்புறம் நான்கு கற்றூண்களால் தாங்கப்படும் விசாலமான ஸ்ரீமண்டபம் உள்ளது.

இம்மண்டபத்தில் திருமால் திருமகளைத் திருமணம் புரிந்து கொண்டதாக ஐதீகம் நிலவுகிறது. இதனையடுத்துள்ள அர்த்தமண்டபத்தில் பன்னிரு ஆழ்வார்கள், திருக்கண்ணமங்கை ஆண்டான். ஆகியோரின் திருவிழாப் படிமங்கள் உள்ளன. இவர்களுக்கு மேல் இரு கரங்களுடன் விஷ்வக்சேனர் (சேனை முதலியார்) காட்சியளிக்கிறார். அனைத்து ஆலயங்களிலும் சதுர்புஜங்களுடன் தோன்றும் விஷ்வக்சேனர் இக்கோயிலில் இருகரங்களுடன் காட்சி தருவது அரிய அம்சமாகும். திருமாலைத் தரிசிக்க வரும் மகாலட்சுமி, நான்கு கரங்களுடன் காட்சியளித்தால் தன்னையே மகாவிஷ்ணு என நினைத்து விடுவாரோ என்ற எண்ணத்துடன் விஷ்வச்சேனர் இருகரங்களுடன் காட்சி தருவதாக இங்கு ஐதீகம் உள்ளது.

சிவாலயங்களில் மூலவரின் கருவறையின் புறச் சுவர்களிலுள்ள கோஷ்டங்களில் சில குறிப்பிட்ட திருவுருவங்கள் இடம் பெற்றிருக்கும். ஒருசில விஷ்ணு ஆலயங்கள் தவிரப் பிறவற்றில் இதுபோன்ற உருவங்களைக் காணவியலாது. ஆனால் திருக்கண்ணமங்கை திருக்கோயிலில், கருவறையின் பின்புறச் சுவர்களின் மூன்று புறங்களிலும் எண்ணற்ற அற்புதச் சிற்பங்கள் எழில் கூட்டுகின்றன. கல்லில் கைவண்ணம் புரிந்துள்ள தமிழனின் கைத்திறனை இத்திருவுண்ணாழிப் பிரகாரத்தை வலம்வந்தவாறு கண்டு இரசிக்கலாம். காளியமர்த்தனர், லக்ஷ்மி நரசிம்மன், வாமனர், பரசுராமர், இரணியனை அழிக்கும் நரசிம்மர், பலராமர், கோதண்டராமர், வேணுகோபாலர், நான்முகன், பரமபதநாதன், கஜேந்திரவரதர், பூவராகர், கலைமகள், நவநீதகிருஷ்ணர் என இச்சிற்பங்களின் பட்டியல் நீண்டு கொண்டே போகின்றது. சங்கு, சக்கரம், கதை, கடகம், பத்மம் ஆகிய திருமாலின் பஞ்சாயுதங்களும் ஒருங்கே காட்சியளிக்கின்றன. கண்ணனின் பால்ய லீலைகளைச் சுட்டும் ஒவ்வொரு நுட்பமான சிற்பமும் ஒரு

காவியம் பாடும். இச்சிற்பங்களுக்கு இடையே இசைக்கும் கந்தர்வர்களின் சிறு சிற்பங்களுக்கும் இடமுள்ளது.

பாற்கடலில் பாம்பணை மேல் பையத்துயிலும் பரமன் ஒரு காலை ஊன்றி ஒரு காலைத் தொங்க விட்டவாறு அமர்ந்துள்ள சிற்பம் அற்புதமானது. பாயாக விளங்கும் சேடன் இங்கு கோப்புடைய சீரிய சிங்காதனமாக விளங்குகிறார். ஊன்றிய காலின் மீது கையை ஒய்யாரமாக நீட்டியவாறு பரமன் அமர்ந்துள்ளார். இப்பரமபதநாதன் (வைகுண்டநாதன்) சங்கு, சக்கரம், திருமுடி ஆகியவற்றுடன் புன்னகை தவழக் காட்சியளிக்கும் அழகே அழகு. அனைத்துச் சிற்பங்களும் ஒன்றோடு ஒன்று எழிலில் போட்டியிடுவதாக விளங்குவதால் இக்கோயில் ஒரு கலைச் சுரங்கமாகவே திகழ்கிறது.

திருக்கண்ணமங்கை திருத்தலத்தின் பெருமைகளைச் சூத முனிவர் நைமிசாரண்யத்திலுள்ள முனிவர்களுக்குக் கூறியதாகப் பத்மபுராணத்திலுள்ள ஐந்தாவது காண்டம் (அத்தியாயங்கள் 81—8 ) மூலம் அறியலாம். விமானம், ஆரண்யம், மண்டபம், தீர்த்தம், க்ஷேத்திரம், நதி, நகரம் ஆகியஏழு லக்ஷணங்களால் இத்தலம் அமையப்பெற்றதால் இதனை ஸப்தாமிருத க்ஷேத்திரம் என வழங்குவர். மகா விஷ்ணுவின் திருக்கலியாணம் நடந்தேறியதால் 'ஸ்ரீ கிருஷ்ண மங்கள க்ஷேத்திரம்' என இதனை அழைப்பர். திருமகள் இங்கு சில காலம் தங்கி மகாவிஷ்ணுவைப் பதியாக அடையத் தவமியற்றியதால் இதனைச் சுற்றியுள்ள பகுதிகளுக்கு 'லக்ஷ்மிவனம்' என்ற பெயர் ஏற்பட்டது. திருக்கண்ணபுரம், திருக்கண்ணங்குடி, கபிஸ்தலம், திருக்கோவலூர் ஆகிய நான்கு திருத்தலங்களுடன், திருக்கண்ண மங்கையையும் இணைத்து இவ்வைந்து பதிகளையும் பஞ்சகிருஷ்ணாரண்யத் தலங்கள் என அழைப்பர். இப்பதியில் மகிழமரமே தலவிருட்சமாகும்.

நான்முகனிடமிருந்த நான்மறைகளை மது, கைடபர் என்ற இரு அசுரர்கள் அபகரித்துச் சென்றனர். இதனால் துயருற்ற பிரமதேவன் திருப்பாற்கடலையடைந்தான். திருமால் திருமகளைத் திருக்கண்ணமங்கையில் திருமணம் புரிந்து கொண்டு அங்கேயே தங்கிவிட்டதாக ஆதிசேடன் தெரிவித்தான். நான்முகனும் திருக்கண்ண மங்கை சென்று அங்குள்ள தர்சன புஷ்கர்ணியின் கரையில் கடுந்தவமியற்றினார். மகாவிஷ்ணுவும் மது, கைடபர்களை வென்று சதுர்வேதங்களை மீட்டு அவற்றை நான்முக னிடம் ஒப்படைத்தார். பிரம்மதேவனும் நான்மறைகளை நான்கு தூண்களாக நிறுத்தித் தானும் புஷ்கர்ணியின் மேல்புறத்திலமர்ந்தார். இவ்வாறு தன்னைத் துதித்த நான்முகனிடம் திருமால் வாத்ஸல்யம் கொண்டதால் பக்தவத்ஸலர் என்று திருநாமம் அவருக்கு வழங்க லாயிற்று.

வாமன அவதாரம் எடுத்துவந்த மகாவிஷ்ணு மகாபலியிடம் மூன்றடி மண்ணை, யாசித்துப் பெற்றார். அந்நிலத்தை அளிப்பதாக நீரைத்தாரை வார்த்தளித்த போது அந்நீர்த்துளிகள் வாமனரின் கட்டை விரலில் விழுந்தன. வாமனர் திரிவிக்கிரமராக உயர்ந்து, மூன்றாவது அடியால் அளந்தபோது பிரம்மாண்டம் உடைந்து அவரது கால்கட்டை விரலிலிருந்து நீர் பெரு கியது. உலகை நீரில் மிதக்கச் செய்தபின் இந்நீர் திருமாலின் திருவடிகளை வந்து சேர்ந்தது. திருமாலின் திருவடிகளிலுதித்து, மீண்டும் அவரது கட்டை விரல் களையே அடைந்ததால் இதற்கு 'விஷ்ணுபதி கங்கை' என்ற பெயர் உண்டாயிற்று மகாவிஷ்ணு திருக்கண்ண மங்கையில் கட்டை விரலைப் பதித்தபோது அப்பள்ளத் தில் தேங்கிய நீரே தர்சன புஷ்கர்ணியாக உருவெடுத்தது. இத்தீர்த்தத்தின் கீழ்க்கரையில் சிவபெருமானும் தென் கரையில் நான்முகனும், மேற்கரையில் பக்தவத்ஸலரும், வடகரையில் விநாயகரும், குளத்தின் நடுப்பகுதியில்

முருகப் பெருமானும், பாதுகாவலர்களாக உள்ளனர். வசிட்டர், வாமதேவர், ஜபாலி, காசியபர், பராசரர், வியாசர், விஸ்வாமித்திரர், அஷ்டாவக்கிரர் ஆகிய முனிவர்கள் இப்புஷ்கர்ணியின் எண்திசைகளிலும் காவலர் களாக உள்ளனர். இத்தீர்த்தத்தில் நீராடிய சந்திரனைப் பீடித்திருந்த 'குருதல்பம்' என்ற மகாபாவம் விலகியது, இங்கு நீராடி, வழிபடுவோரின் பாவங்களைக் களைவ தால் 'தர்சன புஷ்கர்ணி' என்ற பெயர் இத்தீர்த்தத்திற்கு ஏற்பட்டது. 'விஷ்ணுபதி கங்கை' என்ற இப்புனலின் மகிமையை ஸ்கந்த புராணத்திலுள்ள ஆடக க்ஷேத்திர (திருவாரூர்) மகாத்மியம் எடுத்து இயம்புகிறது. கண்ண மங்கைக்குத் தெற்கில் ஓடம் போக்கியாறும், வடக்கில் விருத்தகாவிரி என்று சிறப்பிக்கப்படும் வெட்டாறும் வளமூட்டுகின்றன.

அச்சுதவிஜயரகுநாத நாயக்கர் கலி சகாப்தம் 4709ல் (கி. பி. 1608) பெருமாளின் பூஜை நிவேதனங்களுக்காக 60 வேலி நன்செய் நிலம் அளித்ததாக இவ்வாலயத் திலுள்ள செப்புத்தகடு தெரிவிக்கிறது. கி. பி. 1621இல் கோயிலின் பகுதிகள் புதுப்பிக்கப்பட்டன. அதே ஆண்டில் மூலவரின் திருவுருவம் பிரதிஷ்டை செய்யப் பெற்றதாகத் திருவுண்ணாழி பிரகாரத்தில் பொறிக்கப்பட்டுள்ள கல் வெட்டு மூலம் அறியலாம்.

அக்கல்வெட்டிலுள்ள ஸ்லோகம் இதுவே
"ஸ்வஸ்திஶ்ரீ சகாப்தே 2548 உச்சஸ்தா ஷ்ன
ஸ்திதோர்க்க:

சசப்ருததிபரம் ப்ராம்ம ரிக்ஷம் ததாஸீத்
பக்ஷ: சுத்த: த்ருதீயா (ஸமஜ நிஜயதா)
சோபநே (உற்யேஷ போக;) (வார;) ஸௌம்யோப
பந்த: சுப (தமஜனனோ) துர்மதிர் வத்ஸரோ குத்
பக்த ப்ராண ப்ரதிஷ்டாம் (ஸம தனு தம ஹாந்
கோபி காலேத்ர பக்தை:

கோயிலின் பகுதிகள் புதுப்பிக்கப்பட்டு 1922இல் மகா குப்பாபிஷேகம் நிறைவேறியது 1938ஆம் ஆண்டில் இக்கோயிலில் தர்மகர்த்தாவாக விளங்கிய பாவா (பஞ்சாபகேச முதலியாரின்) முயற்சியால் மடைப்பள்ளி புதுப்பிக்கப்பட்டு, மின்சார விளக்குகள் அமைக்கப்பட்டன. கே. டி. ஆர். கோபால கிருஷ்ண ராஜாவின் (தர்மகர்த்தா) முயற்சியால் கொள்ளங்கோடு மகாராஜாவிடமிருந்து துவஜஸ்தம்பத்திற்கான உயர்ரக தேக்குமரம் வழங்கப் பட்டது. சப்பா மகாராணியின் உதவியால் கொடி மரத் திற்குச் செப்புத் தகடுகள் அனுப்பப்பட்டன. 1941ஆம் ஆண்டில் வடபாதி மங்கலம் ஜானகி அண்ணி திருவுண் ணாழி பிரகாரத்தைப் புதுப்பித்தார்.

திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப் பெற்ற தலங்களுள் திருக்கண்ணமங்கையும் ஒன்று. இப் பெருமான் பாடியுள்ள பதினைந்து பாடல்கள் ''கண்ண மங்கைக் கற்பகத்தின்'' பெருமையைப் போற்றுகின்றன ''பரந்துள்ள கடல்போல் அளவிட முடியாத நற்குணங் களின் இருப்பிடமாக உள்ளவன்: யோகியர்களுக்குத் தவப்பயனை அளிக்க வல்லவன்; பக்தர்களின் உயிர் நிலையானவன்; அரும்பு போன்ற இளமையும், பூப் போன்ற யௌவனமும் உடையவன்; பக்தியோகத்திற்கு வழிகாட்டி; பரமபதத்தை அளிக்கவல்லவன்; முக்காலத் திலும் அருளைச் சுரப்பவன்; ஒளிவிளக்காகத் திகழ் பவன்; தென்றல் போல் இனிமையை அளிப்பவன்; ஏழுலகங்களுக்கும் அதிபதியானவன்; காலத்தை நிர்ணயம் செய்பவன்; ஏழுலகங்களுக்கும் அதிபதி யானவன்; காலத்தை நிர்ணயம் செய்பவன்; பூமி போல் பொறுமையுடையவன்; கரும்பு, கற்கண்டு ஆகியன போல் இனிப்பவன்; முத்துக்குவியல் போலவும், முத்தின் திரளான மாலை போலவும் திகழ்பவன். இத்தகைய திருக்குணங்களையுடைய நாயகனின் திருவடிகளைத் துதித்து, நன்றியைத் தெரிவிப்பதே சிறந்தது. அவ்வாறு

எண்ணாதவர்களை நினையாது இருத்தலே நமக்கு உரிய செயல். நலமிக்க திருநாட்டில் தரிசிக்க வேண்டிய பரமபதநாதனை, புருடோத்தமனைத் திருக்கண்ணமங்கையில் கண்டதாக ஆழ்வார் இயம்புகிறார். "இங்ஙனம் ஆழ்வார் அருளிய திருமொழியை ஓதி உணர்பவர்கள் விண்ணுலகில் வானவர்களர்க்கும் பேற்றைப் பெறுவர்" என அவர் செப்புகிறார். இறுதியில் 'இத்திருமொழியில் விருப்பமிருந்தால் தனது சீடனாக இருந்து இதனைப் பயிலுமாறு வெண்சங்கமேந்திய கண்ணனை அழைக்கிறார். இப்பாடலுக்குப் பெரியவாச்சான்பிள்ளை எழுதிய உரையில் "இராமாவதாரத்தின்போது வசிஷ்டரின் சீடனாகவும், கிருஷ்ணாவதாரத்தில் சாந்தீபினியின் சீடனாகவும் பெருமை பெற்ற திருமாலுக்குக் கலியுகத்தில் பரகாலராகிய திருமங்கையாழ்வாரின் சீடனாக விளங்குவது பெருமை" என்று கூறுகிறார். இப்பாடல்களில் திருமாலின் பல திருஅவதாரச் செயல்கள் போற்றப் பட்டுள்ளன. திருவரங்கத்தமுதனார் இயற்றிய இராமானுஜ நூற்றந்தாதி, இராமலிங்க அடிகளின் திருவருட்பா, காளமேகப் புலவரின் தனிப்பாடல், பிள்ளைப் பெருமாள் அய்யங்காரின் அஷ்டப் பிரபந்தம் ஆகியவற்றில் திருகண்ணமங்கை போற்றப் பட்டுள்ளது. சிறுபிராயத்தில் தனது உயிரைக் காத்த அபிஷேகவல்லித் தாயார் மீது அந்தகக் கவி வீரராகவ முதலியார் பெரும் ஈடுபாடு கொண்டிருந்தார். அவர் பாடிய 'திருக்கண்ணமங்கை மாலை' என்ற பாடல் திரட்டு ஒரு அழகிய படைப்பு. குரவை இராமானுஜதாசர் அளித்த 'நூற்றெட்டுத் திருப்பதி திருப்புகழில்' இப்பதி சிறப்பிக்கப்பட்டுள்ளது. புதுக்கோட்டை ஏ. ஸ்ரீனிவாசராகவன் என்பவர் 'ஸ்ரீ பக்தவத்ஸலர் மகாத்மியம்' என்ற நூலை எழுதி, 1940ஆம் ஆண்டில் வெளியிட்டுள்ளார்.

அபிஷேகவல்லித் தாயாரின் சந்நிதி மண்டபச் சுவரிலுள்ள சாளரத்தில் ஒரு அதிசயமான தேன்கூடு உள்ளது.

இத்தலத்தில் திருக்கண்ண மங்கையானைத் திருமணக் கோலத்தில் எக்காலத்திலும் காண வானவர்களும் தவசிகளும் விரும்பினராம். இதற்கேற்ப அவர்களே வண்டுகள் உருவெடுத்து இத்தலத்தில் எழுந்தருளியுள்ளனராம். பல நூற்றாண்டுகளாக இவ்விடத்தில் வண்டினங்கள் வாழ்ந்து வருகின்றனவாம்.

**வழிபாடுகள் :-** இக்கோயிலில் நாள்தோறும் விஸ்வரூபம் (காலை 7 மணி) திருவனந்தல் (7 மணி), காலசந்தி (9 மணி), உச்சிக்காலம் (11.30), சாயரக்ஷை (7 மணி), இரண்டாம் காலம் (7.30), அர்த்தஜாமம் (8.30) ஆகிய ஆறு கால வழிபாடுகள் பஞ்சராத்திர ஆகம முறைப்படி நடைபெறுகின்றன. சாயரக்ஷைக்கு முன்னர் 'திருமாலை வடைத்தளிகை' என்ற இடைக்கால வழிபாடு உண்டு. தமிழ்ப் புத்தாண்டு, சித்திரை பிரம்மோத்சவம் ([illegible] நாள்), வைகாசி வஸந்தோற்சவம் (3 நாள்), ஆடி ஏகாதசி, ஆடிப்பூரம், ஆவணி ஸ்ரீஜெயந்தி உறியடி, புரட்டாசி பவித்ரோற்சவம் (3 நாள்), நிகமாந்த தேசிகன் உற்சவம் (10 நாட்கள்), நவராத்திரி உற்சவம், விஜயதசமி வேடுபரி, ஐப்பசி மணவாளமுனிகள் உற்சவம் (10 நாட்கள்), திருக்கார்த்திகை, மார்கழி பகல்பத்து, இராப்பத்து உற்சவங்கள், தைபோகி, பொங்கல், மட்டையடி உற்சவங்கள், பங்குனித் திருக்கலியாண உற்சவம் ஆகிய விழாக்கள் இக்கோயிலில் நடைபெறுகின்றன. இவை தவிர மாதந்தோறும் பஞ்சபர்வங்களில் சுவாமி புறப்பாடும், வெள்ளிக்கிழமைகளில் தாயார் புறப்பாடும் நடைபெறுவது உண்டு. பிரபல நாடகாசிரியர் கன்னையா நாயுடு உவந்தளித்த தங்கமுலாம் பூசிய கருடவாகனம் அழகிய வேலைப்பாடு மிக்கது ஆண்டுதோறும் நான்கு முறை இவ்வாகனத்தில் பெருமாள் வலம் வருவதுண்டு. சென்னை திரு. யதீந்திரப்ரவணம் செட்டியார் ஒரு தங்கப் படிச் சட்டமும், அதற்கேற்ற திருவாசியும் அளித்துள்ளார். புன்னைமர வாகனம், சேஷவாகனம், குதிரை வாகனம் ஆகியனவும் சிறப்பாக அமைந்துள்ளன. இக்கோயிலுக்கு

9 ஏக்கர் நன்செய் நிலமும், 80 ஏக்கர் புன்செய் நிலமும், தோப்புகளும், மனைக்கட்டுகளும் உள்ளன. தனி நபர்களின் சார்பில் சில கட்டளைகளும், உபயங்களும் நடைமுறையில் உள்ளன. 1940ஆம் ஆண்டு முதல் இந்து அறநிலையத்துறை இக்கோயிலின் நிர்வாகப் பொறுப்புகளை ஏற்று நடத்தி வருகிறது. 2-6-1967 அன்று கடைசியாகக் குடமுழுக்கு நடைபெற்றது.

தமிழ்வேதம் என்று போற்றப்படும் நாலாயிர திவ்விய பிரபந்தப் பாடல்களைத் தேடிக் கண்டுபிடித்து அவற்றை உலகில் பரவச் செய்த பெருமை நாதமுனிகளுக்கே உரியது. வைணவ ஆசாரியர்களிடையே முதலவராக விளங்கும் இப்பெருமான் "தமிழ்மறை இன்னிசை தந்த வள்ளல்" என்று போற்றப் பெறுகிறார். நாதமுனிகளின் சகோதரியின் புதல்வரான இலட்சுமிநாத தர்தாச்சாரியார் என்ற சான்றோர் திருக்கண்ணமங்கையில் அனைவரும் போற்றும் முதல்வராகவும், செல்வவளம் மிக்க தனவந்தராகவும் வாழ்ந்து வந்தார். அவருக்குத் 'திருக்கண்ணமங்கை ஆண்டான்' என்ற பெயர் வழங்கப்பட்டது. நாதமுனிகளைப் போலவே சமய அறிவும், வைணவத்தில் ஈடுபாடும் உடைய இச்சான்றோர் பக்தவத்சலப் பெருமானுக்குத் துளசிமாலைத் திருத்தொண்டு புரிந்துவந்தார். ஒருநாள் இரு வேடுவர்கள் தங்களது வேட்டை நாய்களுடன் இவ்வூர் வழியே செல்ல நேர்ந்தது. தங்களது காலணிகளைக் கோயிலுக்கு வெளியே வைத்துவிட்டு, அவற்றிற்குக் காவலாகத் தங்களது நாய்களை நிறுத்தி விட்டு இருவரும் கோயிலினுள் சென்றனர். இரு நாய்களும் திடீரென்று ஒன்றோடொன்று சண்டையிட்டுக் கொண்டன; அவற்றுள் ஒன்று இறந்தது. தரிசனம் முடிந்து வெளியே வந்த வேடுவர்களுக்குள் இது நிமித்தமாகச் சண்டை மூண்டது. முடிவில் எஞ்சிய நாயும், இரு வேடுவர்களும் வன்முறைக்கு உள்ளாகி உயிர் துறந்தனர். அவ்வழியே பல்லக்கில் வந்த திருக்கண்ணமங்கை ஆண்டான் இக்காட்சியைக் கண்டார் "தங்களுடைய உரிமையாளர்களுக்குரிய காலணிகளைக் காக்கும் பணியில் உண்மையாக ஈடுபட்ட நாய்கள் இரண்டும் உயிர்விட்டன. தங்களது நாய்களின் மேல் பரிவும், பாசமும் கொண்டு வேடுவர்கள் அவற்றின் பொருட்டுச் சச்சரவில் ஈடுபட்டுத் தங்களது உயிரைத் துறந்தனர். தன்னலம் நிறைந்த

மனிதர்கள், தங்களிடம் அன்பு பூண்ட நாய்களின் பொருட்டுத் தங்கள் உயிரைச் துச்சமாக மதித்துப் போரிட்டு மடிகிறார்கள். தன்னலமற்ற இறைவன் தன்மீது அன்பு செலுத்தும் அடியார்களைக் காப்பாற்ற எப்படியெல்லாம் அருள் புரிவாரோ'' என்ற சிந்தனை அவரது மனதில் எழுந்தது. தனது செல்வங்களையும், பதவியையும் துறந்து திருக்கண்ணமங்கையானைச் சரணடைந்தார். அவர் ஆலயத்தையே தனது இருப்பிடமாகக் கொண்டார். நாய்களின் செயலால் தனது மனதில் ஏற்பட்ட மாறுதலுக்கு நன்றியறிதலாக நாய் போலவே தவழ்ந்துசென்று நீராடியபின் இறைவனுக்குச் சேவை செய்வார். ஒருநாள் ஆலயத்திற்கு இச்சான்றோர் சென்றிருந்த போது மறுநாள் அவருக்கு முக்தியளிப்பதாகப் பெருமாள் அருளினார். ஊராருக்கும் இச்செய்தியை அறிவித்தார். மறுநாள் நீராடியபின் சந்நிதியில் சென்று நிஷ்டையிலமர்ந்தார். வெகுநேரம் கழித்து ஒரு சில வார்த்தைகளை உச்சரித்தார். கண்ணைப் பறிக்கும் ஒளி வீசியது. திருக்கண்ணமங்கையாண்டான் ஆண்டவனுடன் ஒன்றரக் கலந்ததை அங்கு குழுமியிருந்த பக்தர் கூட்டம் அறிந்தனர்.

''இறையருள் பெற விரும்புவோர் நமது சொந்த முயற்சியைக் கைவிட்டு இறைவனே நம்மைக் காப்பாற்றுவான் என்று முழுமையாகத் தஞ்சமடைய வேண்டும். உதாரணமாகச் சீதை, திரௌபதி, திருக்கண்ணமங்கையாண்டான் ஆகியோரைக் கூறலாம். சீதை தனது ஆற்றலையும், திரௌபதி நாணத்தையும் விடுத்துத் தஞ்சமடைந்தது போலத் திருக்கண்ணமங்கையாண்டான் தனது முயற்சியைக் கைவிட்டார்.'' இவ்வாறு பிள்ளைலோகாச்சாரியார் கூறுகிறார். ''பாரதப் போருக்கு முன்னர், என் திருவடிகளைப் பற்றினால் உனக்குப் பாவங்களிலிருந்து விடுதலை அளிக்கிறேன்' என்று கீதாச்சாரியான் அருச்சுனனுக்கு அருளினார். இதே கருத்தைத் திருக்கண்ணமங்கையாண்டான் மூலம் உலகினர்க்கு வலியுறுத்தினார்'' என்று பட்டர்பிரான் கருதினார். இத்தகைய பெருமையுடைய திருக்கண்ணமங்கையாண்டானின் திருவுருவம் ஆலயத்தில் இடம் பெற்றுள்ளது.

# 11. திருமழிசை

(செங்கை-அண்ணா மாவட்டம்)

# ஜெகந்நாதப் பெருமாள், திருமழிசையாழ்வார் திருக்கோயில்

இன்றைய செங்கல்பட்டு மாவட்டம், வட ஆற்காடு தென் ஆற்காடு, ஆந்திரப் பிரதேசம் ஆகியவற்றின் சில பகுதிகள் இவற்றை உள்ளடக்கிய பகுதியே பண்டைய காலத்தில் தொண்டைநாடு என்று வழங்கப்பட்டது. இதன் வடவெல்லை திரு வேங்கடமலை; தென் எல்லை பினாகை எனப்படும் சேயாறு: கிழக்கு எல்லை ஒலிக்கும் கடல்; மேற்கு எல்லை மேற்குத் தொடர்ச்சி மலை. இதற்குட்பட்ட நாட்டின் எல்லை நான்கு காத தூரம். "தொண்டைநாடு நன்னாடுடைத்து;" "வையம் பெறினும் பொய் சொல்லமாட்டார் தொண்டை நாட்டினர்," என்ற பழமொழிகள் இந்நாட்டுச் சான்றோரின் சிறப்பை உணர்த்துகின்றன. இந்நாட்டில் ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பெற்ற திருப்பதிகள் இருப்பத்திரண்டு உள்ளன. இந்தக் கணக்கில் சேராத திருத்தலங்களுள் திருமழிசையும் ஒன்று. இது திருமழிசை

யாழ்வார் பிறந்த தலமாக உள்ள போதிலும், இதன் மீது ஆழ்வார்கள் பாடிய பாடல்கள் எதுவும் கிடைக்கவில்லை. சென்னையிலிருந்து 25 கி. மீ. தொலைவில், பெங்களூர் செல்லும் நெடுஞ்சாலையின் புறத்தே இத்தலம் உள்ளது. இவ்வூர் வழியே நிரம்பப் பேருந்துகள் செல்கின்றன.

இக்கோயில் 58 மீட்டர் நீளமும், 54 மீட்டர் அகலமும் கொண்ட 2934 சதுர மீட்டர் பரப்பில் கிழக்கு நோக்கிய வாறு அமைந்துள்ளது. முகப்பில் ஒன்பது நிலை கோபுரம், ஐந்து கலசங்களுடன் ஓங்கி உயர்ந்துள்ளது. அண்மையில் திருப்பணி நிறைவேறியுள்ளதால், பல தெய்வீகச் சுதையுருவங்களுடன் வண்ணமயமாகக் கோபுரம் காட்சியளிக்கிறது 11 மீட்டர் நீளமும், 4 மீட்டர் அகலமும் கொண்ட பரப்பில் இக்கோபுரம் அமைந் துள்ளது. கொடி மரம், பலி பீடம் ஆகியவற்றைக் கடந்து பிரகாரத்தை வலம் வந்தவாறு மூலவரின் கருவறையை அடையலாம். முதலில், பிரம்புத் தட்டில் யோகத்தில் அமர்ந்துள்ளவரைப் போலத் தோற்றமளிக்கும் திருமழிசை யாழ்வாரைக் காணலாம். அவரது வலக்காலை உற்று நோக்கினால் கால் பெருவிரலில் மூன்றாவது கண் இடம் பெற்றுள்ளதைக் காணலாம்.

அருகே மூலவரான ஜெகந்நாதப் பெருமாள், ருக்மணி, சத்தியபாமை சமேதராக, வீற்றிருந்த கோலத்தில் கிழக்கு நோக்கியவராகச் சேவை சாதிக்கிறார். அருகே மார்க்கண்டேயரும், பிருகுமுனிவரும் தொழுது நிற்கின்றனர். ஒரு காலைக் கீழே தொங்கவிட்டவாறு, எழிலாகத் தோற்றம் கொண்டுள்ளார். தனது அன்பர்களை மனவிருப்புடன் அழைத்து, அருள் வழங்கும் தன்மையையுணர்த்தவே அவரது வலது கீழ்க்கரம் வளைந்து காட்டுகிறது. இதனையே 'ஆஹவான ஹஸ்தம்' என்று குறிப்பிடுவர். உற்சவர்களாக ஜெகந்நாதர்,

ஸ்ரீதேவி, பூதேவி, திருமழிசையாழ்வார், உடையவர் ஆகியோர்களும் காட்சியளிக்கின்றனர்.

இக்கோயிலின் தென்மேற்குப் பகுதியில், முன் மண்டபம். உள் மண்டபம் ஆகியவற்றுடன் கூடிய தாயாரின் சந்நிதி இடம் பெற்றுள்ளது. இங்கு திரு மங்கைவல்லித் தாயார் திருவருளை நல்குகிறாள். வடக்குப் பிரகாரத்தில் அழகிய சிங்கர், ஆண்டாள், மணவாள மாமுனிகள் ஆகியோருக்கான தனி சந்நிதிகளும், பரமபத வாயிலும் அமைந்துள்ளன. கோயிலின் உட்பகுதியில் கிழக்கு நோக்கியவாறு கண்ணனின் சந்நிதி உள்ளது. மூலவரின் சந்நிதிக்கு எதிரே கருடாழ்வார் மேற்கு நோக்கியவாறு தோற்றமளிக்கிறார். ஆலயத்திற்கு வெளியே ஆஞ்சநேயரின் சந்நிதியைக் காணலாம். கோயி லுக்கு வெளியேயுள்ள நான்கு கால் மண்டபத்தின் தூண் ஒன்றில் நரசிம்மரின் சிற்பம் உள்ளது. தாயார் சந்நிதி மண்டபத் தூணில் சிங்கமுகங்களைக் காணலாம் தெற்குப் பிரகாரத்தின் வெளிச்சுவரில் விநாயகரின் திருவுருவம் சிறப்பாக வடிக்கப்பட்டுள்ளது. வைணவ ஆலயத்தில் கணபதியின் திருவுருவம் இடம் பெற்றிருப்பது அபூர்வ மான காட்சியாகும் திருவரங்கம் அரங்கநாதர் திருக் கோயில், திருமுஷ்ணம் ஜெகந்நாதப் பெருமாள் ஆலயம், ஆதனூர் ஆண்டளக்கும் ஐயன் திருக்கோயில் போன்ற சில வைணவக் கோயில்களில் மட்டும் இங்ஙனம் விநாயகர் இடம் பெற்றுள்ளார், ஆண்டாள் சந்நிதி மண்டபத் தூண் களில் இராமர், கருடன், ஆகிய சிற்பங்கள் பொறிக்கப் பட்டுள்ளன. ஜெகந்நாதர் சந்நிதி முன்மண்டபத் தூண் களில் நரசிம்மர், இராமானுஜர், திருமால், ஆஞ்சநேயர், காளியமர்த்தனர், கூர்மாவதாரம், மச்சாவதாரம் ஆகிய சிறு சிற்பங்களைப் படைத்துள்ளனர்.

அண்மையில் புதுப்பிக்கப்பட்டபோது கோயிலின் உட் பகுதிகளில் பல வண்ண ஓவியங்கள் தீட்டப்பட்டன. மணவாள முனிகளின் சந்நிதி மண்டபத்தின் மேற்புறச்

சுவரில் ஜெகந்நாதப் பெருமாள், திருமழிசை ஆழ்வார், மணவாள மாமுனிவர் ஆகியோரின் வண்ணமிகு உருவங்களை வரைந்துள்ளனர். மூலவர் சந்நிதி மண்டபங்களில் திருமழிசை ஆழ்வார், ஜெகந்நாதப் பெருமாள், ஆண்டாள், அழகிய சிங்கர், திருமங்கைவல்லித் தாயார் ஆகியோரை ஓவிய வடிவில் தரிசிக்கலாம்.

பிருகு, மார்க்கண்டேயர் ஆகிய இருவரும் உலகிற்கு நாயகனான திருமாலைத் தரிசனம் செய்யும் எண்ணத்துடன் பன்னிரண்டு ஆண்டுகள் தவம் புரிவதாக விரதம் மேற்கொண்டனர். விதிவசத்தால் அவர்களது தவம் ஆறு ஆண்டுகளே நீடித்தது. இதற்குப் பலனாகப் பூரிஎனற தலத்தில் பாதியளவு திருமேனியுடன் ஜெகந்நாதனாகத் திருமால் காட்சியளித்தார்; இதனையே அர்த்த சேவை என்று குறிப்பிடுவா. பரந்தாமனின் முழுமையான திவ்விய சேவையை அடைய அம்முனிவர்கள் விரும்பினர். மிகவும் புனிதம் மிகுந்த நான்முகனின் துலாக்கோல் நிறுவை செய்து காட்டும் ஒப்பற்ற திருத்தலத்தில் தவமியற்றுமாறு திருமால் அருளினார்.

பிருகு, அத்திரி, வசிஷ்டர், பார்க்கவர் போன்ற முனிவர்கள் நான்முகனை நாடி உலகிலே சிறந்த விஷ்ணு க்ஷேத்திரத்திற்கு வழிகாட்டுமாறு வேண்டினர். நான்முகனும் தேவசிற்பியை வரவழைத்து ஒரு துலாக்கோலை எடுத்து வரச் செய்தார். ஒரு தட்டில் திருமழிசையையும், மற்றொரு தட்டில் பிற வைணவப் பதிகளையும் நிறுத்தச் செய்தார். திருமழிசை இருந்த தட்டு அதிக கனத்தால் கீழே தாழ்ந்தது. இவ்வாறு பிரம்மன் துலாக்கோலால் புனிதத் தன்மையை நிறுவிய சம்பவத்தை

''உலகு மழிசைய முள்ளுணர்ந்து தம்மில்
புலவர் புகழ்க்கோலால் தூக்க — உலகு தன்னை
வைத்தெடுத்த பக்கத்தும் மாநீர் மழிசையே
வைத்தெடுத்த பக்கம் வலிது''

என்று திருக்கச்சி நம்பிகள் போற்றுகிறார். இச் சம்பவத்திற்கேற்பப் 'புலவர்' என்ற பெயருடன் நான்முகன் துலாக்கோலை ஏந்தியவாறு சிற்ப வடிவில் இக்கோயிலில் காட்சியளிக்கிறார். இவ்வாறு நான்முக னால் சுட்டப்பட்ட தலத்தில் தவமியற்றுமாறு பிருகு, மார்க்கண்டேயர் ஆகியோருக்குத் திருமால் கட்டளை பிறப்பித்தார். தன்னை நாடித் தவமியற்றிய முனிவர்கள் முன்னர் திருமால் ஜெகந்நாதப் பெருமாளாக மூ உருவத்துடன் காட்சியளித்தார். இதனால் இப்பதி மத்திய ஜெகந்நாதத்தலமாகக் கூறப்படுகிறது. வட நாட்டிலுள்ள பூரியே உத்தர ஜகந்நாதத் தலம்; தென் பகுதியில் இராமேஸ்வரத்திற்கு அண்மையிலுள்ள திருப் புல்லாணி தட்சிண ஜெகந்நாத ஸ்தலம். இவ்விரண்டிற்கும் இடையிலுள்ள திருமழிசை மத்திய ஜெகந்நாத ஸ்தல மாகும். இம்மூன்று திருத்தலங்களிலும் மகாவிஷ்ணு ஜெகந்நாதன் என்ற திருநாமத்துடன் சேவை சாதிக் கிறார். மகிமை, சாரம், க்ஷேத்திரம் என்ற மூன்று சிறப் பியல்புகளும் இங்கு நிலைத்திருப்பதால் இத்தலத்தை மகிசார க்ஷேத்திரம் என்று பெருமைப்படுத்துவர்.

பன்னிரு ஆழ்வார்களுள் திருமழிசை ஆழ்வாரின் அவதார ஸ்தலமாக இப்பதி விளங்குகிறது. அப்பெரு மானின் வாழ்க்கை வரலாறு பக்திச்சுவை நிரம்பியது. திருமழிசைத் தலத்தின் பெருமையை உணர்ந்த பார்க்கவ முனிவர் இங்கு கடுந்தவமியற்றி வந்தார். அவரது தவத்தின் வெம்மையைத் தாங்கமுடியாத இந்திரன் முனிவரின் தவத்தைக் கலைக்குமாறு கனகாங்கி என்ற தேவமாதை அனுப்பினான். கனகாங்கியின் சாகசத்தில் பார்க்கவர் சிறிது மயங்கினார். இதன் விளைவாக உருவ மற்ற ஒரு பிண்டத்தைக் கனகாங்கி ஈன்றாள். பெற்றோ ருக்கே தனது உருவத்தைக் காட்டாமல் மறைபொருளாக விளங்கிய அப்பிண்டத்தை ஒரு பிரம்புப்புதரில் விட்டு விட்டனர்.

அவ்விடத்தில் பிண்டத்திலிருந்து ஒரு அழகிய குழந்தை வெளிப்பட்டுப் பசியால் அழுதது. திருமாலும், திருமகளும் அங்கு தோன்றி ஒரு தேன் கூட்டை ஏற்படுத்தி அக்குழந்தைக்கு உணவை அளித்தனர். கானகத்தில் தனியே கிடந்த குழந்தையைத் திருவாளன் என்ற வறியவன் கண்டெடுத்தான். பிரம்புகளை அறுத்துக் கூடைகள் செய்து வாழ்க்கை நடத்தும் அவ்வறியவன் நான்காம் வருணத்தைச் சார்ந்தவன். குழந்தையில்லாத குறையை நீக்கத் தெய்வமே அளித்த வரப்பிரசாதமாக எண்ணி அக்குழந்தையை அவனே வளர்க்கலானான்.

ஒரு மகரிஷியின் வாரிசாகத் தோன்றிக், கீழ் சாதியைச் சார்ந்த ஒருவனால் வளர்க்கப்பட்ட அக்குழந்தை சிறு வயது முதல் பால், நீர் ஆகிய எதையும் பருக மறுத்தது. ஆயினும் அதன் வளர்ச்சியும், பிற செயல்களும் சாதாரணமாகவே இருந்தன. அக்குழந்தையைத் திருமழிசைப் பிரான் என்றே அனைவரும் அழைத்தனர். இத்தெய்வீகக் குழந்தை பற்றிய செய்தியை அறிந்த ஒரு முதியவர் திருவாளனின் குடிலை நாடி வந்தார். அக்கால வருணாச்சிரம முறைப்படிக் கடைவருணத்தைச் சேர்ந்தவராக இருந்த போதிலும், அவர் ஒரு சிறந்த ஞானியாவார். நன்கு காய்ச்சிய பாலை அப்பெரியவர் கொண்டு வந்தார். இதுவரை பால் பருகாத அக்குழந்தை அம்முதியவர் அளித்த பாலில் பெரும் பகுதியைப் பருகியது. எஞ்சிய பாலை அவ்வயோதிகரும் அவரது மனைவியும் பருகினர். அப்போது இறையருளால் ஒரு அற்புதம் நிகழ்ந்தது. வயோதிகத் தம்பதியினர் இளமைப் பருவத்தினராக மாறினர். காலப்போக்கில் இத்தம்பதியினருக்குக் கணிகண்ணன் என்ற புதல்வன் பிறந்தான். பிற்காலத்தில் இக்கணிகண்ணனே திருமழிசையாழ்வாரின் சீடனானான்.

உரிய பருவத்தில் உண்மை ஞானத்தைப் பெறும் நோக்கத்துடன் ''திருமழிசைப் பிரான்' பிற சமயங்களைக்

கற்று, ஒரு ஞானகுருவை நாடியவாறு திரிந்து வந்தார். மயிலையில் ஆதிகேசவப் பெருமாளுக்குப் பணிவிடைகள் செய்துவந்த பேயாழ்வார் இவரை ஆட்கொள்ள முடிவு செய்தார். ஒரு செடியைத் தலைகீழாக நட்டு நீர் வார்த்தார். இதனைக் கண்டு வியந்த திருமழிசைப்பிரான் இச் செயலை எள்ளி நகையாடினார். "பிற சமயங்களின் மூலம் உண்மை ஞானத்தைப் பெற உம்மால் முடிந்தால் என்னால் இச்செடிக்கு உயிர் கொடுக்கவும் முடியும்" என்று பேயாழ்வார் பதிலளித்தார். அன்று முதல் பேயாழ்வாரின் சீடராக மாறிய திருமழிசைப் பிரான், வைணவத்தில் பெருத்த ஈடுபாடு கொண்டு ஒழுகலானார்.

"சாக்கியம் கற்றோம் சமணம் கற்றோம்
அச்சங்கரனார்
ஆக்கிய ஆகமநூல் ஆராய்ந்தோம் — பாக்கியத்தால்
செங்கட் கரியானைச் சேர்ந்து யாம் தீதிவோம்
எங்கட்கு அரிய தொன்று மில"

என்று இச்சம்பவத்தைத் திருமழிசையாழ்வாரே கூறுகிறார். இதன்பின் பல பாடல்களை அவர் புனையலானார்.

திருவல்லிக்கேணியில் ஆழ்ந்த தியானத்தில் ஈடுபட்டிருந்த திருமழிசைப் பிரானுக்கு அருள்புரியுமாறு பார்வதி தேவி பரமசிவனிடம் வேண்டினார். அரனாரும் திருமழிசைப் பிரான் முன் தோன்றி அவர் விரும்பும் வரத்தை யளிப்பதாகக் கூறினார். ஆழ்வார் அரனாரைச் சட்டையே செய்யவில்லை. அவரைச் சோதிக்க எண்ணிய சிவபிரான் வெகுண்டவர் போலத் தனது நெற்றிக் கண்ணிலிருந்து அனலை வெளிப்படுத்தினார். திருமழிசைப் பிரானும் தவவலிமையால் தனது கால் பெருவிரலிலிருந்து நெருப்பை வெளிப்படுத்தினார். இருவர் செலுத்திய நெருப்பின் கொடுமையைக் குறைக்க மகாவிஷ்ணு

புட்கலாவர்த்தம் என்ற மேகத்தையனுப்பி மழை பொழியச் செய்தார். கடும் மழையால் அவ்விடம் வெள்ளக்காடாக மாறிய போதும், திருமழிசைப்பிரான் தனது தியானத்திலிருந்து தளரவில்லை. அவரது மனவுறுதியை மெச்சிய சிவபெருமான் 'பக்திசாரர்' என்ற பட்டத்தைத் திருமழிசையாருக்கு அளித்தார். பின்னர் சுத்திகாரன் என்ற சித்தனையும், கொங்கணச் சித்தர் என்ற இரசவாதியையும் தனது யோக சக்தியால் வென்று அவர்களது அறியாமையைத் திருமழிசைப்பிரான் போக்கினார். ஒரு குகையிலமர்ந்தவாறு தியானத்திலிருந்த திருமழிசைப் பிரானை "முதலாழ்வார்கள்" என்று போற்றப்படும் பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய மூவரும் சந்தித்தனர். சில திருத்தலங்களுக்குச் சென்ற பின் திருமழிசைப் பிரான் தனது பிறந்த ஊரான திருமழிசைக்குச் சென்றார். திருமழிசையில் தனது மேனியில் திருமண் சாற்றிக் கொள்வதற்கு உரிய மண் கிடைக்காமல் பிரான் வருந்தினார். அன்று இரவு ஏழுமலையான் அவர் கனவில் தோன்றி மண் உள்ள இடத்தைக் காட்டினார்.

திருமழிசைப் பிரான் சில காலம் காஞ்சியிலுள்ள திருவெஃகா என்ற பகுதியில் தங்கினார். கணிகண்ணன் அவருக்குச் சீடனாயிருந்து தொண்டு புரிந்து வந்தார். இவ்விருவருக்கும் பணிவிடைகள் பல புரிந்து வந்த மாதரசி ஒருத்தியை அவள் விரும்பியவாறு இளமைப் பிராயத்தினராக இறையருளால் திருமழிசையாழ்வார் மாற்றினார். இச்சம்பவத்தையறிந்த பல்லவ மன்னன் தானும் இளமையை அடைய விரும்பினான். "மூதாட்டியின் தன்னலமற்ற சேவைக்குப் பரிசாகவே அவளுக்கு இளமையை எனது குருநாதர் வழங்கினார். உன் போன்று உலகியலில் உழலுவோருக்கு அத்தகைய பேறு கிடைக்காது" என்று கணிகண்ணன் விடையளித்தார். உடனே காஞ்சியை விட்டு வெளியேறுமாறு அரசன் உத்தரவிட்டான். தனது சீடனைத் தொடர்த்து வெளி

யேறிய திருமழிசைப் பிரான் காஞ்சியை விட்டு நீக்குமாறு பள்ளி கொண்ட பெருமாளிடம் விண்ணப்பம் செய்தார்.

''கணிகண்ணன் போகிறான், காமருபூங்கச்சி
மணிவண்ணா நீ கிடக்க வேண்டாம் துணிவுடைய
செந்நாப் புலவனும் போகின்றேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய் சுருட்டிக் கொள்.''

உடனே கோயிலில் பள்ளிகொண்டிருந்த பெருமாளும் ஆலயத்தை விட்டகன்றார். இதனால் நாட்டில் சுபிட்சம் குன்றியது. தவறையுணர்ந்த அரசனும் கணிகண்ணனிடம் தஞ்சமடைந்தான்; காஞ்சிக்குத் திரும்புமாறு வேண்டிக் கொண்டான். திருமழிசைப்பிரானும் திருமாலை நோக்கி மறுபாடல் பாடினார்.

''கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங் கச்சி
மணிவண்ணா நீ கிடக்க வேண்டும்—துணிவுடைய
செந்நாப் புலவனும் போக்கொழிந்தேன்
நீயும் உந்தன் பைந்நாகப் பாய்ப் படுத்துக்கொள்''

இப்பாடலைக் கேட்ட பெருமாளும் தனது கோயிலுக்குத் திரும்பினார். இவ்வாறு ஆழ்வார் வேண்டியவாறே நடந்து கொண்டதால் அப்பெருமாளுக்குச் ''சொன்ன வண்ணம் செய்த பெருமாள்'' (யதோத்தகாரி) என்ற பெயர் ஏற்பட்டது.

காஞ்சியிலிருந்து திருக்குடந்தை நோக்கிச் செல்லும் போது திருமழிசைப் பிரான் பெரும்புலியூர் என்ற ஊரில் ஒரு அந்தணரது வீட்டுத் திண்ணையில் தங்கினார். கடை வருணத்தைச் சேர்ந்த அடியார்முன் வேதம் ஓத விரும்பாத மறையவர்கள் மறை ஓதுவதைப் பாதியிலேயே நிறுத்தினர். பின் நிறுத்திய இடம் எது என்று தெரியாமல் திகைத்தனர். திருமழிசைப் பிரான் குறிப்பால் அவர்கள் நிறுத்திய இடத்தைச் சுட்டினார். தவறையுணர்ந்த வேதியர்கள் அடியாரை வணங்கி ஞான உபதேசம் பெற்றனர்.

திருப்பெரும்புலியூரில் வீதியில் திருமழிசைப் பிரான் சென்று கொண்டிருந்தார் அவர் சென்ற திசையிலெல்லாம் அங்கு கோயில் கொண்டிருந்த திருமாலின் விக்கிரகத்தின் முகம் திரும்பியது. அங்கு நடைபெறவிருந்த வேள்விக்கு யாகத் தலைவராக இருந்த பெரும்புலியூர் அடிகள் திருமழிசைப் பிரானின் பெருமையை உணர்ந்து அவரை யாகசாலைக்கு அழைத்து வந்து முக்கிய இருக்கையை அளித்தார். இச்செயலைப் பல வேதியர்கள் பழித்தனர். திருமழிசையார் வேண்டியவாறு அவரது திருவுடலின் மீது திருமால் பள்ளி கொண்ட காட்சியை அனைவரும் காணுமாறு காட்டினார். இதனைக் கண்ட வேதியர் அனைவரும் தங்களது செயலுக்காக வெட்கினர். அடியாரைப் போற்றித் துதித்தனர். குடந்தையில் திருமழிசையார் பள்ளி கொண்ட பெருமாளைத் தரிசித்தார். தரிசனத்திற்காக வந்த தனக்கு அருள் புரியாத அப்பெருமாளை வஞ்சிப் புகழ்ச்சியாகப் பாடினார். உடனே பள்ளி கொண்ட மூர்த்தியும் அவருக்கு அருள் புரிந்தார். அப்பதியிலேயே பல காலம் தவமியற்றிய பின் திருமழிசையாழ்வார் பரமனடி சேர்ந்தார்.

திருமழிசையாழ்வார் தாம் பாடிய பாடல்கள் அனைத்தையும் காவிரியின் நீரில் விடுத்தார் அவற்றுள் திருச்சந்த விருத்தம் (120 பாசுரங்கள்), நான்முகன் திருவந்தாதி (90 பாசுரங்கள்), ஆகிய இரண்டு மட்டும் நீரோட்டத்தை எதிர்த்து வந்து ஆழ்வாரிடம் சேர்ந்தன அவர் பாடிய பாடல்களுள் இன்று எஞ்சியிருப்பவை இவை மட்டுமே.

திருமழிசை ஆலயத்திற்கு முன்புள்ள திருக்குளம் ''பிருகு புஷ்கர்ணி'' என்ற புனிதப் புனலாகும். இதன் அருகே 'பக்திசாரர் சத்திரம்' என்ற மண்டபம் உள்ளது. முற்காலத்தில் இத்தலத்தில் ரங்கசுவாமி ஆலயம், கஜேந்திர வரதர் திருக்கோயில், செல்வர் ஆலயம், ஜெகந்நாதர் ஆலயம், வீற்றிருந்த பெருமாள் திருக்

கோயில் ஆகியன இருந்தன. இதனால் இதற்குப் பஞ்ச தல க்ஷேத்திரம் என்ற பெயரும் இருந்தது. இன்று முதலில் குறிப்பிடப்பட்ட கோயில்களுக்குரிய திருக்குளங்கள்- ரங்கசாமி குளம், ஆனைகாத்தான் குளம், செல்வர் குளம் ஆகிய மூன்று மட்டும் உள்ளன. காலப்போக்கில் அக்கோயில்கள் அழிந்துவிட்டிருக்கலாம்.

ஜெகந்நாதப் பெருமாள் ஆலயத்தில் நாள்தோறும் நான்கு கால வழிபாடுகள் நடைபெறுகின்றன. ஆனி மாதத்தில் பிரம்மோற்சவமும், தெப்பத்திருவிழாவும் விமரிசையாகக் கொண்டாடப்படுகின்றன. திருமழிசை ஆழ்வார் உற்சவம், மணவாள முனிகள் திருவிழா, இராம நவமி, ஆடிப்பூரம், நவராத்திரி, வைகுண்ட ஏகாதசி ஆகிய விழாக்களும் சிறப்பாக நடைபெறுகின்றன. இக்கோயில் தமிழக அரசின் இந்து அறநிலைய ஆட்சித்துறையின் மேற்பார்வையில் செயல்பட்டு வருகிறது. இக்கோயிலுக்குச் சொந்தமாக 115.99 ஏக்கர் சாகுபடி நிலம், 7.79 ஏக்கர் தரிசு நிலம், ஒரு கிணறு, இரண்டு குட்டைகள், 130 மனைகள், ஒரு கட்டிடம் (சென்னையில்) ஆகியன உள்ளன. ஆண்டுக்கு ஒரு இலட்ச ரூபாய்க்கு மேல் வருமானம் வருகிறது. இங்கு தேர், பல்லக்கு முதலிய ஆறு வாகனங்கள் உள்ளன. இக்கோயிலை முழுமையாகப் புதுப்பிக்கும் பணி 27-3-1985 அன்று துவங்கியது.

**கல்வெட்டுக்கள்:-** இவ்வாலயத்தில் கி.பி. 12 முதல் 15 ஆம் நூற்றாண்டு வரை பொறிக்கப்பட்ட பதினான்கு கல்வெட்டுக்கள் படியெடுக்கப்பட்டுள்ளன. மூன்றாம் குலோத்துங்க சோழன் (1178-1218), கோப்பெருங்சிங்கன் (1[illegible]4[illegible]-6[illegible]), விசயகண்ட கோபாலன் (12[illegible]0-1280), விசய நகர அரசர்கள் இரண்டாம் ஹரிகரர் என்ற அரியண்ண உடையார் (1376-1404), விருபாட்சர் (1465-14[illegible]5) ஆகியோரின் காலத்தில் அவை தோன்றின. மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் மேல்மாங்காடு நாடடுப்புக்க

துறை வல்ல சதுர்வேதி மங்கலம்' என இவ்வூர் வழங்கப் பட்டது. அக்காலத்தில் பஞ்சநதிவாணன் நீலங்கரையன் என்பவர் 16[illegible]0 குழி நிலத்தைத் தானமாக அளித்தான். கோப்பெருஞ்சிங்கனின் 19ஆம் ஆட்சியாண்டில் நான்கு வீடுகள் ஆலயத்திற்குத் தானமாக வழங்கப்பட்டன.

சோழப்பேரரசு வலிமையிழந்தபோது தெலுங்குச் சோழனான விஜயகண்ட கோபாலன் தொண்டை நாட்டை அரசாண்டான். அவனது பிரதிநிதியான 'பஞ்சநதி வாணன் அருணகிரிப் பெருமாள் நீலங்கரையன்' என்பான் இக்கோயிலுக்குப் பல கொடைகளை வழங்கியுள்ளான். கி.பி. 1250 ஆம் ஆண்டில் சில நிலங்களிலிருந்து கிடைத்த வரி இக்கோயிலுக்கு வழங்கப்பட்டது. நிலம் வழங்கப் பட்டவுடன் அவற்றை ஏற்குமாறு கோயில் தானத் தாருக்கு ஆணை பிறப்பிக்கப்பட்டது. ஜெகந்நாதப் பெருமாள் கோயிலுக்கும், [illegible] இடம் பெற்றிருந்த நீர்வண்ணப் பெருமாள் ஆலயத்திற்கும் 'வளத்து வாழ் வித்த நல்லூரிலுள்ள சில நிலங்கள் வழங்கப்பட்டன. கி.பி. 12[illegible]5ஆம் ஆண்டில் இக்கோயிலில் மூன்று விளக்கு கள் எரிக்க வசதி செய்யப்பட்டது கி.பி. 1273ஆம் ஆண்டில் அரையப்பாக்கிழான் சேரியிலிருந்து பெற்ற பொன்வரியைத் திருமழிசையாழ்வார் கோயிலுக்கு வழங்கினர். இலங்கேசுவரதேவன் என்பான் நிலதானம் அளித்தான். விஜயகண்ட கோபாலன் காலத்தில் இப் பகுதி பஞ்சநதிவாணன் சதுர்வேதி மங்கலம் என்றும், கோயில் உள்ள பகுதி 'திருமழிசை அகரம்' எனவும், இக்கோயில் திருமழிசை எம்பெருமான் கோயில் என்றும் வழங்கப்பட்டன.

அரியண்ண உடையார் காலத்தில் நில விற்பனை நடைபெற்றது. இவ்வூரிலிருந்த பொன் பரப்பினான் திருவீதியிலுள்ள இரு வீடுகள் தானமாக அளிக்கப்பட்டன. இக்காலத்தில் 'திருமழிசை விண்ணகர்' என்று இக்கோயில் வழங்கப்பட்டது. இவ்வூரில் 'பாலாற்று வென்றான் திருவீதி' என்ற திருவீதி இருந்தது. இரண்டாம் விருபாட்சர் காலத்திலும் நிலதானம் அளிக்கப்பட்டது. இவ்வாறு இக்கோயில் வரலாற்றுச் சிறப்பு பெற்றிருந்த தாகவும கல்வெட்டுக்கள் மூலம் அறியலாம்.

# 12. தேவதானம்

(காமராஜர் மாவட்டம்)

## நச்சாடைத் தவிர்த்தருளிய நாயனார் கோயில்

நிலம் தீ நீர்வளி விசும்பொடு ஐந்தும்
கலந்த மயக்கம் உலகம் (தொல்காப்பியர்)

நீர், நிலம், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகிய ஐந்து பூதங்களும் கலந்ததும் மயங்கியதுமே, இவ்வுலகமாகும். இப்பூதங்கள் அனைத்தும் தனியே தெரிகின்றன. நிலத்தில் நீர் தேங்குகிறது. தீ பூமி மீது கொழுந்துவிட்டு எரிகிறது. நிலத்தின் மீது காற்று வீசுகிறது. இருப்பினும் இவை ஒன்றாக ஐக்கியமாவதில்லை. ஒரு மாலையில் முத்து, பவளம், பவழம் போன்றவை சேர்வது போலவே இருப்பதால் இதுவே கலப்பு எனப்படும். செம்பு, தங்கம் இரண்டும் உருக்கிச் சேர்ப்பதை மயக்கம் என்பர். நம் கண் முன்னர் கலந்தனவாகத் தெரியும் பஞ்ச பூதங்கள் நம் உடலில் மயங்கிய நிலையிலுள்ளன. உலகில் எல்லாப் பொருட்களிலும் இந்த 5 பூதங்களின் கலப்பு அல்லது மயக்கம் உண்டு. இத்தகைய சிறப்புடைய பஞ்ச பூதங்களுக்கு உரிய திருத்தலங்களாக ஐந்து உள்ளன. அவை யாவன ஆகாயம்—சிதம்பரம், நீர்—திருவானைக்காவல்,

காற்று—திருக்காளத்தி, நெருப்பு—திருவண்ணாமலை, நிலம்—காஞ்சிபுரம் அல்லது திருவாரூர். பொதுவாகப் பஞ்ச பூதங்களுக்குரிய தலங்கள் உள்ளது போலவே பாண்டிய நாட்டிற்கு உரியனவாகப் பஞ்ச பூதத் தலங்களும் தனியாக உள்ளன. அவையாவன (1) சங்கரன் கோயில் (பூமி தலம்) (2) தாருகாபுரம் (நீர்தலம்) (3) தென்மலை (காற்றுத் தலம்) (4) கரிவலம் வந்த நல்லூர் (தீ) ( ) தேவதானம்-ஆகாயத் தலம் இவற்றுள் ஆகாயத்திற்கு உரிய தலமான தேவதானம் காமராஜர் மாவட்டத்தில் ராஜபாளையம், தென்காசி நெடுஞ்சாலையில் இராஜபாளையத்திலிருந்து 7 கி. மீ. தொலைவில் அமைந்துள்ளது.

**கோயில் அமைப்பு:** தேவதானம் என்ற ஊரிலிருந்து சுமார் மூன்று கி. மீ தொலைவில், அருவிக்குச் செல்லும் பாதையில் திருக்கோயில் கிழக்கு நோக்கியவாறு அமைந்துள்ளது. கோயிலின் முன்பு சதுரவடிவிலமைந்துள்ள அழகிய தெப்பக்குளம் உள்ளது. கோயிலைச் சுற்றி வலிமையான மதிற்சுவர்கள் உள்ளன. இக்கோயிலின் முகப்பில் கோபுரம் இல்லை. சுவாமி, அம்மன் சந்நிதிகள் மீது சிறிய விமானங்களே உள்ளன. கோயிலைச் சுற்றிக் குடியிருப்புக்கள் இல்லை. வயல்களுக்கு இடையே மிகவும் ரம்மியமான சூழ்நிலையில் கோயில் அமைந்துள்ளது.

மூன்று பிரகாரங்களுடன் இக்கோயில் பொலிவான தோற்றத்தைப் பெற்றுள்ளது முன் மண்டபத்தில் கொடி மரமும், ஊஞ்சல் மண்டபமும் உள்ளன. தனிச் சந்நிதிகளில் இடம் பெற்றுள்ள சித்தி விநாயகர், ஆறுமுகர் ஆகியோரை வழிபட்டவாறு உள்ளே நுழையலாம். முதல் பிரகாரத்தின் தென்பகுதியில் அறுபத்து மூவர், சப்த கன்னியர், ஐயனார், தென்முகக் கடவுள் ஆகியோரைத் தரிசிக்கலாம். மேற்கே சோமாஸ்கந்தர், மகாலக்ஷ்மி, பஞ்சலிங்கம், முருகன் முதலிய திருவுருவங்

களும் உற்சவ மூர்த்திகளும் காட்சியளிக்கின்றனர். வடக்கே சண்டேஸ்வரர், நவகிரகங்கள் ஆகியோருக்கும் இடமுள்ளது.

கருவறையில் மூலவர் நச்சாடைத் தவிர்த்தருளிய நாயனார் லிங்கவடிவில் அருள்பாலிக்கிறார். சுற்றாலையின் தென்பகுதியிலுள்ள சுரதேவரின் திருவுருவம் ஒரு அழகிய படைப்பாகும். இவர் மூன்று கைகள், மூன்று கால்கள், மூன்று தலைகள் ஆகியவற்றைப் பெற்றுள்ளார். இவரது முன்கரம் ஒன்று உடலுக்குக் குறுக்கே தொங்கிய வாறு வேழ முத்திரையை அளிக்கிறது. இரண்டாவது கரத்தில் அக்கினியை ஏந்தியுள்ளார். மூன்றாவது கை அபயம் அளிக்கும் நிலையில் உள்ளது. இச்சிற்பம் கி. பி. பதினாறு அல்லது பதினேழாம் நூற்றாண்டில் செதுக்கப் பட்டிருக்கக் கூடும்,

முருகப் பெருமானின் படிவம் பாண்டியர் காலத்தைச் சார்ந்தது. பின் இரு கரங்களில் சக்தியாயுதமும், உக்கிரப் படையும் இடம் பெற்றுள்ளன. முன் வலது கை அபய முத்திரையை அளிக்கிறது. பின் கரம் தொடை மீது ஊன்றிய நிலையில் உள்ளது. நெற்றியில் கண்ணியும் மார்பில் சன்னவீரமும், வயிற்றில் உதரபந்தமும், இடையில் ஆடையும் அணி செய்கின்றன. இவ்வுருவம் 91 செ. மீ உயரமும், 49 செ. மீ அகலமும் உடையது. இவ்வுருவத்தை வீரபத்திரர் என்று கருதுவோம்ரு உண்டு.

தென்புறச் சுற்றாலையில் சப்தமாதர்களின் திருவுருவங்களைக் காணலாம். அனைவருக்கும் சதுர்புஜங்கள் உள்ளன. முன்வலக்கை அபயமுத்திரையை அளிக்கும்; முன் இடக்கை தொடையின் மீது ஊன்றியிருக்கும். வலது கால் தொங்கிய நிலையில் காணப்படுகிறது. பிராமி, கெண்டி, அக்கமாலை ஆகியவற்றை ஏந்தியுள்ளார். மழுவும், மானும் மகேஸ்வரியின் கரங்களை

அலங்கரிக்கின்றன. சக்தி, வஜ்ஜிரம் ஆகிய ஆயுதங்களைக் கௌமாரி தரித்துள்ளார். வைஷ்ணவியின் கரங்களில் ஆழியும், சங்கமும் மிளிர்கின்றன. வராகி சங்கு, சக்கரம் ஆகியவற்றை ஏந்தியுள்ளார், இந்திராணி வச்சிரம், சக்தி ஆகிய படைகளுடன் தோன்றுகிறாள். விரிந்த சடையுடன் காட்சியளிக்கும் சாமுண்டியின் கரங்களில் அங்குசம், திரிசூலம் ஆகிய படைகள் ஜொலிக்கின்றன. பிற்காலப் பாண்டியர்கள் (கி.பி. 14 அல்லது 15ஆம் நூற்றாண்டுகள்) ஆட்சியில் இக்கருங்கல் சிற்பங்கள் தோன்றியிருக்கலாம்.

சப்தமாதர்களையடுத்து யோகீஸ்வரரின் திருவுருவம் உள்ளது. பின்கரங்களில் முத்தலைச் சூலமும், மானும் இடம் பெற்றுள்ளன. முன்வலக்கை கடக முத்திரையை அளிக்க, பின் இடக்கை தொடை மீது பரவியுள்ளது. காலையும் இடுப்பையும் இணைக்குமாறு யோகபட்டம் அமைந்துள்ளது. அமர்ந்த நிலையில் காட்சியளிக்கும் இத்திருவுருவத்தில் விரித்த சடாபாரமும் முகத்தில் தோன்றும் அமைதியும் அருமையாக வெளிப்படுத்தப்பட்டுள்ளன. விஷ்ணு துர்க்கையின் திருவுருவமும் பிற்காலப் பாண்டியர்களின் காலத்தைச் சேர்ந்தது. கரங்களில் சங்கு, சக்கரங்கள்; திருமுடியில் கரந்த மகுடம்; காதுகளில் பத்திர குண்டலம்; இவ்வாறு தோன்றும் துர்க்கை ஒரு அழகிய படைப்பு.

தனி சந்நிதியில் அருள்பாலிக்கும் அம்மனின் திருநாமம் தவம்பெற்ற நாயகியாகும். இச்சந்நிதியின் விமானம் காளை வடிவானது; பிரஸ்தாரத்தில் நந்தியின் திருவுருவத்தைக் காணலாம். இச்சந்நிதி கி. பி. 14 அல்லது 15ஆம் நூற்றாண்டில் தோன்றியிருக்கக் கூடும்.

இரண்டாம் பிரகாரத்தின் தென்மேற்கு மூலையில் மாடக்கோயில் போல உயர்ந்துள்ள தனிக்கோயிலில்

திருமலைக்கொழுந்தீசர் லிங்க வடிவில் காட்சி தருகிறார். இவர் பாறை மீது சித்தார்த்தமாகத் தோன்றியுள்ளதாக ஐதிகம் உள்ளது. நான்கு தூண்களால் தாங்கப்படும் அர்த்த மண்டபமும், சதுரவடிவமுடைய கருவறையும் இணைந்து இச்சந்நிதியாக உருவெடுத்துள்ளன. சந்நிதியை அணி செய்யும் விமானம் நாகர வகையைச் சார்ந்தது. 17 அல்லது 18ஆம் நூற்றாண்டுகளில் இச்சந்நிதி எழுந்தது.

இக்கோவிலிலுள்ள பலவகையான மண்டபங்களும், அவற்றைத் தாங்கியுள்ள தூண்களை அலங்கரிக்கும் சிற்பங்களும் அற்புதமான படைப்புக்களாகும் நான்கு தூண்களால் தாங்கப்படும் மகாமண்டபம் செவ்வக வடிவமைப்பை உடையது. மணி மண்டபத்தின் தூண்களை அலங்கரிக்கும் சிற்பங்கள் பதினேழாம் நூற்றாண்டைச் சார்ந்த சிற்பக் கலைக்கு எடுத்துக்காட்டாகும். இவற்றுள் பிட்சாடனர் உருவில் சிவபெருமான் தாருகவனத்து இருடிகளை மயக்கிய காட்சி இரசிக்கத்தக்கது. நந்தி மண்டபத்தை எண் பட்டை வடிவான பத்து தூண்கள் தாங்குகின்றன. இம்மண்டபத்தைச் சுற்றியுள்ள பிரகாரத்தில் பைரவர், சந்திரன், சூரியன், அதிகாரநந்தி ஆகிய திருவுருவங்கள் பிற்காலத்தில் பிரதிஷ்டை செய்யப் பட்டன. மண்டபத்தின் நடுவில் அழகிய நந்தியின் திருவுருவத்தைக் காணலாம்.

பதினெட்டு தூண்களால் தாங்கப்படும் செவ்வக வடிவுள்ள கம்பத்தடி மண்டபம் உருவில் பிரம்மாண்டமானது. பாசுபதக் கணையை நாடித் தவமியற்றும் தனஞ்ஜயன், பறவைகள், விலங்குகள் போன்ற சிற்பங்களை இங்கு காணலாம். மிகப்பெரிய ஆமையின் உருவம் இம்மண்டபத்தின் நடுவில் தரையில் பதிக்கப் பட்டுள்ளது காணற்கு அரிய காட்சியாகும். ''ஒருமையுள் ஆமை போல உள்ளடக்கி'' என்ற குறட்பாவிற்கு ஏற்ப

ஆலயத்தினுள் செல்லும்போது பஞ்சேந்திரியங்களை அடக்கிச் செல்ல வேண்டும் என்ற கோட்பாட்டை வலி யுறுத்தவே இவ்வுருவம் அமைக்கப்பட்டுள்ளது போலும். இது போன்ற ஆமையின் உருவங்களைக் கேரள நாட்டுக் கோயில்களில் அதிகம் காணலாம். கம்பத்தடி மண்ட பத்தை ஒட்டியவாறு சேறை அம்பலம் உள்ளது. இதன் மீது மரவேலைப்பாடுகளுடன் கூடிய அழகிய விமானம் மெருகூட்டுகிறது.

இங்கு சரக்கொன்றை மரம் தல விருட்சமாகத் திகழ்கிறது. இரண்டாம் பிரகாரத்தில் திருமலைக் கொழுந் தீசர் சந்நிதிக்கு அருகே இதனைக் காணலாம். தருமா சலத்தில் உற்பத்தியாகும், கோரயாறு இங்கு புண்ணிய தீர்த்தமாகும். தன்னில் நீராடுவோரின் பாவங்களைக் களைவதால் அகோரநதி என்று அதற்குப் பெயர் கிடைத் தது. இதனைப் பச்சையாறு, நீராறு, தேனியாறு என்ற பெயர்களாலும் அழைப்பர். இதன் புனிதத் தன்மையை ஒட்டி முத்துத்தீர்த்தம், சர்வ தீர்த்தம், பிரம தீர்த் தம், கோர தீர்த்தம், தேவி தீர்த்தம் ஆகிய பெயர்களும் இந்நதிக்கு அளிக்கப்பட்டுள்ளன. இந்த நதியிலிருந்து பதினொன்று தீர்த்தங்கள் தோன்றித் தேவதானத்தின் புனிதத் தன்மையை அதிகரித்துள்ளன.

இக்கோயிலில் நாள்தோறும் திருவனந்தல், விழா பூஜை, சிறுகாலை, காலசந்தி, உச்சிக்காலம், சாயரக்ஷை, அர்த்தஜாமம் ஆகிய ஆறு காலங்களிலும் முறைப்படிப் பூஜைகள் நடைபெறுகின்றன. வைகாசி மாதத்தில் பத்து நாட்களுக்குப் பிரம்மோற்சவம் நிகழும். உற்சவமூர்த்திகள் பலவிதமான வாகனங்களில் ஏறித் தேவதானம் வரை பவனி வருவதுண்டு. நான்காம் நாளன்று சுவாமியும், அம்மனும் வெள்ளி ரிஷப வாகனத்தில் உலா வருவார்கள். ஒன்பதாம் நாளன்று தேரோட்டம் நிகழும். ஆனி மாத உத்தர நட்சத்திரத்தன்று நடராஜப் பெருமானுக்கு விசேட

அபிஷேகம் நடத்தப்பட்ட பின் உலா செல்வதுண்டு. ஆடிப்பூரம், விநாயக சதுர்த்தி, நவராத்திரி. திருவாதிரை, தைப்பூசம் ஆகிய விழாக்களும் கோயிலில் கொண்டாடப்படுகின்றன. தை மாத இறுதியில் அரனார் காளையிலமர்ந்தவாறு காட்சியளிப்பார். மாசி மக நாளில் தெப்போற்சவம் நடைபெறும். பிறவிக்கடலில் உழன்று கரைகாண இயலாது தவிக்கும் உயிர்களுக்கு இறைவன் அருள்புரிவதை உணர்த்துவதே இவ்விழாவின் நோக்கமாகும்.

**தலவரலாறு:-** பாண்டிய நாட்டில் ஆட்சி புரிந்து வந்த வீரபாகு பாண்டியன் விதிவசத்தால் பிரம்மஹத்தி தோஷத்தால் பீடிக்கப் பெற்றான். இத்தருணத்தில் சோழநாட்டு மன்னனான விக்கிரமன் பாண்டி நாட்டின் மீது போர் தொடுத்தான். தீவிர பக்தனான வீரபாகு போரில் தனக்கு வெற்றியளிக்குமாறு அரனாரிடம் இறைஞ்சினான். தாமும், தமது பூத கணங்களும் மாறுவேடத்தில் தோன்றி உதவுவதாக விரிசடைக் கடவுள் அரசனின் கனவில் தோன்றி அருளினார். மறுநாள் சிவபெருமானும், பூதகணங்களும் போர்வீரர்கள் வடிவில் தோன்றிச் சோழனின் படைகளை முறியடித்தன.

நிரந்த சாதகப்படை புவியினிற் செலு நெருக்கம்
பரந்த வாரிமோ யளவிடற் கரிதென பகரச்
சுரந்த பேரருள் நாய்கள் காவிரித் துறையைப்
புரந்த சோழன்மேற் போர் செயக் குணதிசை
புகுந்தான்
(சேறைத் தலபுராணம்)

போரில் புறமுதுகிட்ட விக்கிரமசோழன் தனது முயற்சியைக் கைவிடவில்லை. கொடிய நஞ்சு கலந்த ஆடை ஒன்றைத் தயாரித்து அதனைப் பாண்டிய மன்னனுக்குப் பரிசாகத் தனது தூதுவனிடம் கொடுத்தனுப்பினான். சோழனின் வஞ்சகத்தை இறைவன் பாண்டிய

னுக்குத் தெரியப்படுத்தினார், இறைவன் அறிவுறுத்திய வாறு தனக்கு அன்பளிப்பாக வந்த நச்சாடையைச் சோழ நாட்டுத் தூதுவன் மீதே போர்த்தச் செய்தான். உடனே அத்தூதுவனும் எரிந்து போனான். இவ்வாறு நஞ்சு நிறைந்த ஆடையால் வரவிருந்த அபாயத்திலிருந்து பாண்டிய மன்னனைக் காத்தருளிய ஈசனுக்கு 'நச்சாடைத் தவிர்த்தருளிய நாயனார்' என்ற திருநாமம் நிலைத்தது.

''சோதி வல்விடத் துகில் கற்றலால்
ஆதிநாமம் நச்சாடை தீர்த்தருள்
நீதியானென நிகழ்த்தி நித்தலும்
ஓதி யாற்று தித்து உயர்த்தி எய்தினான்;''
(சேறைத் தலபுராணம்)

தன்னைக் காத்த இறைவனுக்கு வீரபாகு கோயி லமைத்துப் பல திருப்பணிகளைச் செய்தான். தான் செய்த தவறுக்கு வருந்திய விக்கிரம சோழனும் 'சோழ புரம்' என்ற பகுதியை அமைத்து, ஈசனுக்குத் தொண்டு கள் புரிந்தான்.

பார்வதி தேவியும், கங்காதேவியும் தருமாசலத்திற்கு வந்து கோரநதியில் நீராடினர். உமையன்னை தருமா சலத்தின் வடக்கிலும், கங்காதேவி கிழக்கிலும் தவக்குடில் களையமைத்துக் கடுந்தவம் புரிந்தனர். அரனார் இரு வருக்கும் காட்சியளித்து அருள்புரிந்தார். இதே தலத்தில் அம்மையப்பராகக் கோலம் கொண்டார். அம்மையுடன் காட்சியளித்த ஈசனுக்கு வானவர்கள் பூசைகள் நடத்திய இடம் 'திருவோலக்கப்பாறை' எனப் பெயர் பெற்றது. தவம் புரிந்து அரனாரின் தரிசனம் பெற்றதால் இத்தலத் தில் எழுந்தருளியுள்ள அம்மனுக்குத் 'தவம் பெற்ற நாயகி' என்ற திருநாமம் ஏற்பட்டது.

சிருங்கம் என்ற கலைமானும், மூவேந்தர்களும் இத் தலத்தில் வழிபாடுகள் புரிந்துள்ளனர். திருப்பகலவன்

றை, வெள்ளைப்பாறை, ஒலக்கப்பாறை ஆகிய பாறை இங்கு உள்ளன. சிவபுரம், பலாசவனம் ஆகிய வேறு யர்களும் இத்தலத்திற்கு உரியன.

இக்கோயிலில் படியெடுக்கப்பட்டுள்ள 14 கல்வெட்டுக் பல பயனுள்ள தகவல்களை அளித்துள்ளன. பதின் றாம் நூற்றாண்டில் அரசாண்ட மாறவர்மன் குல கரனின் கல்வெட்டு இக்கோயிலில் திருப்பணிகளுக்காக தானம் வழங்கப்பட்ட செய்தியைத் தருகிறது. டயான் தேவன் எனப்பட்டவரின் புலமைக்குப் பரிசாக ங்களைக் குலசேகரபுரத்தைச் சேர்ந்த நகரத்தார் ங்கியதாக இதே அரசனின் மற்றொரு கல்வெட்டு ரிவிக்கிறது. அக்கொடை 'புலமை விருத்தி' என்று ]ப்பிடப்பட்டுள்ளது.

பதினான்காம் நூற்றாண்டில் ஜடாவர்மன் பராக்கிரம ண்டியன் இக்கோயிலைப் புதுப்பித்து, இக்கோயிலில் பாடுகளை முறைப்படி, நடத்துவதற்காகச் சூரிய டன் என்பவரைத் தேவக்கன்மியாக நியமித்தான். த்து அரசாண்ட மாறவர்மன் ஸ்ரீவல்லபனும் திருப் ரி புரிவதற்காக நிலதானம் வழங்கினான். இதே சனின் 3-ஆம் ஆட்சியாண்டில் இவ்வாலயத்தில் காலை விசேட வழிபாடுகள் நடத்துவதற்காகப் ‌ராந்தக கலப்பற்று என்ற ஊரை இக்கோயில் தானத்தாரிடம் ைத்தான். இதே அரசனால் ஆகவராமன் சந்தி என்ற ஜை நிறுவப்பட்டது. அப்பூஜை முறைப்படி நடைபெற , அஷ்டமி தினங்களில் விசேட அபிஷேகங்கள் புரிய தொண்டன் குளம் என்ற கிராமத்தை அளித்தான். ற்கான உத்தரவு வரதுங்கநல்லூர் என்ற ஊரிலுள்ள த்து மண்டபத்தில் அரசன் தங்கியிருந்தபோது பிறப் கப்பட்டது. அரசனின் நட்சத்திரம் பூரட்டாதி என்றும் ளிய வருகிறது. மாலையில் விசேட பூஜை ஒன்று

நடத்துவதற்காகப் பெற்றானேரில் என்ற ஊரையும் வழங்கினான். கி. பி. 1485ஆம் ஆண்டில் வீரபாண்டியன் எனப்பட்ட செண்பக பராக்கிரம பாண்டியன் "மன்னர் வலம் நோக்கினான்." என்பவரைக் கோயிலில் எழுத்தராக நியமித்து, அவரது ஊதியத்திற்காக நிலத்தையும் அளித்தான். இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர் இக் கோயிலில் அத்யாயன சேவைகள் புரிவதற்காக வசிஷ்ட கோத்திரத்தைச் சேர்ந்த சங்கரநாராயண பட்டர் என்பவர் நியமிக்கப்பட்டார். அவருக்கு இல்லமும், நிலமும் அளிக்கப்பட்டன. இவ்விரு சாசனங்களும் இறைவனின் பெயராலேயே பிறப்பிக்கப்பட்டன.

கி. பி 1554ஆம் ஆண்டில் மதுரை சுந்தரேஸ்வரர் கோயிலைச் சேர்ந்த இராபண்ணியதேவன் என்பவரைக் கணக்கராக இளவரசன் அழகர் பெருமாள் நியமித்தார். இதே அழகர் பெருமாள் அதிவீரராம பாண்டியன் என்ற பெயரில் அரசுப் பொறுப்பை ஏற்ற பின்னர் சேத்தூர் பிடாகையிலுள்ள மூன்று பகுதி நிலங்களை விசேட வழிபாடுகளுக்காக அளித்தான் (கி. பி. 1582) அவரை அடுத்து அரசாண்ட பெருமாள் அபிராமவரதுங்கரர்மர் ஒரு நந்தவனத்தைக் கோயிலுக்காக ஏற்படுத்தினார்.

இக்கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவனின் அர்த்த ஜாமப் பூஜைக்கும், பங்குனி உத்திர விழாவின் செலவுகளுக்கும் தாரான்குளம் என்ற கிராமம் வழங்கப்பட்டதாக ஜடிலவர்மன் திரிபுவனச் சக்கரவர்த்தி வீரபாண்டியனின் கல்வெட்டு தெரிவிக்கிறது. மாறவர்மன் திருவல்லபதேவன் இத்தலத்தில் முகாமிட்டுத் தங்கியிருந்தபோது திருப் 'பணியபுரம்' என்ற கிராமத்தைத் தானமாக அளித்தான். மேலும் திருப்பரைபுரம், தொண்டன்குளம், புதுவூர், பொற்றானேரி போன்ற ஊர்கள் பல்வேறு காலங்களில் இக்கோயிலுக்குத் தேவதானமாக அளிக்கப்பட்டன.

ஆன்ம நாட்டிலுள்ள குலசேகரபுரம் எனப்படும் செம்மறம் என்ற ஊரிலுள்ள திருபகவான்பாறை ஆளுடைய நாயனார்

கோயில் என்றே இவ்வாலயம் முதலில் குறிப்பிடப்பட்டது. பதினாறாம் நூற்றாண்டு முதல் இறைவனை நச்சாடைத் தவிர்த்தருளிய நாயனார் என்றே கல்வெட்டுகள் குறிக்கின்றன. பதின்மூன்று முதல் பதினைந்தாம் நூற்றாண்டுகள் வரை இக்கோயிலுக்குத் தானங்களை அரசர்களே வழங்கியுள்ளதால் அக்காலத்தில் இக்கோயில் முக்கியமான திருத்தலமாகத் திகழ்ந்திருக்கக் கூடும்.

சேத்தூர் ஜமீன் வாரிசைச் சேர்ந்தவர்கள் பலகாலம் இக்கோயிலை நிர்வகித்து வந்தனர் தற்போது இக்கோயில் தமிழக அரசின் இந்து அறநிலையத் துறையினரால் நிர்வகிக்கப்பட்டு வருகிறது. தேவதானம் என்றரின் மையப்பகுதியில் குமரப் பெருமானின் கோயில் ஒன்று உள்ளது. தேவதானத்திலிருந்து பெரிய கோயில் என்று வழங்கப்படும் நச்சாடைத் தவிர்த்தருளிய நாயனாரின் ஆலயத்திற்கு வரும் வழியிலுள்ள நாகமலை என்ற சிறுகுன்றின் மீது முருகப் பெருமானின் கோயில் அமைந்துள்ளது.

தேவதானத்துடன் தொடர்புடைய திருத்தலமான சேத்தூர் அண்மையில் அமைந்துள்ளது அவ்வூரில் அமைந்துள்ள திருக்கண்ணீஸ்வரர் ஆலயம் புராதனச் சிறப்பு மிக்கது 'சேற்றூர்' என்று முற்காலத்தில் வழங்கப்பட்ட இத்திருத்தலத்தின் மீது சேறைத் தலபுராணம் என்ற நூலைச் சேற்றூர் பொன்னாயிரங்கவிராயர் என்பவர் புனைந்துள்ளார் இந்நூலில் 30 படலங்களும், 1106 பாடல்களும் உள்ளன. இந்த நூலில் தேவதானம் தல வரலாறு விரிவாக உரைக்கப்பட்டுள்ளது.

1803ஆம் ஆண்டில் ஜமீன்தார் பதவியை ஏற்ற சேவுக பாண்டியதேவர் இக்கோயிலுக்காக நிலங்களை வழங்கினார். தேவதானத்தில் எண்கோண வடிவுடைய கோடை மாளிகை ஒன்றைக் கட்டினார் அழகிய பூங்கா ஒன்றையும், அதில் குற்றாலத்தைப் போன்று நீர் வீழ்ச்சியையும் உருவாக்கினார். 1895 முதல் 1902ஆம் ஆண்டுவரை நாகமலை முருகர் கோயில் புதுப்பிக்கப்பட்டது. குமரக் கோயிலின் மதிற்சுவர்களும், பெரிய கோயிலின் தள வரிசைகளும், தெப்பக்குளமும் செப்பனிடப்பட்டன.

# 13. பரமக்குடி

(இராமநாதபுரம் மாவட்டம்)

## 1. சௌந்தரராஜப் பெருமாள் கோ
## 2. சந்திரசேகரஸ்வாமி கோயி

மதுரை-இராமேஸ்வரம் நெடுஞ்சாலையில், நாதபுரம் மாவட்டத்தின் துவக்கத்தில் பரமக்குடி வியாபாரஸ்தலம் உள்ளது. மதுரையிலிருந்து பெயர்ந்த சௌராஷ்டிரர்கள் இங்கு அதிக அளவி கின்றனர். இவர்களது ஆதரவில் சௌந்த பெருமாள் கோயில், சந்திரசேகரஸ்வாமி கோயில் இரு ஆலயங்கள் நல்லமுறையில் பேணப்பட் கின்றன. பரமக்குடி நகரில் பல்வேறு வியாபார கள் நிறைந்துள்ள பகுதியில் இவ்விரு ஆலய அமைந்துள்ளன.

### பரமக்குடி

தமிழக சமுதாய வரலாற்றிலும், பண்பா சௌராஷ்டிரர்களுக்கு ஒரு குறிப்பிடத்தக்க இட கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் சௌராஷ்டி

மேனாட்டார் வென்று 'சராஷ்டோஸ்' என்று பெயரிட்டதாகக் கருதுகின்றனர். மாண்டசோர் எனப்பட்ட தாசபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்த பந்துவர்மன் கி. பி ஐந்தாம் நூற்றாண்டில் இவர்களைத் தனது நாட்டில் குடியேற்றினான். சௌராஷ்டிரர்கள் பட்டு நெசவு, சோதிடம், சாத்திரம், சமயம் ஆகிய துறைகளில் பெரிதும் தேர்ச்சி பெற்றிருந்ததாக மாண்டசோர் கல்வெட்டு தெரிவிக்கிறது, இக்கல்வெட்டு 'பட்டவாயக்; (பட்டுநெசவுக் கலைஞர்) என்று இவர்களைக் குறிப்பிடுகிறது.

நெசவுத் தொழிலில் சௌராஷ்டிரர்களுக்கு இருந்த வல்லமையால் கி, பி. ஐந்தாம் நூற்றாண்டில் புகழ்பெற்ற சோமநாதபுரத்தில் குடியேற்றப்பட்டனர். ஆலயத்திற்கும் அரண்மனைக்கும் வேண்டிய பட்டு ஆடைகளை நெய்துவந்த சௌராஷ்டிரர்களின் குலத் தொழிலாகவே பட்டு நெசவு ஆயிற்று. பின்னர் மாளவத்திலும், தேவகிரியிலும் சௌராஷ்டிரர்கள் குடியேறினர். நான்காம், பில்லம்மா என்ற யாதவ அரசன் நான்கு தெருக்களில் அவர்கள் தங்குவதற்கு இல்லங்களும், பிற வசதிகளும் அமைத்துக் கொடுத்தான். கஜனி முகம்மது, அலாவுதீன் கில்ஜி ஆகியோரின் படையெடுப்புக்களின் போது முகமதியர்களால் பெருந்தொல்லை ஏற்பட்டதால் சௌராஷ்டிரர்கள் விஜயநகர் நோக்கிப் பயணமாயினர். விஜயநகர ஆட்சியில் சௌராஷ்டிர விஜயாப்தம் என்ற புதிய சகாப்தமே துவங்கியது. விஜயநகர் அரசர்களின் ஆட்சி தென்னகத்திற்குப் பரவியபோது அங்கு சௌராஷ்டிரர்களும் சென்றனர். நாயக்க மன்னர் ஆட்சியின் போது செவ்வப்ப நாயக்கரின் அமைச்சரான கோவிந்த தீக்ஷிதரின் முயற்சியால் சௌராஷ்டிரர்கள் தஞ்சையில் குடியேறினர். மதுரையில் திருமலை நாயக்கர் ஆட்சிக் காலத்தில் நாயக்கர் மஹாலைச் சுற்றி இவர்களைக் குடியேறச் செய்தார். சேதுபதி அரசர்களும் சௌராஷ்டிரர்களை ஊக்குவித்து மூலக்கொத்தளம் என்ற பகுதியில் குடியேற்றினர். பார்த்திப ஆண்டில் (1704-05) 18 சௌராஷ்டிர பிராமணர்களை மதுரை கோட்ட அதிகாரியான வெங்கடரங்கையகாரு என்பவர் சிறைப்பிடித்தார். பின்னர் இராணி மங்கம்மாள் அவர்களை விடுவித்துப் பாதுகாப்புப் பட்டயம் ஒன்றை அளித்தார்.

சோதிடம், மாந்திரீகம், வைத்தியம், கலை, பட்டு நெசவு ஆகிய துறைகளில் உள்ள திறமையே சௌராஷ்டிரர்கள் தென்னகத்தில் குடியேற உதவியது. இராமேஸ்வரம் நோக்கிச் சௌராஷ்டிரர்கள் பயணமாகியபோது பிரப்புக்காடு என்ற இடத்தில் இராமநாதபுர சேதுபதி மன்னர் இவர்களைக் கண்டார். இவ்விடமே காகாதோப்பு எனப்படுகிறது. சௌராஷ்டிரர்களின் திறனைப் பயன்படுத்திக்கொள்ள எண்ணிய சேதுபதி அரசர் காகாதோப்பு முதல் குத்துக்கல் வரையுள்ள பகுதிகளில் குடியேற அனுமதித்தார். இக்காலத்தில் பரமக்குடியில் அவர்கள் குடியேறினர்.

## சௌந்தரராஜப் பெருமாள் கோயில்

சௌராஷ்டிரர்கள் தாங்கள் குடியேறும் பகுதிகளில் மடம், கல்வி நிலையங்கள், கோயில்கள் ஆகியனவற்றை அமைப்பதில் ஊக்கம் காட்டினர். சுமார் 425 ஆண்டுகளுக்கு முன்னர் பரமக்குடியில் கோபால மடம் என்ற பஜனை மடத்தை நிறுவினர். தினமும் வைகைக் கரையில் மண்ணை வெட்டி எடுத்துச் சென்று ஊற்று ஓடுகால்களைச் சரி செய்து நீராடி சந்தியாவந்தனத்தை முடித்துவிட்டு மடத்திற்குச் சென்று வழிபாடு புரிந்த பின்னரே இல்லம் நோக்கித் திரும்பிச் செல்வது அவர்களது பழக்கம்.

சௌராஷ்டிரர் குலத்தைச் சேர்ந்த தவசிரேஷ்டர் ஸ்ரீசுகந்த தூப தீர்த்தார்ய சுவாமிகள் என்ற மகான் அனைவராலும் பெரிதும் மதிக்கப்பட்டு வந்தார். சோழ நாட்டில் மழை பொய்த்து வறட்சி தாண்டவமாடியபோது அரசன் அவரைத் தனது நாட்டிற்கு வரச் செய்தான். சுகந்த தூப தீர்த்தார்ய சுவாமிகள் சௌராஷ்டிர மொழியில் கீர்த்தனைகளைப் பாடியவுடன் மழை பெய்து வறட்சி நீங்கியது. ஸ்ரீரங்கத்தில் இம்மகானுக்கு விசேட பூஜைகள் நடத்தப் பெறுகின்றன. தீர்த்தார்ய சுவாமிகள் பரமக்குடி

யில் சில காலம் தங்கினார். தனது தாயார் காலமாகிய வுடன் அவரது பூதவுடலை இடுகாட்டில் எரியூட்டினார். தாயாரின் காதுகளை அலங்கரித்திருந்த கம்மல்களைக் கழற்ற மறந்து விட்டதாக அறிந்த சுவாமிகள் இரவில் மயான பூமிக்குச் சென்றார். அங்கு ருத்திரர் சுவாமிகள் முன்தோன்றி அவருடன் வாதங்கள் பல புரிந்தபின் சுவாமிகளுக்குக் கவிபாடும் திறனையளித்ததாகக் கூறப் படுகிறது.

கோபால மடத்தில் இறைவனின் திருவுருவத்திற்குப் பூஜைகள் புரிந்து வந்த அர்ச்சகரின் கனவில் மகாவிஷ்ணு தோன்றி, வைகையின் கரையில் தனது விக்கிரகம் புதை யுண்டிருப்பதாக அறிவித்தாராம். வைகையின் கரையில் ஓடுகால் தோண்டியபோது சங்கு சக்ர கதாதாரியான நாராயணனின் கற்சிலை ஒன்று கண்டெடுக்கப்பட்டது. அழகர்கோயில் என்ற திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள சுந்தரராஜரின் திருவுருவத்தைப் போலவே இவ்வுருவம் அமைந்திருந்தது. இவ்வுருவத்திற்கும் சுந்தரராஜர் என்று நாமகரணம் செய்வித்து அவரை மடத்தில் நிறுவனர். காலப் போக்கில் அவ்விடத்தில் விமானங்கள், மண்டபங் கள் ஆகியவற்றுடன் கூடிய பெரிய ஆலயம் உருவாயிற்று. இந்த நூற்றாண்டின் துவக்கத்தில் கோபுரம் கட்டப் பட்டது இத்திருப்பணிகளுக்காக இராமநாதபுரம் சேதுபதி அரசர்கள் பல உதவிகளை அளித்தனர். அழகர் கோயிலில் நடைபெறுவது போலவே இங்கும் திருவிழாக் கள் நடைபெறுவதற்காக வண்டியூர், காகாதோப்பு ஆகிய பகுதிகளைச் சேதுபதி மன்னர் வழங்கினார். சித்திரைப் பெருவிழாவின்போது சேதுபதி அரசரையழைத்து வந்து பரிவட்டம் சார்த்தி, சகல மரியாதைகளையும் அளித்தனர். அப்போது நாட்டாண்மையாக இருந்த அம்பலம் வகை யறா குடும்பத்தினரிடம் வளையனேந்தல், மேலச்சத்திரம் ஆகிய கிராமங்கள் அளிக்கப்பட்டன. அவற்றிலிருந்து

வரும் வருவாயைக் கோயிலின் பூஜை செலவுகளுக்காகப் பயன்படுத்துமாறு கட்டளையும் இடப்பட்டது.

காலப்போக்கில் கோயிலுக்குரிய நிலங்கள் எத்தர்களால் அபகரிக்கப்பட்டன. நீதிமன்றத்தில் வழக்குத் தொடரப்பட்டு நீண்ட போராட்டத்திற்குப் பின்னர் அக்ரஹாரம் பாதி, சத்திரம் பாதி என்று தீர்ப்பு வழங்கப்பட்டது. அழகர் கோயிலில் நடைபெறுவது போலவே திருவிழாக்களை இங்கு நடத்தக் கூடாது என்று அழகர் கோயில் தேவஸ்தானம் உத்தரவு பிறப்பித்தது. நீதிமன்றத்தில் வழக்கு தொடரப்பட்டது. அழகர் கோயிலை ஒட்டித் திருவிழா நடத்துவதற்கு எவ்விதத் தடையுமில்லை என்று நீதிமன்றம் தீர்ப்பளித்தது. இன்று சித்திரையில் அழகர் கோயிலில் நடைபெறுவது போலவே திருவிழா மிகவும் விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது. இவ்விழாவில் பங்கேற்க உள்ளூரிலிருந்தும், வெளியூரிலிருந்தும் எண்ணற்ற அன்பர்கள் பெருந்திரளாக வருகின்றனர்.

துவக்கத்தில் இக்கோயிலைச் சவ்ளின் (அம்பலம்) குடும்பத்தினர் நிர்வகித்து வந்தனர். சில காலத்திற்குப் பின் ஊர் மக்களுக்கும் நிர்வாகத்தினருக்கும் சில தகராறுகள் ஏற்பட்டன. தகராறு நீங்கவும் கோயிலில் அபிவிருத்திகள் நடைபெறவும் நீதிமன்றம் மூலம் தீர்ப்பு வழங்கப்பட்டது. இதன்படிச் சவ்ளின் குடும்பத்தைச் சேர்ந்த ஒருவரும், சௌராஷ்டிரர் மகாஜனத்தினரால் தேர்ந்தெடுக்கப்பட்ட நான்கு டிரஸ்டிகளும் இணைந்து இக்கோயிலின் நிர்வாகத்தைக் கவனித்துக் கொள்வதாக முடிவாயிற்று. தமிழக அரசின் இந்து அறநிலைய ஆட்சித் துறையினரால் இக்கோயிலின் நிர்வாகத்தை எடுத்துக்கொள்ள முயற்சி நடைபெற்றது. இதற்காகவும் நீதிமன்றத்தில் வழக்கு தொடரப்பட்டது. சௌந்தரராஜப் பெருமாள் கோயில் சௌராஷ்டிர பிராமண மகாசபைக்குச் சொந்தமானது என்றும், அதில் அரசு தலையிடக்கூடாது எனவும் நீதிமன்றம் தீர்ப்பு வழங்கியது.

பரமக்குடி நகரில், வியாபார மையங்கள் அமைந்துள்ள பகுதியில் சௌந்தரராஜப் பெருமாள் கோயில் அமைந்துள்ளது. கோயிலின் பரப்பு 1.289 சதுர அடி. முகப்பில் சுமார் அறுபது அடி உயரமுள்ள ஐந்துநிலை இராஜ கோபுரம் கண்ணுக்கு விருந்தாக உள்ளது. இக்கோபுரம் வடக்கு நோக்கியவாறு காட்சியளிக்கிறது. மூலவர் சந்நிதியின் மீது 11 அடி உயரமுள்ள விமானமும், பிற சந்நிதிகள் மீது சிறிய விமானங்களும் உள்ளன. இக்கோயிலில் இரு பிரகாரங்களும், கலையழகுமிக்க தூண்களுடன் கூடிய அலங்கார மண்டபமும் இடம் பெற்றுள்ளன. கருவறையில் மூலவர் சுந்தரராஜப் பெருமாள் நின்ற கோலத்தில், தேவியர்களுடன் சேவை சாதிக்கிறார். அழகிய பீதாம்பரமும், கண்ணைப் பறிக்கும் ஆபரணங்களும் மூலவரின் அழகைக் கூட்டுகின்றன. உற்சவர்களும் மூலவர்களைப் போலவே உருவமைப்புடன் காட்சி தருகின்றனர்.

அமர்ந்த கோலத்தில் தரிசனமளிக்கும் தாயாருக்கு விசாலமான பெரிய சந்நிதி உண்டு. தாயாரின் திருநாமம் பத்மவல்லியாகும். தனி சந்நிதிகளில் சக்கரத்தாழ்வார், வேணுகோபாலன், லக்ஷ்மி நரசிம்மர், மகாவிஷ்ணு, ஆஞ்சநேயர், ஆழ்வார்கள், ஆண்டாள் ஆகியோரைத் தரிசிக்கலாம். மூலவரின் சந்நிதியின் உட்பகுதிகளில் ஸ்ரீ ராம பட்டாபிஷேகம், சுந்தரராஜர் வைகையாற்றில் எழுந்தருளல், அலர்மேல் மங்கையுடன் திருவேங்கடவன், ஸ்ரீராகவேந்திரர். கிருஷ்ணர், சூரிய நாராயணர், சக்கரத்தாழ்வார், ஆண்டாள் திருக்கலியாணம், திருமகளின் பல்வேறு உருவங்கள், க்ஷீராப்திசயனர் ஆகியவற்றை வண்ண ஓவியங்களாக வடித்துள்ளனர். தாயாரின் சந்நிதி வெளிமண்டபத்திலும், வைணவ சமயத்திற்குரிய பல அழகிய சிற்பங்களைக் காணலாம். இக்கோயிலில் கருவறை, அர்த்தமண்டபம், திருமாளிகைப் பிரகாரம், கருட மண்டபம், அணிவெட்டு மண்டபம், பலிபீடம்,

துவஜஸ்தம்ப மண்டபம், சோபன மண்டபம் ஆகிய பகுதிகள் உள்ளன. வெளிப்புறத்தில் காவல் தெய்வமான கருப்பண்ணசாமி இடம் பெற்றுள்ளார். அஹோபில மடத்தின் ஜீயர் ஒருவர் இக்கோயிலின் மீது வடமொழி ஸ்லோகம் ஒன்றை இயற்றியுள்ளார்.

''ஏகத் கல்யாண ரான ஜவ
நளினே விஸ்வ மந்திரே
பரமாக்ய புரீநாத
ஸௌந்தர ராஜாய மங்களம்''

இக்கோயிலில் பஞ்சராத்கிர ஆகமமுறைப்படி 5 கால வழிபாடுகள் நாள்தோறும் நடைபெறுகின்றன. கோடைத் திருவிழா எனப்படும் சைத்ரோற்சவம் (10 நாட்கள்), வசந்தோற்சவம், ஆடி பிரம்மோற்சவம் (10 நாட்கள்) உறியடி, சூர்ணோற்சவம், நவராத்திரி, மார்கழி வைகுண்ட ஏகாதசி, தைலோற்சவம், தை கணு உற்சவம், கருடசேவை, பங்குனி திருக்கலியாணம் (5 நாட்கள்) ஆகிய விழாக்கள் இக்கோயிலில் விமரிசையாகக் கொண் டாடப்படுகின்றன. இக்கோயிலில் 1975ஆம் ஆண்டில் தாயார் சந்நிதி புதுப்பிக்கப்பட்டுக் குடமுழுக்கு நிறை வேறியது.

## சந்திரசேகர ஸ்வாமி திருக்கோயில்

சௌந்தரராஜப் பெருமாளின் திருக்கோயிலுக்கு மிக அருகாமையில் சந்திரசேகரஸ்வாமி ஆலயம் அமைந் துள்ளது. இக்கோயிலின் முகப்பில் இராஜகோபுரம் இல்லாத போதிலும் கோபுரவாயில் போன்ற அமைப்பை யுண்டாக்கியுள்ளனர். கருவறை, அர்த்த மண்டபம், மகாமண்டபம், சோபன மண்டபம், பலிபீடம், துவஜஸ்

தம்பம் ஆகிய உட்பகுதிகளுடனும். இரு பிரகாரங்க ளுடனும் கோயில் பொலிவான தோற்றம் கொண்டுள்ளது. சுவாமி சந்நிதி மீது தெய்வீகச் சிற்பங்களை உள்ளடக்கிய அழகிய விமானம் ஒன்பது அடி அளவு உயர்ந்து உள்ளது. அம்மன் சந்நிதி மீது சிறிய விமானம் அமைந்துள்ளது. இக்கோயிலின் பரப்பளவு 1 9 0 சதுரடியாகும்.

கருவறையில் மூலவரான சந்திரசேகரர் லிங்க வடிவில் காட்சியளிக்கிறார் இவர் ஒரு சுயம்புமூர்த்தி; தனி சந்நிதியில் விசாலாட்சி அம்மன் அருள்புரிகிறார். அம்ப லத்தில் காட்சியளிக்கும் நடராஜர், சிவகாமி ஆகியோரின் திருவுருவங்கள் வனப்புமிக்கன. தட்சிணாமூர்த்தி, துர்க்கை, பிட்சாடனர், சண்டேஸ்வரர், மகாகணபதி, நான்முகன், திருமகள், கலைமகள், பைரவர், நாயன் மார்கள், நவகிரகங்கள் ஆகிய திருவுருவங்கள் உட்புறத் தில் அமைந்துள்ளன வெளிப்பிரகாரத்தில் ஸ்ரீதேவி, பூதேவி சமேதரான மகாவிஷ்ணுவும் இடம் பெற்றிருப்பது இக்கோயிலை அமைத்தவர்களின் பரந்த நோக்கத்திற்கு உதாரணமாகும்.

உட்பகுதியிலுள்ள கங்காளநாதர் சந்நிதியில் பிள்ளைப்பேறு இல்லாத மகளிர் விசேட பிரார்த்தனை களை நடத்துவது உண்டு. கருத்தரித்தவுடன் இட்லி மாச்சை, கொழுக்கட்டை ஆகிய பொருட்களைப் படைத்து விசேட வழிபாடு நடத்துவர். பின்னர் இப்பிர சாதங்களை உறவினருடன் பகிர்ந்துண்பர், பிரசவத்திற் குப் பின்னர் புண்ணியாகவாசத்தன்று இறைவழிபாடு புரிவர். பைரவமூர்த்திக்கு அடியவர்கள் வடைமாலை சார்த்தி வழிபாடு புரிவது உண்டு. துர்க்கை சந்நிதியில் எலுமிச்சை பழமூடியில் தீபமேற்றி வழிபாடு புரியும் பெண்களுக்கு நன்மைகள் ஏற்படும் என்று நம்புகின்றனர்.

இக்கோயிலின் தோற்றம் பற்றிய வரலாறு உண்டு. பராசக்தி மஹிஷாசுரனை வதைத்தவுடன் அவரைப்

பிரம்மஹத்தி தோஷம் பற்றியது. தோஷம்
விட்டு நீங்கும் பொருட்டு அன்னை காளி இராமே
சென்று தீர்த்தமாடி வழிபட்டார். அங்கிருந்து
போது பிரம்புக்குடி என்ற இத்தலத்திலமை
தாமரைத் தடாகமும் அழகிய சோலையும், இ
சூழலும் அன்னையின் உள்ளத்தைக் கொள்ளை
டன. அவ்விடத்தில் ஒரு லிங்கத்தைக் கண்டு
வழிபட்டார். லிங்கத்திற்குக் காவலாக ை
அமர்த்தினார். இவ்விடத்தில் தேவர்களும், த
அரனாரை உளமார வணங்கித் துதித்தனர். கா
ளத்தாலும், திடீரென்று ஏற்பட்ட ஜலப்பிரபாவ
அவ்விடத்திலுள்ள சோலையும், தாமரைத் த
அழிந்து மணல் மேடாயிற்று. காசியிலிருந்து
திக்கு வந்த வேதியர்கள் சிலர் மண்ணில் புதையுண்
தெய்வ உருவங்களைக் கண்டனர். இவற்றை விச
சமேத சந்திரசேகரர் என உணர்ந்து அங்கு
லெழுப்பி முறைப்படி வழிபாடுகளைப் புரிந்தனர்.

சௌராஷ்டிரர்கள் இப்பகுதியில் குடியேறி
இக்கோயில் பிரசித்தி பெற்ற சோமநாதபுர ஆலய
போலவே அவர்களுக்குத் தென்பட்டது. இதனால்
குடிக்குத் தட்சிண சோமநாதபுரம் என்ற பெ
சூட்டினர். கோயிலின் பகுதிகளைப் புதுப்பித்து
கும் பணி 1917ஆம் ஆண்டில் துவங்கியது. 191
முதல் 1935 ஆம்ஆண்டு வரை இத்திருப்பணிகளில்
குடியில் உள்ள சௌராஷ்டிரர்கள் மட்டுமின்றி
போன்ற பிற பகுதிகளிலுள்ள இக்குலத்தோரும் பா
னர். இம் முயற்சிக்கு முத்தாய்ப்பாக 1935ம் ஆ
குடமுழுக்கு நிறைவேறியது. நாற்பது ஆண்டுக
பின்னர் உட்பகுதிகள் புதுப்பிக்கப்பட்டு 1975ஆம் ஆ
மறுபடியும் கும்பாபிஷேகம் நிறைவேறியது.

இக்கோயிலில் நாள்தோறும் காமிக ஆகம
ஏற்ப இரு கால வழிபாடுகள் நடைபெறுகி

சித்திரை மாதத்தில் 11 நாட்களுக்கு நடைபெறும் பிரம் மோற்சவமே பெரிய திருவிழாவாகும். நவராத்திரி, ஆருத்ரா தரிசனம், காலபைரவாஷ்டமி, தைப்பூசம், கார்த்திகை தீபம் ஆகிய விழாக்களும் இங்கு நல்ல முறையில் கொண்டாடப்படுகின்றன. இங்கு பல வகையான மரவாகனங்கள் உபயோகத்திலுள்ளன.

**சுற்றுக் கோயில்கள்:-** வண்டியூர் எனப்படும் காகா தோப்பு என்ற பகுதியிலுள்ள சுந்தரராஜப் பெருமாள் கோயிலும், கருப்பண்ணசாமி கோயிலும் குறிப்பிடத் தக்கன. சித்திரைத் திருவிழாவின்போது மஞ்சள் நீரைப் பீச்சாங்குழல் மூலம் கள்ளழகருக்கு வர்ஷித்து நிவேதனம் செய்வதுண்டு. கைலாய ஊரணிக் கரையிலுள்ள குமார சுப்பிரமணியர் கோயிலில் வழிபாடுகள் சிறப்பாக நடைபெறுகின்றன. திருப்பாவை, திருவெம்பாவை, திருமறைகள் ஆகியனவற்றைக் கற்றுக் கொடுப்பதுடன், பாவை மகாநாடு போன்ற சமூகப் பணிகளும் இங்கு செவ்வனே நடைபெறுகின்றன. மேலச்சத்திரம் என்ற பகுதியிலுள்ள திரௌபதியம்மன் கோயிலில் மகாபாரதக் கதையைப் பரம்பரை பரம்பரையாக ஜனரஞ்சகமாகக் கூறும் வழக்கம் தொடர்ந்து நடைபெறுகிறது.

# 14. பள்ளிகொண்டா

(வேலூர்-அம்பேத்கார் மாவட்டம்)

## உத்தர ரங்கநாதப் பெருமாள் திருக்கோயில்

"உடுத்துக் களைத்த பீதக ஆடை உடுத்து கலந்தது
உண்டு
தொடுத்த துழாய்மலர் சூடிக் களைந்த சூடும்
இத்தொண்டர்களோம்
விடுத்த திசைக் கருமம் திருத்தித் திருவோணத்
திருவிழாவில்
படுத்த பைந்நாகனைப் பள்ளிக் கொண்டானுக்கே
பல்லாண்டு கூறுதுமே
(பெரியாழ்வார்)

ஆழ்வார்களின் அமுதகானத்தில் பள்ளி கொண்ட பெருமாளைப் போற்றும் பாடல்கள் பல உள்ளபோதிலும், பள்ளி கொண்டானுக்குப் பல்லாண்டு கூறும் பாடல் இது ஒன்றே உள்ளது.

உயிருள்ள ஜீவன்கள் அனைத்தும், குறிப்பாக மனிதர் கள் நின்ற,இருத்த (அமர்ந்த) அல்லது படுத்த, நிலைகளுள் ஏதாவது ஒரு நிலையில் இருந்தாக வேண்டும் எந்த நிலையில் இருந்தாலும் பரந்தாமனின் நினைவு என்றும்

நிலைக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் அப்பரம் பொருளை இந்த மூன்று நிலைகளில் நிறுத்தியே நமது ஆன்றோர்கள் வழிபட்டுள்ளனர் இறைவன் தனது பேரருளால் விக்கிரகத்தில் அவதரித்து நிற்கும் நிலையையே அர்ச்சாவதாரம் என்று கருதுவர். திவ்விய தேசங்களில் அர்ச்சாவதார ரூபத்தில் இம்மூன்று நிலைகளிலுமே திருமால் காட்சியளிக்கிறார். இவற்றுள் சுமார் எழுபது தலங்களில் நின்ற கோலத்திலும், முப்பது தலங்களில் கிடந்த கோலத்திலும் அருள்புரிகிறார். திவ்விய தேசங்கள் தவிர வேறு முப்பதுக்கும் மேற்பட்ட திருத்தலங்களிலும் பள்ளி கொண்ட பெருமாளைக் காணலாம்.

அரங்கன் அரவணையில் துயிலுறும் தத்துவம் மேன்மை மிகுந்தது. அறிதுயில், தூங்காத தூக்கம், நினைவில் சுழுத்தி, யோக நித்திரை என்றெல்லாம் அதனைச் சிறப்பிப்பார்கள். மானுடர்களின் உறக்கத்தினின்று இது வேறுபட்டது. உலகம் பற்றிய உணர்வின்றி உலகின்பத் தொடர்பற்ற நிலையையே உறக்கமாகக் கருதுவர். அரங்கனோ இந்த நிலைக்கு முற்றிலும் மாறுபட்டவன். அரங்கத்தில் அவர் சயனித்துள்ள போதும் எப்போதும் அவர் அரங்கத்தைச் சார்ந்ததில்லை. பேரறிவு வடிவாகிய பரமன் உறங்குவது போல் காட்சியளித்த போதிலும் உலகம் தோன்றுதல், நிலை பெறுதல், நீங்குதல் ஆகியனவற்றை முடிவில்லா விளையாட்டாக நடத்திக் கொண்டிருக்கிறார். நமது உடலும் அவரது அரங்கமாகும்; அனைத்திலும் பள்ளி கொண்டுள்ள மாயவன் நமது உடலிலும் பள்ளி கொண்டுள்ளார். அவனை உணர்ந்து அருளை நாடும் பக்தர்களுக்கே அவனருள் கிட்டும். பாற்கடல், ஆலிலை ஆகியவற்றிலும் பள்ளி கொண்டுள்ள திருமாலின் இக்கோலத்தை ஆழ்வார்கள் அதிகம் விரும்பியதால் அவர்கள் ராமன், கிருஷ்ணன் ஆகிய அவதாரங்களையும் பள்ளி கொண்ட கோலத்திலேயே கற்பனை செய்து மகிழ்ந்தனர்.

இத்தகைய பெருமைகளையுடைய பள்ளிகொண்ட கோலத்தில் பரந்தாமன் காட்சியளிக்கும் தலங்களுள் பள்ளிகொண்டாவும் ஒன்று. பல தலங்களில் அவர் பள்ளி கொண்டுள்ள போதிலும் இத்தலத்திற்கு மட்டுமே பள்ளி கொண்டா என்ற பெயர் ஏற்பட்டுள்ளது. ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்படாத போதிலும் இத்திருத்தலம் புராணச் சிறப்பும் வரலாற்றுப் பெருமையும் மிக்கது. வேலூரிலிருந்து பெங்களூர் செல்லும் நெடுஞ்சாலையில் சிறிது தூரம் கடந்தவுடன் பிரிந்து செல்லும் கிளைச் சாலையில் 15 கி. மீ. சென்றால் இக்கோயிலையடைய லாம்.

**தலவரலாறு:** காஞ்சி மகாத்மீயத்தின் இரண்டாம் அத்தியாயத்திலும், அஸ்திகிரி மகாத்மீயத்திலும் உத்தர ரங்கத்தின் தலபுராணம் இடம் பெற்றுள்ளது. நாரதரும், பிருகு முனிவரும் இத்தலத்தின் பெருமையைப் போற்று கின்றனர். திருமகள், கலைமகள் ஆகிய இருவருக்கும் இடையே எவர் பெரியவர் என்ற சர்ச்சை ஏற்பட்டதாம். தங்களது சச்சரவைத் தீர்க்க இருவரும் நான்முகனின் துணையை நாடினர். இருவருடைய வாதங்களையும், கேட்ட பின்னர் நான்முகன் இருவரில் திருமகளே உயர்ந் தவள் என்று தீர்ப்பளித்தார். இத்தீர்ப்பு பாரபட்சமானது என்று கருதிய கலைவாணி அதனை ஏற்க மறுத்தாள். சீற்றம் மிக்கவராய் வானுலகத்தை விடுத்துப் பூவுல கிலுள்ள சிறிய பர்வதமான நந்திமலையில் சிறிது காலம் தங்கினார்.

இக்காலத்தில் சத்தியவிரத க்ஷேத்திரமான காஞ்சியில் நான்முகன் மாபெரும் வேள்வி ஒன்றை நடத்தத் திட்ட மிட்டார். யாகத்தில் பங்கேற்குமாறு சரஸ்வதிக்கு அழைப்பு விடப்பட்டது. அதனைக் கலைமகள் ஏற்க மறுத்ததால், சாவித்திரியை அதே ஸ்தானத்தில் இடம்

பெறச் செய்து யாகத்தை நான்முகன் நடத்தலானார். இதனால் வெகுண்ட சரஸ்வதி ஆற்றுவடிவில் தோன்றிக் கடும் வெள்ளப் பெருக்கால் யாகத்தை அழிக்க முயற்சி செய்தார். வெள்ளப் பெருக்கைத் தடுக்கத் திருமாலின் உதவியை (நான்முகன்) நாடினார். இதே தருணத்தில் அம்பரீஷன் என்ற ராஜரிஷி, மகாவிஷ்ணுவின் தரிசனத்தை வேண்டிக் கடும் தவம் புரிந்து வந்தார். நான்முகனின் கோரிக்கையை நிறைவேற்றவும், அம்பரீஷனின் தவத்திற்கு உரிய பலனை அளிக்கவும் திருமால் முடிவு செய்தார். வெள்ளப் பெருக்கெடுத்து வரும் பாலாற்றின் குறுக்கே உரகப்படத்தின் மீது மூன்று இடங்களில் பள்ளி கொண்டார். நான்முகனின் தவம் இனிதே நிறைவுற்றது. இவ்வாறு திருமால் பள்ளி கொண்ட தலங்களுள் முதலாவது தலம் பள்ளிகொண்டா; இரண்டாவது தலம் காவேரிப்பாக்கத்திற்கு அருகேயுள்ள திருப்பாற்கடல்; மூன்றாவது திருத்தலம் காஞ்சியிலுள்ள யதோத்தகாரி திருக்கோயில். யாகம் நிறைவுற்றவுடன் மகாவிஷ்ணு காஞ்சி அத்திகிரியில் வரதராஜப் பெருமாளாகக் கோலம் கொண்டார்.

பாலாற்றின் குறுக்கே பள்ளிகொண்ட மகாவிஷ்ணு அம்பரீஷ முனிவருக்கு அருளினார். அம்பரீஷன் விருப்பப்படியே அதே இடத்தில் பள்ளி கொண்ட கோலத்தில் நிரந்தரமாக எழுந்தருளினார். மனநிறைவுடன் தவத்தை முடித்த நான்முகன் அவ்விடத்தில் ஆலயம் ஒன்றை எழுப்பி அங்கு வழிபாடுகளும், விழாக்களும் நடைபெற வழிகோலினான். அங்கு வைகாசி மாதத்தில் பத்து நாட்களுக்குக் கோலாகலமாகப் பிரம்மோற்சவம் நடத்தினார். காஞ்சி யதோத்தகாரி சந்நிதியில் சயனித்துள்ள திருமாலுக்கு அருகே, அவரால் ஆட்கொள்ளப் பெற்ற சரஸ்வதியும் இடம் பெற்றுள்ளார்.

பள்ளிகொண்டாவிலுள்ள கோயில் பாலாற்றின் விரிந்த மணற்பரப்பின் ஓரமாகத் தென்னந் தோப்புகளுக்கு

இடையே, சுமார் 85 செண்ட் பரப்பில் அமைந்துள்ளது. கோயிலின் கிழக்கு வாயிலில் ஏழு கலசங்களுடன் கூடிய அழகிய ஐந்து நிலை கோபுரம் அணி செய்கிறது. மேற்கு வாயிலிலுள்ள கோபுரம் உபயோகத்திலில்லை. கோயிலினுள் மகாமண்டபம், உள் மண்டபம் ஆகியனவும், ஒவ்வொரு முக்கிய சந்நிதிக்கும் முன்னர் ஒரு சிறு மண்டபமும் உள்ளன. இராஜ கோபுரத்தைக் கடந்து உள்ளே வலம் வந்தால் தென்கிழக்குப் பகுதியில் தனி சந்நிதியில் மேற்கு நோக்கியவாறு கோலம் கொண்டுள்ள இராமானுஜரைக் காணலாம். வடகிழக்குக் கோடியில் தெற்கு நோக்கியவாறு மணவாள மாமுனிகள் கோலம் கொண்டுள்ளார்.

தெற்குப் பிரகாரம் வழியாக மேற்கு நோக்கிச் சென்றால் அரங்கநாயகித் தாயாரின் தனி சந்நிதியை அடையலாம். இந்த சந்நிதியில் உற்சவரும் இடம் பெற்றுள்ளார். தென்மேற்குக் கோடியிலுள்ள தனி சந்நிதியில் இராமச்சந்திரப் பெருமான், சீதை, இலக்குவன் ஆஞ்சநேயர் ஆகியோர் காட்சி தருகின்றனர். இதே சந்நிதியில் குலசேகராழ்வாரையும் கண்டு களிக்கலாம். மேற்குப் பிரகாரத்தின் மையத்தில் கண்ணன் இரு கரங்களிலும் வெண்ணெய் ஏந்தியவாறு நடனமாடும் கோலத்தில், உற்சவருடன் தோற்றமளிக்கிறார். வடமேற்கு மூலையில் சூடிக்கொடுத்த சுடர்க்கொடியான ஆண்டாளின் தரிசனத்தையும் பெறலாம். இச்சந்நிதிக்குக் கிழக்கில் திருமாலின் திருப்பாதங்கள் பூமியில் அமைந்துள்ளன

வடக்குப் பிரகாரத்தின் கிழக்குப் பகுதியில் ஆஞ்சநேயரின் இரு திருவுருவங்கள் இடம் பெற்றுள்ளன. ஆனந்த தீர்த்தர், பத்ரி நோக்கி யாத்திரை மேற்கொண்ட போது இவ்விடத்திற்கருகே எதிரிகளை வாதத்தில் வெற்றி கொண்டார்ராம். இவ்வெற்றியின் நினைவாகச் சாலிவாகன சகாப்தம் 1046ஆம் ஆண்டில் ஆஞ்சநேயரின் திருமேனிகளை இங்கு பிரதிஷ்டை செய்து

தாகவும், அவ்வெற்றியின் அடையாளமாக அருகே வியாச ஸ்தம்பம் நிறுவப்பட்டதாகவும் கூறுவர். ஆஞ்சநேயரின் ஒரு திருவுருவம் அடக்கத்தை வெளிப்படுத்துவது போல வும், மற்றொன்று வீரத்தைப் புலப்படுத்துவது போலவும் அமைந்துள்ளனவாம்.

பிரகாரத்தை வலம் வந்தவுடன் பலிபீடம், கொடிமரம், ஆகியவற்றை வணங்கியவாறு உட்கோபிலையடையலாம் அருகே யாகசாலையும் மடைப்பள்ளியும் உள்ளன. கூப்பிய கரத்துடன் மூலஸ்தானத்தை நோக்கியவாறு தோன்றும் கருடாழ்வாரைத் தொழுதவாறு முன் சென்றால் மணிக் கதவம் தோன்றும். கம்பீரமாகத் தோற்றமளிக்கும் துவாரபாலகர்களுக்கு மேலே தும்பிகை ஆழ்வாரைக் காண லாம். மூலஸ்தானத்தில் அரங்கநாதர் சயனக் கோலத் தில் அருளாட்சி புரிகிறார். சேடன் மீது தெற்கே தலை முடியை வைத்தவாறும், வடக்குப்புறம் திருவடிகளை நீட்டியவாறும், கிழக்கு நோக்கியவாறு தோன்றுகிறார். இந்த அலங்காரப் பிரியர் சங்கு, சக்கரங்களோடு கௌஸ் துபம், வனமாலை, கீரீடமகுடம் குண்டலங்கள், திருமண் காப்பு, வேட்டி, உத்தரீயம் ஆகியவற்றை அணிந்தவாறு திவ்விய தரிசனம் அளிக்கிறார் திருவுந்தியிலிருந்து நான்முகன் காட்சியளிக்கிறார் வலது புறம் ஸ்ரீதேவி கோலம் கொண்டுள்ளார் திருவடிகளுக்குச் சேவை செய்யும் நிலையில் பூதேவி காட்சி தருகிறார். மூலவருக்கு முன்னர் ஸ்ரீதேவி, பூதேவி ஆகியோருடன் உற்சவர் வடிவில் அரங்கநாதர் இடம் பெற்றுள்ளார்.

கருவறைக்கு வெளியே சிறிய தோற்றமுடைய கஸ்தூரிரங்கப் பெருமானைக் காணலாம். இப்பெருமான் இங்கு கோயில் கொண்ட வரலாறு சுவையானது. சில நூற்றாண்டுகளுக்கு முன்னர் முகமதியப் படைகள் கோயில் களிலுள்ள உற்சவத் திருமேனிகளைக் கொள்ளையடிப் பதுடன், விக்கிரகங்களைச் சேதப்படுத்துவதையே தொழி லாகக் கொண்டிருந்தன பள்ளி கொண்டாவில் முகமதியர் கள் நுழைவதையறிந்த ஆலய நிர்வாகத்தினர் ஒரு சிறந்த

யுக்தியைக் கையாண்டனர். கருவறையின் நுழைவாயில் முன்பு சுவரெழுப்பி அதனை மூடினர். பின்னர் அரங்க நாதரின் சிறிய உருவத்தை அவ்விடத்தில் நிறுவினர். கோயிலைச் சூறையாட வந்த முகமதியர்கள் 'சோட்டா ரங்கர்' என்று அழைக்கப்படும் இச்சிறிய உருவத்தைக் கண்டவுடன் அலட்சியமாக அதனைப் பாழ்படுத்தாமல் சென்று விட்டனராம். இவ்வாறு மூலவரை முகமதியர் களிடமிருந்து பாதுகாத்த இச்சிறு உருவினரையே கஸ்தூரி ரங்கர் என அழைக்கின்றனர்.

இங்கு வடக்குப் பிரகாரத்திலமைந்துள்ள பாதிரி மரமே, தலவிருட்சமாகக் கருதப்படுகிறது. அரங்க நாதரின் கருவறையை அணி செய்யும் விமானம் மூன்று கலசங்களுடன் நீளவட்டமாகக் காட்சியளிக்கிறது. இது பிரணவ வடிவமாக அமைந்துள்ளதால் சைவ, வைணவ ஒற்றுமைக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது. இது போன்ற பிரணவ விமானம் திருவரங்கம், பள்ளி கொண்டா ஆகிய இரு தலங்களில் மட்டுமே காணக்கூடிய அபூர்வமான அமைப்பாகும்

கோபுரத்திற்குத் தெற்கேயுள்ள நான்கு கால் திரு வந்திக் காப்பு மண்டபம் சிற்ப வேலைப்பாடுகளைப் பெற்றுள்ளது. வியாசபுஷ்கர்ணியின் மேற்கரையிலுள்ள கண்ணன் கோயில் தூண்களில் 8 வகையான நரசிம்மரின் உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இவற்றை அஷ்ட நரசிம்மர்கள் என்று சிறப்பிப்பர். கோபுரவாயிலில் மகா விஷ்ணுவின் பலவகையான சிற்பங்களைக் காணலாம். தாயார் சந்நிதியில் 108 திருப்பதிகள் பற்றிய குறிப்புகள் தெலுங்கு மொழியில் எழுதப்பட்டுள்ளன. இன்று அவை அழிந்துவிட்டதால் அவ்வெழுத்துக்களைப் படிப்பது கடின மாகும்.

இக்கோயிலில் இடம் பெற்றுள்ள மூன்று தெய்வத் திருவுருவங்கள் கலா ரசிகர்கள் அவசியம் காண வேண்டி யவையாகும். இராமர் சந்நிதியில் காட்சியளிக்கும்

இராமர், லக்ஷ்மணர், சீதை, ஆஞ்சநேயர் ஆகிய திரு வுருவங்கள் எழில் மிக்கன. சுமார் ஒரு மீட்டர் உயர முள்ள இவ்வுருவங்கள் பேரழகுடன் மிளிர்கின்றன. ஆண்டாளின் எழிலுருவமும் கண்கவரும் தன்மை யுடையது. ஒரு கையில் தாமரை மலரை ஏந்தியும் மற்றொரு கரத்தைக் கீழே தொங்கவிட்டவாறும் கோலம் கொண்டுள்ள இப்பாவையின் உடலுறுப்புக்களின் அசை வும் ஆடை, அணிகலன்களின் அமைப்பும் துல்லியமாகக் காட்டப்பட்டுள்ளன. இவை அனைத்தையும் விஞ்சுமாறு நவநீதக் கிருஷ்ணனின் சிற்பம் அமைந்துள்ளது. கையில் வெண்ணெய் உருண்டையைப் பிடித்தவாறு தாண்டவக் கோலத்தில் தோன்றும் இப்பெருமானின் உயிரோவி யத்தை வருணிக்க வார்த்தைகளே இல்லை. அவரது மேனியை அலங்கரிக்கும் மணிமாலை, சதங்கை ஆகியன வும் தத்ரூபமாகச் செதுக்கப்பட்டுள்ளன.

இக் கோயிலின் பல பகுதிகளிலிருந்து 13 கல்வெட் டுக்கள் (456 முதல் 468 வரை. 1925ஆம் ஆண்டு) படி யெடுக்கப்பட்டுள்ளன. இவ்வூர் நந்திவர்மச் சதுர்வேதி மங்கலம் என்று ஆதியில் வழங்கப்பட்டது. சோழமன்னன் விக்கிரமசோழன் காலத்தில் அவருடைய அலுவல் அதி காரியாகப் பணியாற்றிய குலசேகர சம்புவராயன் காலத் தில் அளிக்கப்பட்ட நிலதானங்கள் பற்றிய தகவல்களை ஏழு கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. கோயில் நிலங்களி லிருந்து பெறப்படும் வரிப்பணத்தை மேதமிச தேவனார் என்பவருக்கு அளித்தனர். அவ்வரிப்பணத்தைக்கொண்டு கோயிலில் வழிபாடுகள் நடத்துமாறு அவருக்குக் கட்டளை இடப்பட்டது. கிழவிச்சூர் மக்களுக்கு அச்சம்புவராயர் பிறப்பித்த ஆணையின்படி நிலங்களின் வரிகள் சில ரத்து செய்யப்பட்டன. கோயிலில் வழிபாடுகளுக்குச் சில சலுகை கள் அளிக்கப்பட்டன. விக்கிரம சோழனின் பதினைந்தாம் ஆட்சியாண்டில் 10 வேலி நிலம் இறையிலியாகக் கோயி லுக்கு வழங்கப்பட்டது. இக்கோயிலில் பூசைகள் நடை

பெறுவதற்காகச் சில வரிகளைத் தள்ளுபடி செய்வதற்கான ஆணை தகடூர் நாடாழ்வான்பட்டு ஊர் மக்களுக்குப் பிறப்பிக்கப்பட்டது. இக்கோயிலின் தாயத்தாருக்கு இங்கு வழிபாடுகள் நடத்தும் உரிமையும், வாடகையின்றி ஒரு இல்லத்தில் தங்கும் சலுகையும் வழங்கப்பட்டன.

இறைவி தாசய்யன் என்பவனின் நன்மையை முன்னிட்டுச் சில வரிகள் ரத்து செய்யப்பட்டன. ஈஸ்வர காளிங்கன் என்பவரின் நன்மையை உத்தேசித்து நில தானம் அளிக்கப்பட்டது. கோவிஞ்சயன், திருப்போகி பட்டன், நகராழ்வான் என்ற மூவரும் தனித்தனியாக அளித்த கொடைகள் பற்றிய விவரங்கள் உள்ளன. ஒரு தூணில் நகராழ்வானின் திருவுருவமும் இடம் பெற்றுள்ளது போலும். விஜயநகர வேந்தரான புக்கராயரின் ஆட்சியில் இக்கோயிலில் விளக்கு ஏற்றவும், வழிபாடுகள் இயற்றவும் வீரராக்கிய நல்லூரிலுள்ள மூன்று வேலி நிலத்திலிருந்து வரி விதிக்கப்பட்டது. கல்வெட்டுக்களில் இவ்வூர் நந்திவர்மசதுர்வேதி மங்கலம் என்றும், 'விச்சூர்' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. இங்குள்ள இறைவர் 'விச்சூர் பள்ளி கொண்டருளிய பெருமான்' என்றே அழைக்கப்படுகிறார்.

காஞ்சி மகாத்மீயம் கழுகரசனான சம்பாதி, இத்தலத்துடன் தொடர்பு கொண்டிருந்ததாகக் கூறுகிறது. இக்கோயிலுக்கு 1½ கி. மீ. தொலைவிலுள்ள பீஜசலம் (விட்டுமலை அல்லது உச்சிக்கழ்மலை) என்ற மலை மீது சம்பாதி தவமியற்றினாராம். இறையருளால் தாமரை மலரில் ஒரு பெண்மகவு உதித்தது. செங்கமலவல்லி என்று பெயரிட்டு அதனைப் பிரியத்துடன் வளர்த்து உரிய காலத்தில் அரங்கநாதருக்குச் சம்பாதி மணமுடித்து வைத்தாராம். சம்பாதி தவமியற்றிய இம்மலையைச் சுற்றி ஆண்டுக்கு ஒருமுறை உற்சவர் வலம் வருவதுண்டு.

இராமரும் இத்தலத்தில் பெருமாளை வழிபட்டு ஆசி பெற்றதாக ஒரு ஐதீகம் உள்ளது. இதற்கேற்ப தைப் பூசத்தன்று இராமரின் உற்சவத்திருவுருவம் பீஜசல மலையைச் சுற்றி எடுத்துச் செல்லப்படும். அப்போது அவருக்கு ரூ. 60/- காணிக்கையாக வழங்கப்படுகிறது.

பள்ளிகொண்டா சிறந்த பிரார்த்தனைத் தலமாக விளங்குகிறது. இக்கோயிலில் பல திருமணங்கள் நடை பெறுகின்றன. இங்கு நாள்தோறும் இரு கால வழிபாடு முறைப்படிப்பட்டர்களால் நடத்தி வைக்கப்படுகிறது. வைசாகித் திங்களில் பிரம்மோற்சவமும், கருடசேவையும் நடைபெறுகின்றன. பங்குனி உத்திரத்தின்போது திருக் கலியாண விழாவும், சித்திரை ஆற்றிற்கு எழுந்தருளும் நிகழ்ச்சியும் நடைபெறும். இவை தவிர ஆடிப்பூரம், நவராத்திரி, வைகுண்ட ஏகாதசி, இராமநவமி, கிருஷ்ண ஜெயந்தி ஆகிய விழாக்கள் விமரிசையாக நடைபெறுகின் றன. கிருஷ்ண ஜெயந்தியை முன்னிட்டு விசேஷ அபிஷேக, ஆராதனைகளும், உலாவும் நடைபெறுகின்றன. நவராத் திரியின் போது வெள்ளிக்கிழமைகளில் ஆஞ்சநேயருக்கு விசேஷ வழிபாடு நிகழும். இக்கோயில் இந்து அறநிலைய ஆட்சித் துறையின் நிர்வாகத்தில் இயங்கி வருகிறது. ஆலயத்திற்கு உரியனவாகச் சொற்ப சொத்துக்களே (தோப்பு, 12 செண்ட் நன்செய் நிலம்) உள்ளன. சிங்கம், அன்னம், கருடன், நாகம், யானை, குதிரை ஆகிய வாகனங்களும், ஒரு பல்லக்கும் உண்டு.

இப்பதியில் பாலாறு, கஜேந்திர நதி, கௌடிண்ய நதி ஆகிய மூன்று நதிகளும் சங்கமமாவதால் இதனைத் திரு முக்கூடல் அல்லது திரிவேணி சங்கமம் என அழைப்பர். கோயிலுக்கருகேயுள்ள வியாச புஷ்கர்ணி பிரசித்தி வாய்ந்தது. திரேதாயுகத்தில் இந்திரனும், இந்திராணி யும் கானகத்தில் வலம் வரும்போது கிளி வடிவில்

சஞ்சரித்து வந்த இருஅசுரர்களை இந்திரன் வதைத்தான் தேவேந்திரனைப் பிரம்மஹத்தி தோஷம் பீடித்தது. காசிப முனிவரின் அறிவுரையின் பேரில் வியாச புஷ்கர்ணியில் நீராடிய இந்திரனுக்குச் சாப விமோசனம் கிடைத்தது.

''தனமாதர் அம்சொற்குதலைப் புதல்வர் தரணி இல்லம்
தனமாதரம் செய்யும் வாழ்வு அஞ்சியே தஞ்சம் நீயென போந்
தனம் ஆதரங்கிக்க வெற்பு எடுத்தாய் கண் அனந்த சிங்கா
தனமா ரங்கம் உள்ளாய அரங்கா முக்தி தந்தருளே''

(திவ்வியகவி பிள்ளைப் பெருமாள் அய்யங்கார்.
திருஅரங்கத்துமாலை)

# 15. மணக்குள விநாயகர் திருக்கோயில்

## பாண்டிச்சேரி (புதுவை மாநிலம்)

அஞ்சக் கரத்தின் அரும் பொருள்தன்னை
நெஞ்சக்கருத்தின் நிலையறிவித்து
தத்துவநிலையை தந்தெ னையாண்ட
வித்தக விநாயக விரை கழல் சரணே
(ஔவையார் அருளிய விநாயகர் அகவல்)

இந்து மதத்தில் ஆறுவகைக் கூறுகளுள் கணபதியை முழுமுதற் கடவுளாகக் கொண்டு ஒழுகுவது காணபத்தியம் எனப்படும். எக்காரியத்தையும் துவங்குமுன்னர் விநாயகரை வணங்கி ஆசி பெறுவது தொன்று தொட்டு நடைபெற்று வரும் வழக்கமாகும். தர்ம சூக்ஷ்மத்தை உணர்ந்து தனது பெற்றோரை வழிபட்டதன் மூலம் இவ்வுலகையே வலம் தந்த தகுதியைப் பெற்று உலகிற்கு வழிகாட்டிய விக்னேஸ்வரனையே அனைவரும் வழிபட்டு இஷ்டசித்தி பெற வேண்டுமென அரனார் வரமளித்தார். மக்களால் பெரிதும் விரும்பித் தொழப்படுபவரும், அனைவருக்கும் எளியவராகவும் திகழும் விநாயகர் தலைவர்களுக்கெல்லாம் தலைவராகவும், தமக்கு ஒரு தலைவரும் இல்லாதவராகவும் திகழ்கிறார்.

அனைத்துலகிற்கும் முழு முதலாக விளங்கிய ஈசனை வழிபடுவதற்காக ஓங்காரம் என்ற மந்திரத்தைக் கண்டு அறிந்தனர். அனைத்து எழுத்துக்களின் ஓசைகட்கும் முதலாவதாக இயல்பாகத் தோன்றிய 'ஓ' என்ற ஒலியே ஓங்காரம் எனப்படும். இதனையே வடமொழி பிரணவம் என்றுகுறிப்பிடும். ஓங்கார ஒலியை அ + உ + ம் என்று பிரிக்கலாம். இவை படைத்தல், காத்தல் அழித்தல் என்ற முத்தொழில்களையுணர்த்தும். கணபதி ஓங்கார மந்திர சொரூபியாக விளங்குவதையே அவரது யானை முகத்திரு வுருவம் உணர்த்தும்; ஞானவடிவான அவரது திருவுருவம் பிரணவத்தையுணர்த்தும்! யானை முகத்தையும், ஞாயிறு, திங்கள், தீ என்ற ஒளிப் பொருட்களையுணர்த்தும் முக்கண் களையும், படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்து தொழில்களை யுணர்த்தும் ஐங் கரங்களையும் பெற்றுள்ளார். ஐந்து கரங்களில் மோதகம், நீர்க்கலசம், தந்தம், அங்குசம், பாசம் ஆகிய ஆயுதங்கள் மிளிர்கின்றன.

இத்தகைய பெருமைகளையுடைய விநாயகருக்கு ஆலயங்கள் இல்லாத சிற்றூரே இல்லை. பட்டி தொட்டி களிலும், மூலை முடுக்குகளிலும், சாலை சந்திகளிலும், ஆற்றங்கரைகளிலும், மரத்தடியிலும் இவரைப் பிரதிஷ்டை செய்துள்ளனா. அனைத்து ஆலயங்களிலும் இவருக்கு இடமுண்டு. வைணவ ஆலயங்களிலும் சேனை மு லியார் விஷ்வக்சேனர், தும்பிக்கை ஆழ்வார் ஆகிய பெயர்களுடன் இவர் காட்சியளிக்கிறார். விநாயகரே மூலமூர்த்தியாக அருள்புரியும் திருத்தலங்களுள் புதுச்சேரி நகரில் அமைந் துள்ள மணக்குள விநாயகர் ஆலயமும் ஒன்று.

புதுச்சேரி மிகவும் பழைமை வாய்ந்த பகுதிகளுள் ஒன்று கிரேக்க வானசாஸ்திர வல்லுனரான டாலமி இப்பகு தியைப் பொதுக்கே என்று குறிப்பிடுகிறார். பெரிப்ளுஸ், டாலமி ஆகிய மேனாட்டவரின் குறிப்புக்களிலும இப்

பகுதி பற்றிய தகவல்கள் உள்ளன. அரிக்கமேடு போன்ற இடங்களில் நடத்தப்பட்ட புதைபொருள் ஆராய்ச்சிகள் மூலம் ரோமாபுரி, சீனம், அரேபியா போன்ற நாடுகளைச் சேர்ந்த நர்ணயங்கள் கிடைத்துள்ளன. இங்கு யவனர் களின் குடியிருப்புகள் இருந்ததற்கான சான்றுகள் கிடைத் துள்ளன. இப்பகுதியில் இடியுண்ட சோழர் கோயில்களில் கிடைத்துள்ள கல்வெட்டுக்களும் பிரெஞ்சு அதிகாரிகளின் ஆட்சியின்போது கிடைத்துள்ள ஆவணங்களும், ஆனந்த ரங்கம் பிள்ளையவர்களின் நாட்குறிப்பு, ஏடுகள் ஆகியன வும் பல வரலாற்றுச் செய்திகளையளிக்கின்றன. தற்போது புதுச்சேரி பகுதியில் சுமார் 365 கோயில்கள் உள்ளன. அவற்றுள் 290 கோயில்கள் அரசின் மேற்பார்வையிலும், 90 ஆலயங்கள் தனியாரின் பராமரிப்பிலும் உள்ளன, இவற்றுள் விநாயகர் ஆலயங்களே அதிகம் உள்ளன. கின்றன.

பதினேழு, பதினெட்டு நூற்றாண்டுகளில் விநாயகர் கோயிலுக்கு அருகே ஒரு திருக்குளம் அமைந்திருந்ததாம், இதிலுள்ள நீரையே விநாயகரின் திருமஞ்சனத்திற்குப் பயன்படுத்தி வந்தனர். நீர்ப்பஞ்சம் ஏற்பட்ட காலத்தில் முழுமையாக வறண்டு போகாமல் இங்கு நீர் சுரந்து கொண்டேயிருக்கும். புதுவைக்கு வரும் கப்பல்கள் தங்க ளுக்கு வேண்டியகுடி நீரைஇத்தீர்த்தத்திலிருந்து எடுத்துச் செல்வது வழக்கம். இதில் நீர் வற்றியபோதும் அருகி லுள்ள பூங்காவின் பக்கத்திலுள்ள கிணற்றிலிருந்து நீரை எடுத்துக் கொள்வர். அக்கிணற்றில் நீர் வற்றுவதற்கு முன்னர் தீர்த்தத்தில் மறுபடி நீர் சுரக்கத் துவங்கிவிடும். இவ்வாறு இம்மணற்குளங்களில் நீர் சுரப்பதும், வடிவது மாக இருந்ததால், இப்பகுதிக்கு மணற்குளம் என்ற பெயர் ஏற்பட்டது. இவ்விடத்தில் கோயில் கொண்ட விக்னராஜரை மணக்குள விநாயகர் என்றே அழைத்தனர். பிரெஞ்சு அரசின் துபாஷியாகப் பணியாற்றிய ஆனந்த ரங்கம் பிள்ளையவர்களின் நாட்குறிப்பின் மூலம் இத்தக

வல்களை அறியலர்ம். தற்காலத்தில் அக்குளம் இல்லை; காலப்போக்கில் அது தூர்ந்து போயிருக்கக் கூடும்.

இக்கோயில் பதினாறாம் நூற்றாண்டில் தோன்றி யிருக்கக் கூடும். புதுவையில் பழமையான கோயில் களைக் குறிப்பிடுகையில் வரலாற்று ஆசிரியர்கள் கடற் கரைக்கு அருகே ஒரு கோயில் இருந்ததாகத் தெரிவிக் கின்றனர். அக்கோயில் மணக்குள விநாயகர் கோயி லாகத்தான் இருந்திருக்க வேண்டும். விக்னேஸ்தாபன முறைப்படிச் சமுத்திரக் கரையில் பிரதிஷ்டை செய்யப் படும் விநாயகரை விக்னேஸ்தாபன முறைப்படிச் சமுத் திரக்கரையில் பிரதிஷ்டை செய்யப்படும் விநாயகரைப் 'புவனேச கணபதி' என்று குறிப்பிடுவேர், சைவ ஆகமப் படி அமைந்துள்ளதாலும் கடற்கரையில் எழுந்தருளி யிருப்பதாலும் மணக்குளயும் இந்த வகையில் சேர்த்துக் கொள்ளலாம்.

ஐரோப்பியர் ஆட்சியில் தங்களது சமயத்தைப் பரப்ப வேண்டும் என்ற தீவிர வெறியுடன் செயல்பட்டனர். கிறித்துவப் பாதிரியார்கள் மதம்மாற்ற நடவடிக்கைகளில் தீவிரமாக ஈடுபட்டனர். மணக்குள விநாயகர் ஆலயமும் அவர்களது மதவெறித் தாக்குதல்களுக்கு உட்பட்ட போதிலும் அன்னியரின் முயற்சிகளை முறியடித்து ஐரோப் பியர்களையும் தன்னை மதிக்கச் செய்த பெருமை விநாயக ருக்கு உரியது: இது தொடர்பாகச் சில சம்பவங்கள் கூறப்படுகின்றன.

புதுச்சேரி பகுதியில் பிரெஞ்சு அதிகாரியாக விளங்கிய பிரான்சுவர் மர்த்தேன் என்பவர் இக்கோயிலில் அதிக அளவில் விழாக்களும், வழிபாடுகளும் நிகழ்வதால் ஏற் படும் ஆரவாரத்தை விரும்பவில்லை. இதனர்ல் இவ்வால யத்தில் விழாக்கள் நடைபெறுவதற்குத் தடை விதித் தான். மணக்குள விநாயகர் மீது பெரும் பற்று கொண் டிருந்த இப்பகுதியைச் சேர்ந்த நெசவாளர்கள், கைவினை

யாளர்கள் ஆகியோர் புதுச்சேரியைவிட்டு வெளியேறினர். இதனால் தங்களது வர்த்தகம் பெரிதும் பாதிக்கப்படும் என்று அஞ்சிய பிரெஞ்சு அரசினர் இந்த உத்தரவை விலக்கிக் கொண்டனர். இதன் பின் கோயிலில் வழக்கம் போல் வழிபாடுகள் நடைபெறத் துவங்கின.

பதினெட்டாம் நூற்றாண்டில் கவர்னராக இருந்த ஒரு பிரெஞ்சு அதிகாரி இவரைக் கடலில் தூக்கி எறியுமாறு உத்தரவிட்டாராம். விநாயகர் ஊர் மக்களின் கனவில் தோன்றிக் கடலில் தான் உள்ள இடத்தை உணர்த்தினாராம். மறுநாள் கோயிலில் அதே விநாயகருக்கு வழிபாடுகள் நடக்கத் துவங்கின. விநாயகரின் மகிமையையுணர்ந்த ஐரோப்பியரும் இவரை வழிபடத் துவங்கினர். இதனால் இவருக்கு 'வெள்ளைக்காரப் பிள்ளையார்' என்ற செல்லப் பெயர் உண்டாயிற்று. டூப்ளே கவர்னராக இருந்தபோதும், அவருக்குப் பின்னரும் மணக்குள விநாயகருக்கு எந்தத் தொந்தரவும் ஏற்படவில்லை. இன்றும் ஐரோப்பியர் இக்கோயில் வழியே செல்லும்போது தங்களது தொப்பிகளைக் கழற்றி மரியாதை செலுத்துவது உண்டு.

புதுவையுடன் தொடர்புடைய பல புலவர்கள் மணக்குள விநாயகரைத் துதித்துப் பாடல்களைப் புனைந்துள்ளனர். மகாகவி சுப்பிரமணிய பாரதி இவ்விநாயகர் மீது பெரும் ஈடுபாடு உடையவர். அவர் புனைந்துள்ள 'விநாயக நான்மணி மாலை' மணக்குள விநாயகருக்கு அணிவிக்கப்பட்ட ஒளிமிக்க ஆரமாகும். இந்நூலில் வெண்பா, கலித்துறை, விருத்தம், அகவல் ஆகிய நான்கு செய்யுள் வடிவங்களிலமைந்துள்ள பத்து தொகுதிகளையுடைய நாற்பது செய்யுட்கள் இடம் பெற்றுள்ளன. இச்செய்யுட் தொகுதியில் விநாயகரைப் போற்றிய பின் அவரை வழிபடுவதால் ஏற்படும் நன்மைகளைப் பட்டியல் போலத் தருகிறார். பாரதியார்,

கற்பக விநாயகக் கடவுளே போற்றி
சிற்பர மோனத் தேவன் வாழ்க!
வாரண முகத்தான் மலர்த்தாள் வெல்க!
ஆரண முகத்தான் அருட்பாதம் வெல்க!
படைப்புக் கிறையவன், பண்ணவர் நாயகன்
இந்திர குரு எனது இதயத் தொளிர்வான்
சந்திரமவுலித் தலைவன் மைந்தன்
கணபதி தாளைக் கருத்திடை வைப்போம்
குணமதிற் பலவாம்! கூறக்கேளீர்
உட்செவி திறக்கும்; அகக்கண் ஒளிதரும்
அக்கினி தோன்றும், ஆண்மை வலிவுறும்
திக்கெலாம் வென்று ஜெயக்கொடி நாட்டலாம்
கட்செவி தன்னைக் கையிலே யெடுக்கலாம்
விடத்தையும் நோவையும் வெம்பகையதனையும்
துச்சமென் றெண்ணித் துயரிலா திங்கு
நிச்சலும் வாழ்ந்து நிலைபெற்றோங்கலாம்
அச்சந்தீரும் அமுதம் விளையும்
வித்தை வளரும்; வேள்வி ஓங்கும்
அமரத்தன்மை எய்தலும்
இங்கு நாம் பெறலாம்; இஃதுணர்வீரே''

இப் பெருமானிடம் சில வரங்களைப் பாரதியார் வேண்டுகிறார்

''மனதிற் சனலமில்லாமல் மதியில் இருளே தோன்றாமல்
நினைக்கும் பொழுது நின்மவுன நிலைவந்திட நீ செயல் வேண்டும்
தனக்குஞ் செல்வம் நூறு வயது இவையும் தர நீ கடவாயே''

''...பயனதில் நான்காம் அறம் பொருள், இன்பம் வீடெனு முறையே தன்னையாளுஞ் சமர்த்தெனக் கருள்வாய் மணக்குள விநாயகா.'' இப்பாடல் தொகுதியின் இறுதியில் பாரதியார் விநாயகரை வாழ்த்தித் துதிக்கிறார்.

"விதியே வாழி! விநாயகா வாழி! பதியே வாழி!
பரமா வாழி!
சிதைவினை நீக்கும் தெய்வமே போற்றி! புதுவினை
காட்டும் புண்ணியனே போற்றி
மதியினை வளர்க்கும் மன்னே பேர்ற்றி!
இச்சையும் கிரியையும் ஞானமும் என்றாக்கும்
மூல சக்தியின் முதல்வா போற்றி!
பிறைமதி சூடிய பெருமான் வாழி
நிறைவினைச் சேர்க்கும் நிர்மலன் வாழி!
காலம் மூன்றையும் கடந்தான் வாழி!
...வெற்றி தருஞ்சுடர் விநாயகர் தாளிணை வாழியே!

(புதுவை மகாவித்துவான் பெரியசர்மிப் பிள்ளை (1880)

புதுவை கலவை சுப்பராயச் செட்டியார் தருமகல்விச் சாலை தமிழ் ஆசிரியர்களான மாணிக்கம் பிள்ளை, ரத்தினம் பிள்ளை ஆகியோர், பாரதியாரால் போற்றப் பட்ட சித்தானந்த சுவாமி, சீவன்முக்தி பெற்ற சீலரான அக்கா சுவாமி ஆகிய பெரும் புலவர்கள் மணக்குள விநாயகர் மீது துதிப் பாடல்களை இயற்றியுள்ளனர். சென்ற நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்த புதுவை நாராயணசாமி முதலியார் என்ற பெரும் புலவர் திருக்குறள் மூலத்தைப் பதிப்பித்தார். யர்ப்பிலக்கணத் தேர்ச்சி பெற்றவுடன் மூதலில் மணக்குள விநாயகரைப் பாடிய பின்னரே இப்பெருமான் பிற நூல்களைச் செய்யுளில் யாத்தார். பெரும் ஞர்னியான அரவிந்தர், வ. வே சு. அய்யர் போன்ற தேசபக்தர்களும், தருபுர ஆதீனகர்த்தார், திருவாவடுதுறை மடாதிபதி, காஞ்சி சங்கராச்சார்ய சுவாமிகள் போன்ற சமய ஞானிகளும் மணக்குள விநாயகர் கோயிலுக்கு வருகை தந்து அவரை வழிபட்டுள்ளனர்.

நகரின் மையப்பகுதியில் கடற்கரையருகே மணக்குள விநாயகரின் திருக்கோயில் புதிதாகத் திருப்பணி செய்யப்

பெற்ற பொலிவுடன் சிறப்பாகக் காட்சியளிக்கிறது. துவஜஸ்தம்பம் பொன்முலாம் பூசிய தகடுகளுடன் ஜொலிக்கிறது. ஆலயத்தின் முன் மண்டபம் கருங்கற்களால் கட்டப்பட்டு வண்ண ஓவியங்களுடன் எழிலாகத் தோற்றமளிக்கிறது. பிரகாரத் தென்புறச் சுவரில் விநாயகரின் பல்வேறு திருவுருவங்கள் சுதைச் சிற்ப வடிவில் அழகோவியங்களாகத் திகழ்கின்றன. பால கணபதி, தருண கணபதி, பக்தி கணபதி, வீரசக்தி கணபதி, துவஜ கணபதி, பிங்கள கணபதி, உஜ்ஜிஷ்ட கணபதி, விக்கினராஜ கணபதி, க்ஷிப்ர கணபதி, ஹேரம்ப கணபதி, ஊர்த்துவ கணபதி, மூஷிக வாகன கணபதி, சயன கணபதி, விஜய கணபதி, த்விமுக கணபதி, திரிமுக கணபதி, சதுர்முக கணபதி, பஞ்சமுக கணபதி, ஷண்முக சுபதி, டுண்டி கணபதி, மயூரேச கணபதி, விஷ்ணுராஜ கணபதி, சங்கடஹர கணபதி, வல்லப கணபதி, யோக கணபதி, வலம்புரி விநாயகர் ஆகிய உருவங்கள் இங்ஙனம் சிற்ப வடிவிலும் ஓவிய வடிவிலும் இடம் பெற்றுள்ளன.

சிவபார்வதி ஈசனைப் பூசித்தல், விநாயகர் அரனாரை வழிபடுதல், முருகன் விநாயகரைத் துதித்தல், புத்திரர்களுடன் பார்வதி, இராவணன் சிவபிரானைப் பூசித்தல், மணக்குள விநாயகர் சித்திபுத்தி ஆகிய இரு தேவியரை விநாயகர், திருமணம் புரிதல் ஆகிய காட்சிகளை வண்ண ஓவியங்கள் வடிவில் கண்டுகளிக்கலாம். ஆறுமுகனுக்கு கந்த அறுபடை வீடுகளை விளக்கும் காட்சிகளையும் எழில்மிக்க வண்ண ஓவியங்களாகத் தீட்டியுள்ளனர். வினாயகப் பெருமானுக்குச் சிறப்பான பள்ளியறை உள்ளது. பளிங்குக்கற்கள், கண்ணாடி ஆகியவை பதிக்கப் பெற்ற அறையில் உற்சவமூர்த்திகள் வைக்கப்பட்டுள்ளனர். இவற்றுள் சித்திபுத்தி விநாயகர், நர்த்தன விநாயகர், லட்சுமி கணபதி ஆகிய மூர்த்திகள் குறிப்பிடத் தக்கவர்கள். சுற்றுப் பிரகாரத்தில் பாலவிநாயகர், பால

சுப்பிரமணியர், சண்டேஸ்வரர் ஆகியோர் தனி சந்நிதிகளில் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளனர். 1975ஆம் ஆண்டில் இராஜகோபுரமுள்ள வீதியில் அழகிய மண்டபம் ஒன்று இக்கோயில் அர்ச்சகரின் முயற்சியால் கட்டப்பட்டது. இதனை அப்போது உபராஷ்டிர பதியாக இருந்த பி. டி. ஜெட்டி அவர்கள் திறந்து வைத்தார். 1968ஆம் ஆண்டு தேவஸ்தான நிர்வாகக் குழுவின் தலைவரான பிரபல வழக்கறிஞர் டி. இராமச் சந்திர ரெட்டியார் அவர்கள் ஒரு ஸ்படிக லிங்கத்தைக் கோயிலில் ஸ்தாபிதம் செய்தார். தினமும் காலை பத்து மணியளவில் அதற்கு அபிஷேக ஆராதனைகள் நடைபெறுகின்றன.

இக்கோயிலில் பிரமோதூத ஆண்டு வைகாசி மாதம் 24ஆம் நாளன்று (6-6-1930) அதிகாலையில் முதல் முதலாகக் குடமுழுக்கு நடைபெற்றது. அடுத்து மன்மத ஆண்டு தை மாதம் 21ஆம் நாள் (3-2-1956) காலையில் கும்பாபிஷேகம் நிறைவேறியது. பராபவ ஆண்டு சித்திரை மாதம் 14ஆம் தேதியன்று (27-4-1966) காஞ்சி சங்கராச்சார்ய ஸ்வாமிகள் முன்னிலையில் கும்பாபிஷேகம் நடைபெற்றது. 1983ஆம் ஆண்டு ஜூலை மாதம் முதல் நாளன்று நான்காவது முறையாகக் குடமுழுக்கு நிறைவேறியது. நிருத்த கணபதியின் சந்நிதி 27-1-1966 அன்று திறக்கப்பட்டது. 15- '-1959 அன்று அர்த்தஜாமக் கட்டளை ஒன்று ஏற்படுத்தப்பட்டது. தற்போது கோயிலில் காலசந்தி, உச்சிகாலம், மாலைசந்தி, அர்த்த ஜாமம் ஆகிய நான்கு காலங்களில் வழிபாடுகள் நடைபெறுகின்றன. சித்திரை மாதத்தில் திருவிழா வெகு விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது.

பிரான்ஸ், பினாங்கு, சிங்கப்பூர், மலேஷியா, இலங்கை போன்ற வெளிநாடுகளிலிருந்து பக்தர்கள் இக் கோயிலுக்கு வருகை தந்து வழிபட்டுச் செல்கின்றனர்.

ஜாதி, இனம், மொழி, பொருளாதார நிலை ஆகிய வேறு பாடுகளைக் கடந்து அனைத்து மக்களும் விரும்பிப் போற்றும் வரப்பிரசாதியாக மணக்குள விநாயகர் விளங்கு கிறார்.

''வாழ்க புதுவை மணக்குடத்து வள்ளல் பாத மணிமலரே!
ஆழ்க உள்ளம் சலனமிலாது! அகண்ட வெளிக்கண்ட
அன்பினையே
சூழ்க! துயர்கள் தொலைந்திடுக! தொலையா இன்பம்
விளைந்திடுக!
வீழ்க கலியின் வலியெல்லாம்! கிருதயுகந்தான்
மேவுகவே,'

(''மகாகவி சுப்பிரமணிய பாரதியார்
—விநாயகர் நான்மணி மாலை'')

—★—

